கோஹினூர் நாவல் பிரசுரம்—எண். 1. (1—11—33.)

# கனகலக்ஷ்மி

அல்லது

# காதலின் வெற்றி.

உங்கள் அதிர்ஷ்டத்தை
பரீக்ஷியுங்கள்.

இஃது
ஸ்ரீமான்
பூவை. ராஜகோட்டியப்பன்
அவர்கள் எழுதியது

ரொக்கப் பரிசு!!!

Rs. 500

கோஹினூர் பிரசுராலயம்,
நிர். 136 மேல ரதவீதி,
விருதுநகர்.

கோஹினூர் நாவல் பிரசுரம்—எண். 1.



ரொக்கப் பரிசு ரூ. 500.

# கனகலக்ஷ்மி
## அல்லது
# காதலின் வெற்றி.



இஃது
திருநெல்வேலி ஜில்லா, ஊர்க்காடு ஸம்ஸ்தான வித்துவானும்,
பொதியப் பூங்கோதை, அறிவுவிளக்கக் கதைப்பூங்கொத்து, ரவிவர்மர்
சரிதை, விஜய கோகிலம், சங்கநூற் சிறுகதைகள் முதலிய
பல் நூல்களை எழுதியவரும், விருதுநகர் முனிசிபல்
ஹைஸ்கூல் தலைமைத் தமிழாசிரியருமாகிய,
ராஜவரகவி
ஸ்ரீமான்
பூவை. ராஜகோட்டியப்ப பிள்ளை அவர்களால்
இயற்றப்பெற்றது.









கோஹினூர் பிரசுராலயம்,
விருதுநகர்.

பதிப்புரிமை]	1933.	[விலை அணா 8.

# முகவுரை.

வாழிய செந்தமிழ்; வாழ்க நற்றமிழ்;
வாழிய பாரத மணித்திரு நாடு;

புதுவது புனைதலாகிய நவீனங்கள் பலவற்றைப் பேரறிஞர்பலர் எழுதித்தமிழணங்கை அலங்கரிக்கின்றனர். அத்துறையிலே "கனகலக்ஷ்மி" என்னும் இச் சிறிய நூலும் தமிழன்னையின் திருவடிகளில் தூவும் ஒரு சிறு மலரென்க.

இதன்கண் பழந்தமிழ்நாட்டின் மணமுறையும், தற்காலத் தமிழ்நாட்டின் சீர்கேடான ஆசாரங்களும் நன்கெடுத்துக் காட்டப்பட்டுள்ளன. உயர்ந்த நீதிகளும் ஆங்காங்கு வற்புறுத்தப் பெற்றிருக்கின்றன.

வாசகர்க்குப் படிக்கப்படிக்க இனிமையும், உயர்ந்த நோக்கங்களும், பரந்த சிந்தையும், விரிந்த அறிவும், சிறந்த பாஷாபிமானமும், அளிக்கும்வண்ணம் இந்நூல் மிகவும் கவனித்து எழுதப்பட்டிருக்கிறது.

ஆதலால் தமிழுலகம் இந்நூலைப்பெரிதும் ஆதரித்துப் போற்றுமென்று எதிர்பார்க்கின்றேன்.

இங்ஙனம்,

நூலாசிரியன்.

# உள்ளுறை.



# கனகலக்ஷ்மி



## அத்தியாயம் 1

### காதல் முளைத்தலும், கலகங் கிளைத்தலும்.

**பூமி**தேவியின் உடம்பிலே, கொடிய வேனிலின் வெப்பத்தைத் தணிப்பதற்காக, ஆகாயமாகிய கணவன் பனிநீர் தெளித்தாற் போலச் சாரல் பெய்யத் தொடங்கிற்று. கோடைகாலத்தின் கொடுமையால் எரிந்து சாம்பாராய் நிற்கும் மரங்கள், சாரல் பெய்தவுடனே கணவரது வருகையை நோக்கி மகிழ்ச்சி கொண்டாடும் கற்புடைப் பெண்களைப் போலக் கொப்புங் குழையுமாய்த் தழைக்கத் தொடங்கின. குடியானவர்கள் வயல்களை உழுது, கட்டி உடைத்துப் புழுதியாக்கிப் பண் படுத்தினர். நாற்றுக் கால்களிற் சில இடங்களில் குட்டைகளில் தேங்கிக் கிடக்கும் சிறுகிய பாசி நீரைப் பெருக்கி வளர்க்கப்பெற்ற செந்நெற் பயிர்கள் பச்சைப் பசேலென்று வளர்ந்திருக்கின்றன.

"கல்யாணபுரம்" என்பது செந்தமிழ்த் தெய்வம் சாநித்தியமாய்க் காட்சியளிக்கும் திருநெல்வேலி ஜில்லாவிலே நடுநாயகமாய் விளங்குஞ் சிறந்த நகரம். இந்நகரத்திற்கு வடக்கு எல்லையாய் அமைந்தது, 'தாமிரவாணி' என்னும் ஜீவ நதி. கல்யாணபுரத்துக்கும் இந்நதிக்கும் இடையிலே

அழகான பெரிய கால்வாய் ஓடிக்கொண்டிருக்கிறது. இந்தக் கால்வாய் சுமார் 50 அடி அகலமும் மிக்க ஆழமும் உடையது. கால்வாயின் வடக்குக் கரை கற்களடுக்கி மண்சுமந்து அகலமாகப் போடப்பட்டுள்ளது. கால்வாய்க்கும் ஆற்றுக்கும் நடுவே சிறியவும் பெரியவுமான வயல்கள் மிகுதியாயுண்டு. கால்வாயின் தெற்குக் கரை, வரிசையாகக் கட்டப்பட்டுள்ள அழகான மாடி வீடுகளின் பின்புறமாக அமைந்திருந்தது. ஒவ்வொரு வீடும் மாடமாளிகையாகக் காணப்படுவதால் செல்வத்திற் சிறந்ததொரு திரு நகரம் கலியாணபுரம் என்பது தெள்ளிதின் விளங்கா நிற்கும். ஒவ்வொரு வீட்டின் பின் புறத்திலும் நானு வகை விருக்ஷ ஜாதிகளும், புஷ்பச் செடிகளும் நிறைந்த பூங்காவனங்கள் மிளிரும். இப் பூந்தோட்டங்கள் கால்வாயின் ஓரமாக அமைந்திருப்பதால் அவைகட்குத் தண்ணீர்த்தட்டு என்பதே கிடையாது. ஒவ்வொரு தோட்டமும் கால்வாயோரமாக முடியும் இடத்தில், படித்துறைகள் ஒழுங்காகக் கட்டப்பட்டிருந்தன.

ஒரே தெருவாகக் கட்டப்பட்டுள்ள வரிசையான வீடுகள் பத்துப் பதினைந்துக்கு இடையிடையே, சிறு சிறு சந்துகளும், இச்சந்துகள் கால்வாயோடு வந்து சேரும் இடங்களிற் கால்வாயைக் கடக்கும் பாலங்களும் உண்டு. காலை மாலை வேளைகளில் பாலங்களின் கைபிடி சுவர்களிலிருந்து சிறுவர்கள் தடார் தடாரென்று தண்ணீரிற் குதித்து நீந்திக் கொக்கரிப்பது வழக்கம். மாலை வேளைகளில் இக்கைபிடிச் சுவர்கள் காமுகர்க்குப் பெரு விருந்தாகவும் சல்லாப மேடையாகவும் விளங்குவது உண்டு. காளையர்கள் இச்சுவர்களின் மீது மந்திகளைப்போலக் குந்தி யிருந்து, படித்துறைகளில் நீராடும் மங்கையரையும், செப்புக் குடங்களை இடுப்பில் ஏந்தி செல்லும் சிறுமிகளையும் கண்ணடிசதுக் குதூகலிப்பார்கள்.

இரவு மணி ஒன்பது அல்லது அதற்குச் சிறிது அதிகமாக இருக்கலாம். நீர்த்துறைகளிலும், இக்கரை அக்கரைகளிலும் நிசப்தம் குடிகொண்டிருந்தது. சாரல் சிறு சிறு திவலையாகத் தூறிக்கொண்டிருந்தபடியால் குறும்பு செய்யும்

சிறுவரும் கண்ணோட்டம் செய்யும் காளையரும் மாலைக்கால முகிலை காணப்படவில்லை, சந்தனச் சோலையிற் படிந்து, நறுமணம் சுமந்து, கம கம வென்று கமழும் தென்றற் காற்று, கூடிய காதலர்க்குப் பேரின்பமும், கூடாக் காமுகர்க்குப் பெருத்த வேதனையையும் அளித்துச் சிலுசிலு வென்று வீசிக்கொண்டிருந்தது.

முன்னே நாம் கூறிய பாலங்களின் ஒன்றின் மேல் ஆடவன் ஒருவன் அந்நேரத்தில் தன்னந்தனியாயிருந்து மெல்லிய குரலில் ஏதேதோ பாடிக்கொண்டிருந்தான் இவ் ஆண் மகனுக்கு வயது இருபத்தொன்று இருக்கலாம். சிவந்த மேனியன். தோய்த்து உலர்ந்த தூய ஆடையினன். திருமகள் கொலு வீற்றிருக்கும் திருமுக விலாசம் படைத்தவன் வசீகரமான தோற்றமும், கம்பீரமான நடையும், மிருதுவான குரலும் வாய்ந்தவன். இத்தகைய ஆணிளஞ் சிங்கம் இந்நேரதில் இங்கே உட்கார்ந்திருக்கக் காரணமென்ன? வானத்தில் மூன்றும் பிறை மதி மறைந்து ஐந்தாறு நாழிகைகள் கழிந்தன. வெண்மையும் கருமையான மேகங்கள் ஆகாயத்தில் தவழ்ந்து கொண்டிருந்தன. நக்ஷத்திரங்களின் மீது மேகங்கள் படிந்திருந்தும், அவை மினுக்கு மினுக்கு என்னும் தோற்றத்தோடு திரை மறைவிலே யிருந்து பார்த்துக் கொண்டிருக்கும் கன்னிப் பெண்களை ஒத்து விளங்கின. இவ் ஆடவன் புதிதாகப் பாக்கள் புனையும் பாவலனாக இருக்கலாமோ, எனின்—இருக்கலாம். ஏனென்றால் புலவர்களும் நூலாசிரியர்களும் தாம் எழுதும் கவிகட்கும், காவியங்கட்கும், புத்தகங்கட்கும் வேண்டிய ஆழ்ந்த கருத்துக்களைச் சிந்திப்பதற்கு ஏகாந்தமான இடங்களையே நாடுவர் மெய்ம மறந்து நேரம் போனது கூடத் தெரியாமல் பித்துப் பிடித்தவர்களைப்போல அவர்கள் உட்கார்ந்திருப்பது வழக்கம்.

பார்ப்பவர் கண்ணுக்கு இவர்கள் பைத்தியக்காரர்களாகத்தோற்றினும், உண்மையில் இவர்களுடைய மனம் கண்ணுக்கும் சிந்தைக்கும் எட்டாத உலகங்களிலே உலாவிக்

கொண்டிருக்கும். நம் நண்பனாகிய மேலே குறிப்பிட்ட ஆடவன், மெய்யாய் ஒரு புலவனே! புதிய முறையிலே சிறந்த விஷயங்களை வெளியிடுவதில் மிகுந்த ஆத்திரமுடையவன். இப்போது அவன் தான் புதிதாக வரைந்து கொண்டிருக்கும் 'நவநாகரீகக்கோலம்' என்னும் பெரிய நாடகத்திற்காகக் கருத்துக்களைச் சிந்தித்தவாறே அந்தப் பாலத்தின் மேல் உட்கார்ந்திருந்தான். இடையிடையே வானத்தில் மின்னிக்கொண்டிருப்பதையும் அதனால் சீக்கிரத்தில் மழை வரக்கூடுமே என்பதையும் அவன் கவனிக்கவில்லை. ஆழ்ந்த சிந்தனையில் அமர்ந்திருந்தான் இந்தச் சமயத்திற் பாம்பு சீறி விழுந்தாலும், பின்புறமிருந்து யாரேனும் அடித்தாலும், இவனது தவசு கலைவதாகத் தோற்றவில்லை. இப்படிப்பட்ட நேரத்தில் திடீரென்று ஏற்பட்ட ஓர் இன்னொலியால் அவனுடைய தபசு கலைக்கப்பட்டது. தண்ணீருக்குள்ளிருந்து மெல்லிய குரல் ஒன்று கேட்டது. ஆபத்தை அறிவித்து உதவி வேண்டுவது போல அக்குரல் தென்படுகின்றது. 'ஐயோ! தெய்வமே! ஈசுவரி! கோமதித் தாயே! கல்யாணி! மங்களாம்பிகை!.........தண்ணீர் நிலை கொள்ள வில்லையே!.......'

ஆடவன் துணுக்குற்றுக் கீழே நோக்கினான் தன் காலிருந்த இடத்திற்குக் கீழே வட திசையில் தண்ணீருக்குள்ளிருந்து பெண் குரல் உண்டாவதாகப் புலப்பட்டது. குபீரென்று தண்ணீருக்குள் பாய்ந்தான். யாரோ பெண்ணொருத்தி பாலத்தின் அடித் தூண்களில் ஒன்றைப் பற்றிக்கொண்டு தவிப்பதை அறிந்து, உடனே அவளைத் தூக்கி கரைக்கு கொண்டுவந்து சேர்த்தான். அந்தப்பெண் சரியான யுவதி. யாரோ ஆடவர் தன்னைத் தூக்கி கொணரும்படி நேர்ந்ததே என்ற அச்சத்தோடும், தப்பிப் பிழைத்தோமே என்ற ஆறுதலோடும், மிகவும் நாணத்துடன் அலங்கோலமாய்க் கிடந்த ஆடைகளைப் பிழிந்த வண்ணம் உடம்பிலே சுற்றிக்கொண்டு தலை குனிந்து நின்றாள். ஆண் மகன் சற்றுக் கீழே குனிந்து அம்மங்கையின் முகத்தை உற்று நோக்கினான். உடனே இராஜம்மா! இந்நேரத்திலே

வாய்க்காலுக்கு ஏன் தனியாக வந்தாய்? பக்குவதியான பெண்கள் நம் சாதியிலே வெளியே வருவது கூடக் கிடையாது. நீ இப்படி இராத்திரி நேரத்தில் வெளியேறி வரலாமா தண்ணீரிலே விழுந்து தவிக்கும்படி நேரிடக் காரணமென்ன? என்று கேட்டுக் கொண்டிருக்கையில் மடமங்கை, ஒரு முறை ஆடவனை ஏறிட்டுப் பார்த்து விட்டு 'என்ன? கனகு அத்தானு! நல்லது நீங்களில்லாவிட்டால், நான் இவ்வளவு நேரத்திற்குள் நாலைந்து பாலங்கள் தாண்டி நீரில் மிதந்து போயிருப்பேன். அல்லது பாலக் கல்லிலே எங்கேனும் மோதித் தவிடு பொடியாயிருப்பேன். யாரைப் பிடித்த நல்ல வேளையோ, தங்களால் உயிர் தப்பினேன். வேற்று ஆடவர் கையினால் தொட்டு இச்சரீரம் எடுக்கும்படி ஏற்பட்டதோ என்று எண்ணி என் உயிரைக் கையிலேந்திக் கொண்டிருந்தேன்.

'மானம் அழிந்தபின் வாழாமை முன் இனிதே' என்பது நமது பெரியார் வாக்கு அல்லவா? இறைவன் தங்களை இவ்வேளையில் இங்கே வந்து உட்கார்ந்திருக்கும்படி இசைய வைத்த கருணையை என்னென்று துதிப்பேன்! ஜகதீசா!

அத்தான் தங்கட்கு உரிமையான இந்த உடல் வேறொருவர் கையிற் சிக்கும்படி நேரிடுவது இந்தப் பிறவியிலே யில்லை என்று இதுவரை துணிவாக எண்ணியிருந்தேன்......என்று கூறியபடியே 'கனகசபாபதி' என்னும் நம் ஆணிளந்தோன்றலை நிமிர்ந்து பார்த்துப் புலு புலு வெனக் கண்ணீருகுத்தாள். கனகசபாபதி, தன் முன் நின்ற மின்னற்கொடி உன்னற்கரிய துயருடன் மழை போலக் கண்ணீர் சொரிவதைக் காணச் சகியாமல், தன் மார்போடு மார்பாய் அணைத்து தன் கரங்களால் அவள் கண்களைத் துடைத்து 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்று மொழிந்தான். காதலர் இருவரது கண்ணிணைகளும் சற்று நேரம் ஒன்றையொன்று உறவாடின சில நிமிஷங்கள் இருவரும் மௌனமாகத் தலை குனிந்தவாறு நின்றனர். அப்பால் ஒன்றும் பேசத் தோன்றவில்லை. இருவருடைய மனத்திலும் திகைப்பு மேலிட்டது.

கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல [திருக்குறள்

இதே வேளையில் அவர்களுக்கு எதிர்க் கரையில் நின்று யாரோ 'ராஜம்! ராஜம்!" என அழைக்குஞ் சத்தம் கேட்டது. சத்தம் கேட்டது தான் தாமதம். இராஜம்மாள் சடக்கெனத் திரும்பி மடமடவென்று நடந்துவிட்டாள். கனகசபாபதி ஏது! காமாட்சியாச்சி சத்தம் போலிருக்கிறதே! என்று எண்ணிக்கொண்டே வேறொரு பக்கமாய்த் திரும்பிப் போய் விட்டான். இராஜம்மாள் படித்துறையில்நின்றுகொண்டிருந்த காமாட்சியாச்சியினிடம் போய்ச்சேர்ந்தாள்.

காமாட்சியாச்சி—'ராஜம்மா! எங்கிருந்து வருகிறாய்? கூடப் பேசிக்கொண்டிருந்தது யார்? மேலைத்தெரு கனகு தானே? நல்ல சங்கர்ப்பத்திலே கூப்பிட்டு விட்டேன் என்று கோபங்கொள்ளாதே அம்மா! காலம் இப்படிக் கெட்டுப் போச்சு,' என்று வெடு வெடுத்த குரலில்பேசினாள். இதனைக் கேட்கப் பொறுக்காத இராஜலக்ஷ்மி காதுகளைப் பொத்திக் கொண்டு, 'சிவ, சிவா! சிறிது நேரத்திற்குள் உயிர் போகத் தெரிந்தேன். நல்ல காலம்! கனகுத்தான் வந்து காப்பாற்றினான் அந்த உதவிக்கா இந்தப் பழி? என்றாள்.

இதைக் கேட்டுக் காமாட்சியாச்சி, சரிதான் அம்மா! யாரைச் சொல்லவும் குற்றம் இல்லை இந்தக் காலத்துச் சிறுக்கிகளுக்குச் சாக்குப் போக்குச் சொல்லியா கொடுக்க வேண்டும்? உன்னை இங்கே இருக்கச் சொல்லிவிட்டு, வீட்டிற்குட் போய் வருவதற்குள் உனக்கு என்னம்மா ஆபத்து வந்தது? மிஞ்சினால் பத்து நிமிஷம் இருக்கும் அதற்குள் இவ்வளவு கூத்தா? காதலனோடு என்ன பேசிக்கொண்டிருந்தாய்? உள்ளதை ஒளியாமற் சொல்லவா போகிறாய் என்றாள் 'இராஜலக்ஷ்மி, சற்று கோபத்துடன், இப்படி அநியாயமாய் ஒருவர்மீது பழி சுமத்த வேண்டாம். நடந்த காரியத்தை ஒளியாமல் உன்னிடம் சொல்லுகிறேன், நீ என்னை இங்கே

இருக்கச் செய்து வீட்டுக்குப் போன பிறகு, புதுத்தண்ணீர் வாய்க்காலில் வந்திருக்கிறதே, குளிப்போம் என்ற ஆசையுடன் தண்ணீரில் இறங்கினேன். தண்ணீர் மேலும் மேலும் வந்து கொண்டிருந்தபடியால், இழுப்பு அதிகமாய் இருந்தது. ஆகவே இழுப்பு என்னைச் சுருட்டி ஈர்த்துக்கொண்டே போய்விட்டது. தண்ணீருக்கு எதிர்த்து என்னால் நீந்த முடியவில்லை. நீந்தவும் எனக்கு அதிகம் தெரியாது.

ஆகையால் நீர் போகும் வழியே மிதந்து கொண்டே போனேன். அடுத்துள்ள பாலம் வரை போனேன் பாலக் கல்லைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டேன். காலை ஊன்றிப் பார்த்தேன், தண்ணீர் நிலை கொள்ளவில்லை. என்ன செய்வேன். அப்படியே மிதந்து கொண்டு, கூக்குரல் போட்டேன் எங்கிருந்தோ கனகத்தானேடிவந்து நீரிலே குதித்து என்னைக் காப்பாற்றினன். இதுவே நடந்த விஷயம் என்று சிறிதும் ஒளியாமற் சொன்னாள். ஆனால் காமாட்சி நல்லாயிருக்கு கதை! 'நொண்டிக் கழுதைக்குச் சறுக்கினது சாக்கு' நீ யென்ன செய்வாய். அந்தப் பயல் என்ன லேசான பயலா? உன்னை இப்படி வரும்படி மந்திரம் போட்டிருக்கிறான். நீயும் அவனது மயக்க வலையிலே அகப்பட்டாய்.

நான் வந்து விட்டேனே என்பதை யறிந்து இப்படி ஒரு கதை கட்டிக்கொடுத்து என்னிடம் ஒப்பிக்கச் சொல்லியிருக்கிறானக்கும்! சரி சரி! உன் தமையன் டாக்டர் பரீக்ஷை தேறிப் பட்டணத்திலிருந்து இரண்டு நாட்களிலே வந்துவிடுவான். தகப்பனார் கொழும்பிலே யிருந்து வர ஐந்தாறு நாட்கள் தான் இருக்கின்றன. பெரிய பெரிய இடங்களிலிருந்து உனக்கு மாப்பிள்ளை வீட்டுக்காரர்கள் வருவார்கள்.

இப்பொழுது உன் தகப்பனார் இருக்கிற பெருமையான நிலைமையை நீ சீரழித்து விடாதே. இந்த நடத்தைகள் கேவலமானவை நன்றாய்ப் படித்திருக்கிறாய். புத்திசாலி என்று எண்ணியிருந்தேன். தீட்டத் தீட்டச் சாயம் வெளுக்கிறது. இத்தோடேயாவது, இந்த அசட்டுப் புத்தியை விட்டொ

ழித்துப் பெருமையாயிருக்கிற வழியைப் பாரு. இனிப்பத்து நாளைக்கேனும் அடங்கி, ஒடுங்கியிரு. ஒருவன் கையிலே உன்னை பிடித்துக் கொடுத்து விட்டால், உனக்குக் கொழுப்பும் அடங்கி விடும். எங்கட்கும் பாரம் தொலைந்து விடும். அப்புறம் அவன் பாடு உன் பாடு. உன் காலை முறித்துக் கொட்டத்தை யடக்கி வீட்டிற்குள்ளே போட்டு விடுவான். இவ்வளவு சொல்லியும் உனக்கு மூளை யில்லாமற் போனால் உன் இஷ்டம் போலச் செய். அந்தப் போக்கிரிப் பயல் கனருக்காவது புத்தி யிருக்கிறதா என்றால், அதனையும் காணோம். என்னடா? பெரிய இடத்துப் பெண்ணுயிற்றே சொட்டுச் சொல் ஒரு தடவை விழுந்து விட்டால், விழுந்த சொல்லைப் பிறகு எடுக்க முடியுமா? இவன் படிச்சுருக்கானே என்ன பிரயோஜனம்? நீ சிறு பெண் இனி அந்தச் சூதுக் காரப் பயல் மாயையில் அகப்பட்டு விழிக்காதே! தெரிகிறதா இவ்வளவு தான் என்றுற் சொல்ல முடியும், என்று கூறி முடித்தாள்.

பிறகு கிழவியும் குமரியும் மௌனமாகவே தண்ணீரில் இறங்கி குடத்தில் தண்ணீர் முகந்தார்கள். இராஜலக்ஷ்மி செப்புக் குடத்தை எடுத்து இடுப்பில் வைத்துக் கொண்டு முன்னே நடந்து சென்றாள். காமாட்சி என்னென்னவோ முணு முணுத்துக்கொண்டே வீட்டுக்குச் சென்றாள். இராஜலக்ஷ்மி தாழ்வாரத்திலே உட்கார்ந்திருந்த தன் மாற்றாந்தாயை பார்க்காமலே சமயலறைக்குள் நுழைந்து செப்புக்குடத்தை கீழே இறக்கினாள். தாழ்வாரத்தில் 25 வயதுக்கு அதிகமிராத தெரிவை யொருத்தி 'மேனகா, ரம்பை' போன்ற தோற்றத்துடன் உட்கார்ந்திருந்தவள், என்ன ஆச்சி! பேத்திப்பெண்ணுக்கு உபதேசம் செய்து கொண்டு வருகிறாயா? என்றாள். இதற்குள் சமயலறைக்குட் சென்ற ராஜலக்ஷ்மி சும்மா அங்கே நின்று கொண்டிருந்ததைப் பார்த்த இராஜலக்ஷ்மியின் மாற்றாந்தாயாகிய அத் தெரிவை, அம்மா! பெருமாட்டி பெற்றெடுத்த சீமாட்டியவர்களே! ஏதேனும் சாப்பிட்டு விட்டு அப்புறம் உங்கள் மாளிகைக்குப் போங்கள்

சாப்பிடாமல் படுத்துக்கொண்டு, அடியாளை மாடிப்படி ஏறி வந்து அழைக்கும்படி வைத்துக்கொள்ளாதீர்கள்'. என முகத்தை மாற்றிப் பேசிவிட்டு, காமாட்சியை நோக்கி, ஆச்சி! வந்து இங்கே உட்காரு விசேஷம் என்ன? என்று கேட்போமென்ருள்.

காமாட்சி, சிவகாமியின் அருகில் அமர்ந்து 'அம்மா, சிவகாமி உனக்கு என்ன கவலை. மகராசி? பெரும் தனம் படைத்தவள் பலத்த பணக்காரி உன்னையும் என்னையும் ஒப்பிட்டுச் சொல்ல முடியுமா? சாப்பாடாச்சா— என்று நீட்டத் தொடங்கினுள்.

சிவகாமி—இதென்ன ஒருநாளுமில்லாத திருநாள்! இம்மாதிரி என்னைக் கேலிசெய்ய எத்தனை நாளாயெண்ணியிருந்தாய். நீதான் பெரும் தனமுள்ளவள் பெரும் பணக்காரி என்னையா சொல்கிருய்? சரி உன் வாக்கே பொன்னுயிருக்கட்டும். எனக்குச் செல்வமிருந்தால், உனக்கும் பெருமையல்லவா? சாப்பாடெல்லாம் முடிந்தது. என் இவ்வளவு நேரம். வாய்க்காலை வேரோடு பிடுங்கி வருதற்குப் பேர்த்தியும், பேர்த்தியும் யோசனை பண்ணினீர்களா? 'என்ருள்.

சமையலறை வேலையைப் பொட்டென முடித்து ராஜலக்ஷ்மி, சமையற் கட்டை விட்டுப் படிக்கட்டுகளில் ஏறிச் செல்வதால் காலில் அணிந்த மெட்டி படிகளிற் பட்டுப் பட்டு டக்கு டக்கு என்னுஞ் சத்தம் கேட்டது. ராஜம்மாள் மேடைக்குப் போய்விட்டதை யறிந்த காமாட்சி, பொட்டலத்தைச் சிறிது சிறிதாய் அவிழ்க்கத் தொடங்கினுள் அவள் சிவகாமியைப் பார்த்து, இச் சின்னஞ் சிறுக்கி இவ்வளவு நேரம், வாய்க்கால் கரையில் என்ன செய்தாள், உனக்குத் தெரியுமா? நம்முடைய வாயினுலே அதனைப் பேசினுலும் பாவம். பெரிய கலகம் கிளம்பி விடும்....மேலைத் தெருக் கணக்கும் உங்கள் வீட்டு ராஜாத்தியும் கால்வாய்க் கரையிலே நின்று கொண்டு.... அப்பப்பா! சொல்ல முடியாது. நான் சொல்லவேண்டாம், தானுகத் தெரிகிறது. ஆனல் ஜோடி

ஒருவிதத்தில் சரியாகத் தானிருக்கிறது. பயலும் படிச்சிருக்கான். சிறுக்கியும ஏழு படித்திட்டாள். கலியாணத்தை முடித்து விட்டால் போதுமானது. ஆனால், இவ்விஷயம் உனக்குத் தெரியாது. நீ என்னவோ சொன்னயே! உன் தம்பி, சுந்தரத்துக்கு இவளைக் கட்டிப் போட வேண்டுமென்று நிச்சயப்படுத்தியிருக்கும்பொழுது இவள் இந்தத் திரிச்சல் திரிகிறாளே. இது நம்முடைய மேன்மைக்கும் கௌரவதைக்கும் நன்றாயிருக்கிறதா? இப்படியே முற்ற விட்டு விட்டால், இரண்டும் கூடிக் கொண்டு எங்கேயாவது ஜோடியாய்ப் பறந்து விடும். 'நாட்டுக்கு நாட்டு மட்டம்-நாமிரண்டும் ஜோடி மட்டம், கோர்ட்டுக்குப் போனாலும் தங்கமே! தயலாளே! கோடி ஜனம் பார்க்குமடீ பொன்னங் குயிலாளே!' என்று சின்னப் பயல்கள் பாட்டுப் பாடுவார்கள். அந்தக் கதையாகத் தானிருக்கிறது. எனக்கு இவைகள் எல்லாம் மனத்திற் கிடக்கிறதில்லை. கண்ணிலே கண்டதை உடனுக்குடன் கட்கட்டென்று சொல்லிவிடுவதே என் வழக்கம். இது, சிலபேருக்குப் பிடிக்கிறதில்லை. அதற்கு நாம் என்ன செய்யலாம்? ,என்று பிரசங்கம் செய்தாள்.

சிவகாமி பேசத் தொடங்குகிறாள்—'ஆச்சி! இதெல்லாம் நமக்கு என்ன கவலை? எந்தக் கழுதை எக்கேடு கெட்டால் நமக்கு என்ன வந்தது? யாரை யார் கலியாணம் செய்வதால் எனக்கு என்ன இலாபம்? அவளை யார் கட்டிக் கொண்டாலும், அல்லது இப்படியே நித்திய கலியாணியாய் வீட்டுக்குள்ளேயே இருந்தாலும் எனக்கு ஒன்றுதான், இராமன் ஆண்டாலென்ன? இராவணன் ஆண்டாலென்ன? கூட வந்த குரங்குதான் ஆண்டாலென்ன?— ஏதோ தாயிலாப் பிள்ளையாயிருக்கிறதே! நம்மைத் தவிர வேறே ஞாதி பிராணி யார் இருக்கிறார்கள் என்ற இரக்கத்தோடு தம்பி சுந்தரத்துக்கு வாழ வைக்கலாம் என எண்ணினேன். அட்டையைக் கழுவிக் கட்டையிலே கிடத்தினாலும், அது கிடக்கிற இடத்திலே தான் கிடக்கும். சுந்தரத்துக்கும், 'இவளைக் கலியாணம் பண்ணிக்கொள்ளு' என்று என் தந்தை சொன்னதுதான்—

அவன், 'சீமையில் இல்லாத சரக்கு, இராஜம்மாள்' என்று எண்ணிக்கொண்டிருக்கிறான். இப்படிப்பட்ட அவிசாரிக் கழுதை என்று அவனுக்கு லேசாய்த் தெரிந்தாலோ. சொப்பனத்தில் கூட, இவளைப் பற்றி அவன் எண்ணமாட்டான்.

மதுரையிலே ஒரு பெண் இருக்கிறது. அது சுந்தரத்துக்கு ஒரு விதத்தில் முறைப் பெண்ணுங் கூட. இந்தக் காலத்து நாகரீகமெல்லாம் அவளிடத்திலே ஆண் பிள்ளைமைனர்கள் கூடக் கட்டுப்பட்டுப் படித்துத் தெரிந்துகொள்ள வேண்டும் அவள், நான் போன மாதம் மதுரைக்குப் போயிருந்தபொழுது உங்கள் தம்பி—அழகு மன்மதன் போல இருப்பார்களாமே! பெரிய மைனராமே! மிகுந்த செலவாளியாம்—அப்படித்தானா' என்று கேட்டாள். நான் அவள் கருத்தை அப்பொழுது அறியவில்லை. சுந்தரத்திடம் இதுவரை அவளைப் பற்றிச் சொல்லவே யில்லை மறந்து விட்டேன் நானும் சொல்லி அவனுக்கும் மபிரிழை, மனம் ஒத்துவிட்டால், கலியாணம் முடிந்தே போய்விடும் என்று சொன்னாள்.

காமாட்சியாச்சி,—ஆனால் உலகத்திலே சொத்தோடு சொத்துச் சேர்வது தான் இயற்கை உன் வீட்டிலோ ஊர்ப்பட்ட சொத்துக் கிடக்கிறது. இங்கேயோ கேட்க வேண்டியதில்லை. அந்தச் சொத்துக்கு ஒரே பிள்ளை—சுந்தரந்தான். நீயோ அடுத்த வீட்டுக்காரி உனக்கும் அந்தச் சொத்துக்கும் சம்பந்தம் இல்லை. இராஜம்மாள் பேருக்குத் தனியாய்ப் பதினாயிரம் ரூபாய் எழுதி வைத்திருக்கிறார் அவள் தகப்பனார். அவள் தாயார் வீட்டுச் சொத்துக் கொஞ்சம் கிடக்கிறது இப்பொழுது அவள் மேலே கிடக்கிற நகைகள் சுமார் 3000 ரூ இருக்கும் இவ்வளவுக்கும் மேலே 5000 ரூபாய்க்கு கொழும்பிலிருந்து வேறு நகைளும் செய்து கொண்டு வரப்போகிறதாகக் கேள்வி இவ்வளவு பணத்தை யார் அநுபவிக்கிறது? வேறொருவன் கொண்டுபோவதில் நமக்கு என்ன லாபம்? சின்னக் கழுதை தெரிந்து தெரி

யாமற் செய்தாலும், நாம் அற்ப விஷயத்தைப் பெரிதாக்குவது அழகா? சுந்தரத்துக்கு இவளைக் கலியாணம் பண்ணினால் எல்லாச் சொத்தும் ஒன்று சேர்ந்து ஒரே மொத்தமாகும். இராஜம்மாளுக்கும் இது வரை புத்தி தெரியாது. சின்னஞ் சிறுக்கி தானே. பெரியவளாகி, வீட்டிலிருந்தால் மாத்திரம் விபரம் தெரிந்து விடுமா? இன்றைக்கு வேண்டியமட்டும் கோபித்துப் பேசினேன். மௌனமாக நின்றாள். எடுத்துச் சொல்வதற்கு ஆள் இல்லாமல், இப்படியாயிருக்கிறது. ஆனால் நான் இனிமேல புத்திமதி கூறி ஒழுங்காயிருக்கச் செய்கி றேன். நீயாகச் சுந்தரத்தைக் கலக்கவேண்டாம். கொழும் பிலிருந்து எஜமானவர்கள் வந்ததும், சுந்தரத்துக்கே பேசி முடித்துவிடுவோம்.' என்று கூறினாள்.

சிவகாமியம்மாளும்—'எப்படியானாலும் சரி! நமக்கு இதைப்பற்றிச் சிறிதும் அக்கறையில்லை அண்ணனும் அப்பா அவர்களும் வந்து அவர்களே ஆலோசித்துச் செய்வார்கள் அவர்கள் நம்மிடத்திலா, இதைப்பற்றி யோசனை கேட்கப் போகிறார்கள்? 'நாயினிடத்தில் கேட்டுக் காயம் உரைப்பது போலத்தான்.' அவரவர்கள் தலைவிதிப்படி நடக்கும் ஒவ் வொருவர் தலையெழுத்தையும் நாம் கவனிக்க முடியுமா? பிரம்மதேவன் முடிந்து போடும் பொழுதே இன்ன ஆணுக்கு இன்ன பெண் என்று குறிப்பிட்டே யிருக்கிறான்' என்று இவர்கள் பேசிக்கொண்டே அன்றிரவை கழித்தார்கள்.



## அத்தியாயம். 2

## பிரிந்த காதலர் இருந்த நிலைமை.

இனி நமது இளங்காதலர் இருவரையும் கவனிப்போம். இராஜாம்பாள் மேன்மாடிக்குப் போனாள். தன் அறையைத் திறந்தாள். அறையின் மத்தியில் தொங்கவிட்டிருந்த "பவர்லைட்"டை ஏற்றிவிட்டுக் கட்டிலின்மேலே படுத்துக் கொண்டாள். காமாட்சியாச்சி கூறியது ஒன்றும் அவள் மனத்தில் உறைக்கவில்லை. ஆதலால் அவள் மனம் முழுதும் கால்வாய்க் கரையில் சந்தித்த காதலனிடத்திலேயே ஈடுபட்டது. கனகசபாபதியின் அழகிய உருவத்தைத் தன் உள்ளமாகிய காகிதத்திலேயே எழுதி எழுதி, அவ்வழகைப் பருகிக் கொண்டிருந்தாள். அப்பால் அவ்வாருயிர்க் காதலனைத் தன் முன்னிருப்பதாகப் பாவித்துக்கொண்டு, பேசுகிறாள்—"என் காதற் களஞ்சியமே! ஆருயிர்த்துணையே! தாங்கள், நான் உயிர் போகுந் தறுவாயிலே வந்து உதவிய கருணையை யென்னென்பேன்? அவ்விடத்திலே தங்களை முன் கூட்டியே வந்திருக்கும்படி தூண்டிய கடவுளின் அருளைத்தான் எங்ஙனம் துதிப்பேன்! தாங்கள் ஏழெட்டு வயதுப் பிள்ளையாயிருக்கும்பொழுது முதலே தங்களோடு நான் பழகியிருக்கிறேன்! எனக்கு விளையாட்டுக் காட்டுதற்காகத் தாங்கள் என்னை அழைத்துக்கொண்டு ஆற்றுக்குச் சென்றதும், கடைத்தெருக்களில் அலைந்ததும், புகைவண்டி நிலைக்குப் போனதும், பூங்காவனங்களுக்குச்சென்று பலநிறப்பூக்களைப் பறித்து எனக்குக் கொடுத்து மகிழ்ந்ததும், இன்னும் எத்தனையோ விஷயங்களும் என் ஞாபகத்தைவிட்டு ஒரு நாளும் அகன்றதில்லை. அப்புறம், நான் தங்கள் தந்தையாகிய என் தாய் மாமனார் பாற் கல்விபயிலத் தொடங்கிய நாள் முதல், தினந்தோறும் தாங்கள் தந்தையாரோடு வந்திருந்து எனக்குப் படித்துக் காட்டிய விநோதக் கட்டுரைகளும், பஞ்சாமிர்தப் பத்திரிகையும், விகட விலாசங்களும், அபிநய கதைகளும், எனக்கு இன்றைக்குக் கேட்பனபோலவே நினைவுக்கு வருகின்றன. அழகு பூத்து இன்பம் பயக்கும் இனிய

சித்திரங்களை எனக்குக் காட்டிச் சித்திரம் எழுதும் சுவையை ஊட்டிய அன்பை நான் மறந்ததேயில்லை. தமயந்தி, ஸீதை, அநுசூயை, நளாயினி முதலிய கற்புக்கரசியர் சரித்திரங்களை எவ்வளவு அழகாக என் அறிவிற் புலப்படுமாறு புகட்டினீர்கள். இம்மட்டோ? கண்ணகி, கோப்பெருந்தேவி முதலிய பழந்தமிழ் நாட்டுப் பெண்மணிகளைப்பற்றி எத்தனை முறை கூறியுள்ளீர்கள்! இவைகளை யெல்லாம், எடுத்துக் கூறும் ஆசிரியர் இவ்வுலகில் தங்களையன்றி வேறும் இருப்பரோ என நான் நினைப்பது உண்டு. ஆனால் இத்தகைய அரிய சந்தர்ப்பங்கள் நெடு நாட்களுக்குக் கிடையாமற் போயின. அக்காலத்தில் என்னுடைய தாயார் ஜீவந்தராயிருந்தார்கள். தாங்களும் அவர்களுக்குத் தமையன் பிள்ளையாதலால் அவர்கள் தங்களிடத்தும் மிக்க அன்பு பாராட்டினார்கள். சில தடவைகளில், யாராவது பேரன் பேர்த்தி முறையில், என்னை நோக்கி "ராஜம்மா! என்னைக் கலியாணஞ் செய்து கொள்வாயா?" என்று என்னிடம் கேட்டுப் பரிகாசஞ் செய்தால், நான் அவர்களை வெறுத்துப் பார்த்து,—'முடியாது,' கனகத்தானைத் தான் கட்டிக்கொள்வேன்" என்று கூறியதை, இப்பொழுது நினைக்கையில் என்னை யறியாமல் கண்ணீர் பெருகுகிறது. இவ்வாறு பந்துத்துவத்தாலும், இயற்கையாயும் ஏற்பட்டுள்ள தங்கள் மீதுள்ள காதலை மாற்றிக்கொள்ள நான் எவ்வளவு முயன்றாலும் அம்முயற்சி சூரியனைக் கையால் மறைக்க முயலுவதாகவே முடிகின்றது. என் தாயார், நான் முற்பிறவியிலே செய்த தீவினை வசத்தால் இறந்தார்கள். அவர்கள் இறந்தபின் என் தந்தையார் இரண்டாந்தாரம் கலியாணம் செய்தார்கள். அக்காலம் முதல் தாங்கள் என் வீட்டிற்கு வருவதை நிறுத்தினீர்கள். ஆனால் தங்கள் பால் எனக்கு உண்டாகும் வேட்கையை நிறுத்தத் தங்களால் இயலவில்லை. என் மாற்றாந்தாயினிடம் நான் படும் அல்லல்களுக்கோ அளவில்லை. என் அண்ணன் என்னைக் காட்டிலும் நல்லதிர்ஷ்டமுடையவனாதலால், இவளுடைய கொடிய குணங்களில் அகப்படாமல், இவள் கலியாணமாவதற்கு முன்பே சென்னைக்குப்

படிக்கப்போய்விட்டான். எனக்குப் போக்கு இடம் எங்கே? ஒரு நாட் கழிப்பது ஒரு யுகமாகத் தோன்றுகிறது. என் தாயார் இறப்பதற்குமுன் இரண்டு வருஷங்கள், தாங்கள் எனக்குத் திருக்குறள், கம்பராமாயணம், சிலப்பதிகாரம் முதலிய முக்கியமான மூன்று தமிழ் நூல்களையும் கற்பிக்கும் காலத்திலே நான் அடைந்த ஆநந்தத்தை யென்னவென்று சொல்லுவேன்! இந்நூல்களிற் கூறியவாறே நாமிருவரும் ஒருவரையொருவர் விட்டுப்பிரியாமல் ஆயுள் பரியந்தம் இல்லற இன்பங்களை நுகர்தல் நிச்சயம் என்றே எண்ணி இறுமாந்திருந்தேன். என் இறுமாப்பின் மீது பொறாமை கொண்ட எமன் என் தாயைக் கொண்டொழிந்தான். என் தந்தையோ தாயாரிறந்த பிறகு அடிக்கடி கொழும்பிலிருந்து வருவதுகூட அசாத்தியமாகிவிட்டது. அவர்கள் ஊரிலிருக்கும் காலத்திலாவது தாங்கள் சில சமயங்களில் வந்து கொண்டிருந்தீர்கள். அதனால் நான் பல நாட்களுக்கு ஒரு முறையாகிலும் தங்களைக் காணும் பாக்கியத்தைப்பெற்றேன். ஆனால் நான் இப்பொழுது பக்குவதியாகிக் காலில் விலங்கு போட்டாற்போல வீட்டிற்குள் அடைபட்ட பிறகு, தங்களைக் கண்டதேயில்லை. நாள்தோறும் இரவிலே எப்படியோ இங்குப் புகுந்து தனிமையாய் கிடந்து தவிக்கும் பாவியேன் உயிரைக் கொள்ளை கொள்ளும் தங்களுடைய வஞ்சகத்தை நான் உணரமுடியவில்லை. நான் சிறுமியாயிருக்கும் பொழுது தங்கள் பாற் செலுத்தி வந்த அன்பின் உண்மையான அர்த்தத்தை இந்நாளில் நன்றாய் அறிந்துகொண்டிருக்கிறேன். இன்று தெய்வாதீனமாய்த் தங்களைக் காணும் அதிர்ஷ்டமடைந்தேன். இச்சமயத்தில், என்றுமில்லாத மிகுதியான காதலுணர்ச்சி என்னை வாட்டி வதைக்கின்றது. இதுவரை என்னைப் புறக்கணித்தது போல இன்னும் அசட்டையாயிருப்பீர்களானல் என் உயிர் உடலில் தங்காது. உங்களையின்றி நான் அரை க்ஷணமும் வாழமுடியாது. ஆதலால் நான் எவ்விதத்திலும் தங்களையே மணந்துகொள்வேன். அவ்வாறன்றிப் பெற்றோர்களது கட்டுப்பாட்டினலும் வஞ்சகர் சூழ்ச்சியாலும், தங்களுடைய பராமுகத்தாலும்

நான் வேறு யாரையேனும் மணக்க நேரிடின், எனது பிண த்தையே அவர்கள் தழுவுவர். தெய்வத்தின்மீது ஆணை யிட்டுச் சொல்கின்றேன்! தெய்வம் ஒன்று உண்மையாயிருக் குமாயின், தங்களை எனக்கே கூட்டுவிக்கும். வேறு ஒன்றை நினைத்தால், என் மனம் படும்பாடு சொல்லி முடியாது அது என்னவென்றால், என் சிற்றன்னையாகிய மாற்றாந்தாய், தானே என்னைப் படுத்திவரும் பாடுகள் போதாவென்று அடுத்த வீட்டிற்குப் போனபிறகேனும் சிறிது சுகமாயிருக் கலாமென்றெண்ணிய என்னைத் தன் தம்பியாகிய சுந்தரத் துக்கு மணஞ் செய்விக்கத்தக்க ஏற்பாடுகளைச் செய்கிறாள். தந்தையும் இளையாள் மீது ஆசைகொண்டு அதற்கே ஒப்பம் போட்டுவிட்டால் என்கதி என்னவாகும்? சுந்தரம், மகா விடபுருஷன், ஸ்திரீ லோலன், அல்லும் பகலும் அறுபது நாழிகையும் பரத்தையர்க்கே தொண்டு புரியும் தூர்த்தன். இவனா எனக்கு ஏற்ற மணவாளன்? நன்று நன்று இவனோடு இல்லறம் நடத்துவது, காட்டிலெரித்த நிலாவும், கமரில் ஊற்றிய பாலும், ஆற்றிற்கரைத்த புளியும் போலாகவன்றோ முடியும்! ஆதலால், என் மனத்தில் குடிகொண்டு வாழுந் தெய்வமே! தாங்களே, எவ்விதத்திலும் என்னை மணம் புரிதல் வேண்டும். அதற்கு உகந்த வழிகளை அபலைப் பேதைப் பெண்ணாகிய நான் அறியேன். சகல கலா வல்லு நராகிய தாங்களே என் கோரிக்கையை முற்றுவித்தற் கேற்ற வழிகளை அறிவீர்கள். தாங்களும் நானும் சேர்ந்து இல்லறச் சகடத்தை யோட்டுவோமாயின், அவ் இல்லற வாழ்க்கை எவ்வளவு மேம்பாடு உடையதாக விளங்கும்! நாமிருவரும் மலருமணமும் போல, நகமுஞ் சதையும்போல இரண்டு உடலில் ஓர் உயிர் உலாவுதல் போல, கிளியும் கிளியும் போல வாழ்வோம் என்பது ஒருதலை. என்னுரு யிரே! உங்களை நான் சந்திக்க விரும்புகிறேன். தாங்கள் உறுதியாய் எனக்குக் காட்சியளித்தல் வேண்டும்." என்று கூறிக்கொண்டே மயக்கமடைந்து கட்டிலிற் சாய்ந்து விட்டாள்.

இனிக் கனகசபாபதி என்ன செய்கிறான்? என்று பார்க்கத் தொடங்குவோம்.

இராஜாம்பாள் தன்னை விட்டு அகன்று போனபிறகு, சிறிது திகைப்புடன் அங்கேயே நின்றிருந்த கனகு, கொஞ்சம் தொலைவிலே குமரியும் கிழவியும் பேசியவற்றைக் கேட்டான். அவர்களது வார்த்தைகளிற் சிற்சிலவே இவன் காதில் விழுந்தன. காமாட்சியாச்சி, கனகசபாபதிக்கு இளமை முதலே பகைமை பாராட்டி வருபவள். இராஜாம்பாள் கள்ளங்கபடு அறியாத வெள்ளை யுள்ளத்தினள். ஆகையால் அவள் காமாட்சி யிடஞ்சென்றதும், இம்மியும் பொய் கலவாமல் மெய்யாய் நடந்தவற்றைச் சொல்லாமல் இராள் என்றும் கனகுக்குத் தெரியும். அப்படியிருக்கையில் காமாட்சி என்னென்ன குறும்புகள் செய்வாளோ, என, அவன் அஞ்சினான். குண்டுணி நாரதரின் அவதாரமாகிய காமாட்சி எந்தப் பழி பாவத்தையும் அஞ்சாமற் செய்பவள். பணம் கிடைப்பதாய் இருந்தால், தன்னால் இயன்றவாறு முயன்று மேருவையும் அணுவாக்குவாள். அணுவையும் மேருவாக்குவாள். தூணைத் துரும்பு என்று சாதிப்பாள். துரும்பைத் தூணாகவும் செய்து விடுவாள். இப்படிப்பட்ட காமாட்சி, தனக்கும் இராஜாம்பாளுக்கும் எத்தகைய கதைகளைப் படைத்து அச்சுக்கூடத்தின் உதவியின்றியே உலகத்துக்குப் பிரசுரஞ் செய்யப்போகிறாளோ? என்று திகிலடைந்தான். இவளுடைய பொய்க்கதைகள் உலகத்தில் காட்டுத்தீப்போற் பரவி விடுமே! வேதவியாசரது வேலைத் திறமைகள் உலகத்தை விட்டு ஒழியினும் ஒழியும். இவளது சாமர்த்தியக்கதை மூட்டைகளுக்கு ஊழியூழியும் அழிவும் கிடையாவே! இராமனுக்குக் கூனி தோன்றினாள் பகையாக. இராமாயணம் தோன்றியது அதிலிருந்து. இவள் எனக்காகத் தோன்றியிருக்கிறாள். இதிலிருந்து என்ன இதிகாசம் நடைபெறுமோ தெரியவில்லை என்று கலங்கிய மனத்தோடு வீட்டையடைந்தான்.

அவனது வருகைக்காக வீட்டு வாயிலிலேயே காத்திருந்த அவன் தாயாராகிய மங்கையர்க்கரசியம்மையார்,

"என்னப்பா! இவ்வளவு நேரம்? என்றைக்கும் இதுமாதிரி தாமதமாக வீட்டுக்கு வந்ததில்லையே. முகம் வாட்டமாயிருக்கிறது. உன் முகம் வாடியிருக்க இதுகாறும் நான் பார்த்ததில்லை. விசேஷச் செய்தி ஏதேனும் உண்டோ? என்னிடத்தில் எதனையும் ஒளிக்கவேண்டாம் கூசாமற் சொல்லு." என்று பரபரப்புடன் கேட்டாள். கனகு, "அப்படி யொன்றும் பிரமாத விஷயமில்லை; ஆனாலும் சாவதானமாய்ச் சொல்கிறேன்"—எனச் சொல்லிக்கொண்டே, வீட்டிற்குள் புகுந்து தாயார் அன்புடன் பரிமாறிய இனிய உணவை அருந்தும் பொழுதே, அவன், தாயாரை நோக்கி "என்னம்மா! தாய்க்கு ஒளித்த சூலா? உன்னிடத்தில் கூறுவதற்கு எந்த விஷயமானாலும், நான் ஏன் கூசவேண்டும்?" என்று வாய்க்காலில் நடந்த விருத்தாந்தங்கள் யாவற்றையும் மொழிந்து, காமாட்சியால் தனக்கு நேரிடக் கூடிய துயரத்தையும் விளக்கினான். இவைகளை யனைத்தும் கேட்டிருந்த மங்கையர்க்கரசி மனத்துயரம் மிகுதியும் அடைந்தாள். அப்பால் அதனை மனத்தில் ஒருவாறு அடக்கிக் கொண்டு—"கனகு! என்ன செய்யலாம்? விதி யாரைத்தான் விட்டது? நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்கிறது. உன்னுடைய அருமை தெரிந்தவர் யாரும் இப்பொழுது இராஜாம்பாள் வீட்டிலில்லை. தற்காலத்திலே பணம் ஒன்றே பந்தியில் முந்தி யிருக்கச் செய்யும். குணத்தையும் குலத்தையும் யார் கவனிக்கிறார்கள்? படிப்பு இருந்தாலும், நெருங்கிய பந்துத்துவம் இருந்தாலும், பணமுள்ள இடத்திலேயுள்ள பெண்களைக் கலியாணம் செய்யமுடியாது. ஆதலால், இராஜாம்பாள் எனக்கு மருமகளாக வாய்ப்பாள் என்று எண்ணியிருந்த என் எண்ணம் வரவர மறைந்தே போயிற்று. அந்த ஆசையை அடியோடு ஒழித்துவிட்டேன். இராஜாம்பாளைப் பெற்ற தாயாராகிய என் மதனி உயிருடன் இருக்கும்பொழுது, அந்த ஆசை என்னை ஆட்டிக் கொண்டிருந்தது. அவர்கள் இறந்த பிறகு அவ்வாசை, என்னை அறியாமலே என்னை விட்டகன்றது. இன்று இராஜம்மாளைக் காப்பாற்றியது அவசியமான காரியமே. எந்தப்

பிராணியையும் ஆபத்துக் காலத்தில் ஆதரித்தல் அறிவுள்ள மனிதன் எவனுக்கும் கடமையாகும். ஆனால் இச்செய்தி உண்மையாய் நடந்ததாயினும், உலகம் இதனை நம்பாது. பட்டப்பகலில் நடந்த விஷயமானாலும் இதுபோன்ற காரியங்களில் சமுசயம் ஏற்படுவது சகஜம். வாலிபப் பருவம் மனிதர்க்கு பயங்கரத்தை விளைப்பது. ஆணானாலும், பெண்ணானாலும், இந்தப் பருவத்திலே பிறருடைய வசைமொழிகளைக் கேளாமலிருக்க முடியாது. எங்கேயாவது ஒத்த வயதுடைய ஆணும் பெண்ணும் நிற்பதாகக் கண்டாலும் அன்றி ஜாடையாய்ப் பேசுவதாகத் தெரிந்தாலும், இதை வைத்துக்கொண்டு கண், காது, மூக்கு முதலிய அவயங்களைச்சேர்த்து அழகாய்ச் சிருஷ்டித்து ஜோடிப்பதே மனித சுபாவம், உண்மையான அன்பு, ஆண் பெண்களிடம் எங்ஙனம் பிறக்கின்றது, என்றறிந்து, அதன்படி மணம் புணர்த்தும் முறை நமது நாட்டிலே அடியோடு தொலைந்தது. இராஜாம்பாளின் தாயாராகிய உன் அத்தையார், இராஜாம்பாள் பிறந்தவுடன், நான் குழந்தையைப் பார்க்கச் சென்றதும், "மதனி, எனது பெண்ஜாதி பிறந்திருக்கிறாள். மருமகளை வீட்டிற்கு அழைத்துச் செல்லுங்கள்"—என்று கேலி பேசினாள் அந்த அம்மாள் மகா உத்தமி; பதிவிரதா சிரோமணி. பதிவிரதை வாக்குப் பொய்யாது என்று பெரியோர்கள் சொல்லுவார்கள். ஆனால் என் மதனி உயிரோடிருந்தால், வாக்கை நிறைவேற்றியே தீர்ப்பார்கள். அந்த அம்மாள் இறந்த பிறகு, அன்னம் இருந்த அருந்தாமரையைப் புன் காகம் வெளவியது போலவும், சீதேவி வாழுமிடத்தில் மூதேவி குடிபுகுந்தது போலவும், என் தமயனார் வீட்டிற் சிவகாமி,—பேர் மாத்திரம் அழகு—காலெடுத்து வைத்தாள் அவளுடைய அதிகாரம் பலத்தது. நான் என் தமையனார் வீட்டு வாயிற்படியை மறந்தே போனேன். உன் தகப்பனாராவது இருந்தார்களா! இராஜாம்பாளை ஒருசமயம் என் மருமகளாக அடையலாம்! அதற்கும் நாம் நற்பேறு கொண்டுவரவில்லை என்ன செய்யலாம்! கணகு! உனக்கு ஆசை அதிகம். அந்தப் பெண் பாவைக்கும் விருப்பம் இருக்

கிறதென்றே தெரிகிறது. ஆனால் காரியம் நிறைவேறுவது இயலாது. முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்படுவது போலத்தான்.

மேலும், அந்தக் காலத்தில் நம்மிடத்தில் சுமாராய்ச் சிறிது ஐவேஜும் இருந்தது. அவர்கள் வீட்டிலும் இந் நாளிலுள்ள சொத்திலே பத்திலொரு பங்குதான் இருந்தது. எல்லாம் இப்பொழுது பத்து வருஷமாகத் திருநாவுக்கரசுப் பிள்ளை (இராஜம்மாளுக்குத் தகப்பனர்) கொழும்பிலே வியாபாரம் நடத்திப் பணம் திரட்டினர். திரண்ட சொத்து வீணாய்ப்போகுமே; நமக்கும் கொஞ்சம் கிடைக்கட்டும் என்றுதானே சிவகாமியின் தகப்பன், 55-வயதுக்கு மேற்பட்ட திருநாவுக்கரசு பிள்ளைக்குப் பெண்ணைக் கொடுக்க வலிய வந்தான். எனக்கும், திருநாவுக்கரசுப் பிள்ளைக்கும் ஒன்றிரண்டு வயது வித்தியாசம். அவரும் இனி இவ்வளவு வயதுக்கு மேற் கலியாணம் எதற்கு? என்று எவ்வளவோ மறுத்தார். பெண் கொடுக்கிறவன் நடவா நடை நடந்தான். ஊரிலுள்ளவர்கள், "செத்தால் அறுக்கப் பெண்டாட்டி வேண்டாமா?—இவ்வளவு பணம் இருந்து என்ன செய்ய?" என்று இடித்துக் கூறினர்கள். காமாட்சியாச்சி போன்ற நயவஞ்சக மந்திரிமார்கள், "வலிய வந்த சீதேவியைக் காலால் உதறித்தள்ளலாமா?" என்று உபதேசம் செய்தார்கள். திருநாவுக்கரசுப் பிள்ளை, தனக்கு வயதானதொன்று; ஊரிலேயே இருப்பதற்கில்லாமல் (கொழும்பு) வியாபாரத்தை முன்னிட்டுக் கொழும்பிலேயே வசிக்கவேண்டியதிருப்பது மற்றொன்று; இவை போன்ற பல இடைஞ்சல்களை எண்ணி இன்ன செய்வது என்று தோன்றாமல் இருதலைக்கொள்ளி எறும்பு போலத் தத்தளித்தார். காமாட்சியாச்சி, சிவகாமி வீட்டிலும் ஆயிரம் ரூபாய்க்கு மேல் கைக்கூலி பெற்றுக் கொண்டாள். திருநாவுக்கரசுப் பிள்ளையிடமும் ஏராளமான பணம் வாங்கினாள் "இராஜம்மாளுக்குப் பெண்துணை அவசியமாய் வீட்டிலிருக்க வேண்டாமா? நீங்கள் கொழும்பிலேயிருக்கிறீர்கள். மாணிக்கமோ, பட்டணத்திற்குப் படிக்கப் போய் இரண்டு வருஷங்கள் ஆயின. இன்னும் படிப்பு

முடிந்து ஊருக்கு வர மூன்று வருஷங்களாகும். வீட்டுக்குக் காவலாகவும் இராஜாம்பாளுக்குத் துணையாகவும் அவசியம் ஆள் வேண்டும். சிவகாமி வயதான பெண்; ருதுவாகி எ ழெட்டு வருஷங்களாகின்றன. வயது 20க்குக் கிட்டத்தட்ட இருக்கலாம். லக்ஷணமானவள்; சும்மா யோசனை செய்யாதீர்கள். வீட்டுக்குப் பொருத்தமாயும் அழகாயும் இருக்கும். ஒப்புக்கொள்ளுங்கள்" என்று தூபம் போடத் தொடங்கினுள். இராஜலக்ஷ்மியை உத்தேசித்தே அவரும் அதற்கு "ஓம்" போட்டார். கலியாணம் ஆயிற்று. எல்லாம் சிவகாமியின் தகப்பன் ஆதிக்கத்துக்கு உட்பட்டன. திருநாவுக்கரசு கொழும்பிலேயே தங்கிவிட்டார். சிவகாமியின் செல்வாக்கும் திமிரும் நிமிர்ந்தன. இராஜலக்ஷ்மியின் அருமைகளைச் சற்றும் கவனியாமல் தன் இஷ்டம் போலத் துன்புறுத்தத் தொடங்கினுள். இதனை அவள் தந்தைக்கு அறிவிப்பவர் கூட யாரும் கிடையாது. சிவகாமி, பெண் துணை என்று எண்ணியது புண்வேதனையாக முடிந்தது. பாவம்! சிறியபெண்—"தெய்வமே" என்று வாய் விட்டுச் சொல்லியழுவதற்குக்கூட ஆளில்லாமற் கலங்கித் தவிக்கிறது! சிவகாமியின் தகப்பனுக்குத் தர்மபத்திரி—காமாட்சியாச்சி புதல்வன் ஆறுமுகம் பிள்ளை. இவனோ படு மோசக்காரன். காமாட்சி பக்குவதி யாவதற்கு முன்னே கணவனை விழுங்கிவிட்டதாகவும், இவனைப் பிள்ளை போலப் பாவிப்பது ஏதோ சூதான மோசடி என்றும் கூட ஒரு வதந்தி. ஆறுமுகத்துக்குப் படிப்பு சுமாராய்த் தெரியும். உன் தந்தையிடத்தில் அவன் படிக்கும்பொழுது தினமொன்றுக்கு ஐயாயிரம் அடிகளுக்கு அச்சாரம் கொடுப்பான். இவனுடைய துஷ்டத்தனத்தைப் பொறுக்க முடியாமல், அவனை வீட்டுக்குத் துரத்தி விட்டார்கள். காமாட்சி எவ்வளவோ சிபார்சுகள் செய்தாள். "என் வீட்டு நடை ஏறுதே" என்று விரட்டி விட்டார்கள். அதோடு அவன் படிப்புத் தொலைந்தது. சிவகாமியின் தகப்பன் வைத்திருந்த பலசரக்குக் கடையிலே இரண்டு ரூபாய்ச் சம்பளத்தில் வேலை பார்த்து வந்தான். இவன் வளர்ந்த பிறகு, சிவகாமியையும் இவனையும் பற்றி

ஊரெல்லாம் சிரித்துப் போயிற்று. இப்பொழுதோ கேட்க வேண்டியதில்லை. சிவகாமியின் தகப்பன், திருநாவுக்கரசுப் பிள்ளையிடஞ் சொல்லி ஆறுமுகத்தை இராஜம்மாள் வீட்டுக் காரியஸ்தனாக நியமித்துவிட்டான். ஆறுமுகம், சிவகாமி வீடே தஞ்சமாகக் காத்து வருகிறான். இரண்டு வீடுகளி லும் இவன் இட்டதே சட்டம். காமாட்சி, பெண் மோகினி யாயவதரித்து, ஊரிலுள்ள ஆண்மக்களை வஞ்சித்துப் பணம் சேர்க்கிறாள். ஆறுமுகம் ஆண்மோகினியாயிருந்து பெண் மக்களை ஏமாற்றி அவர்கள் கற்பைக் குலைப்பதன்றி வீட்டுக் காரருக்குத் தெரியாமற் சேர்த்து வைக்கும் சொற்பப்பணங் களைப் பிடுங்கி பிடுங்கிப் பெரும் பணம் திரட்டியிருக்கிறான். ஊரிலுள்ள பெரிய மனிதர்களெல்லாம் காமாட்சி சொல்லு கிறபடி ஆடக்கூடியவர்கள். எவரும் அவளிடம் பகைத்துக் கொள்ள அஞ்சுவார்கள். தப்பித்தவறி அவள்மீது யாரேனும் புகார் கூறிவிட்டால், உடனே மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போட்டுப் படாத பாடு படுத்திப் பருந்தாட்டம் ஆட்டி விடுவாள். இவ்வறுதாலி முண்டைக்கு என்ன செல்வாக்கு! இவளுடைய வெற்றி, இவ்வூர் முழு தும் கொடி கட்டிப் பறக்கின்றது, “மாதர் கற்புடை மங் கையர்க்கு ஓர் மழை”—என்று புலவர் பாடினர். அவரே “புருடனைக் கொன்ற பூவையர்க்கோர் மழை” என்றும் பாடி யிருக்கிறாரே. பிற் கூறிய வாக்குக்கு இலக்கியம் இக் காலத்திலே கிடைத்தல் கஷ்டம். இக்காலத்திலே வீடுவீடா ய்க் குவிந்து கிடக்கின்றது. இவளாலே கெட்டலையும் கன் னிகைப் பெண்கள் கணக்கிலடங்கா! அவிசாரிகளாக மாறிய அபலைப் பேதையர்கட்கு அளவில்லை! கற்புக் குலைந்து, சரீர த்தை வெளிக்குக் காட்டுதற்கும் லஜ்ஜையுற்றுத் தற்கொலை புரிந்து கொண்ட தையலரை எண்ணமுடியாது, புருஷனைக் கைவிட்டுப் புறம் போய் வெளிக்குத் தெரியாமல் மறைந்து ஒழுகும் குலஸ்திரீகள் அளவில்லாதவர், இப்படிப்பட்டவர் களெல்லாம் நமது காமாட்சியின் தோழிப் பெண்கள். இந்தக் கொடிய பெண்பாவி வாழும் ஊரில் மழையும் பெய் கிறது! என்ன செய்வோம்? எங்கேனும் சுடுகாட்டிற்

சென்று வாழ்ந்தாலும் புண்ணியமுண்டு. இவளுக்கு அநேக நாளாய் நமது குடும்பத்தின்மேல் கண்ணுயிருக்கிறது. இவளாலே எத்தனை குடும்பங்கள் நசித்துப்போயின. நம்முடைய குடும்பம் மாத்திரம் இன்னும் பாக்கி யிருக்கிறது. அதிலும் இன்று கை வைத்து விட்டாள். இனி நமக்குத் துன்ப காலம் அடுத்தது நாம் இனி இவ்வூரில் வசிப்பதிற் சுக மில்லை. நமது சொந்த ஊராகிய தென் காசியிலே, உனது சிற்றன்னை யிருக்கிறாள், அவள் நம்மை வரும்படி கட்டா யப்படுத்தினாள். நாம் இராஜலக்ஷ்மி கலியாணம் முடிகிறவரை அங்குப் போய் இருப்போம்'' என்று கூறி முடித்தாள். கனகசபாபதி, யாவற்றையும் கேட்டுக்கொண்டேயிருந்தான். இரவுச் சாப்பாடும் தீர்ந்தது. அப்பால் அவன் தாயை நோக்கி, "எல்லாம் நாளைக் காலையிலே யோசித்துச் செய்வோம்'' என்று கூறிவிட்டுத் திண்ணையில் வந்து உட்கார்ந்தான்.

அப்பொழுது இரவு மணி 11 இருக்கும். எப்பொழுதும் 10½ மணிக்குமேல் அயர்ந்து நித்திரை போகும் பழக்கமுள்ள கனகசபாபதிக்கு அன்றிராத்திரி தூக்கம் பிடிக்கவில்லை அக்கம் பக்கத்து வீடுகளில் அரவம் ஒடுங்கிவிட்டது பள்ளியிற் பயிலும் மாணவர்க்குத் தூக்கம் வரவில்லையானல் அதற்கு ஒரு மருந்து அவர்கள் பொது விதியாகக் கண்டிருக்கிறார்கள். இது இக்காலத்துப் பிள்ளைகட்குக் கைகண்ட பரமௌஷதம். விளக்கை யேற்றிப் பக்கத்தில் வைத்துக் கொள்வார்கள். புஸ்தகத்தைப் படிக்கத் தொடங்குவார்கள். இரண்டொரு நிமிஷங்கள் உற்சாகமாயிருப்பது போலத் தோன்றும். அதிலும் பரீக்ஷா காலமாயிருந்தாற் சிரமப் பட்டு உற்சாகத்தைபும் ஊக்கத்தையும் வரவழைப்பார்கள் சில நிமிஷங்கள் கழிந்தபின் அவர்கள், படுக்கையின் தலைமாட்டிலே விளக்கை வைத்துக்கொண்டு, படுத்திருந்தவாறே சிறிது நேரம் படிப்பார்கள். அப்பால் புஸ்தகத்தைத் தலையணையின்மேற் போட்டுக்கொண்டு, குப்புறப் படுத்துத் தலையை நிமிர்த்திச் சிறிது நேரம் புஸ்தகத்தைப் படித்

திருப்பார்கள். அந்நேரத்தில் மூதேவி பிரசன்னமாவாள். தூக்கப் பிசாசு தலை விரித்தாடும். கண்கள் சுழன்று சுழன்று மூடும். கொட்டாவி எட்டொன்பது பட்பட்டென்று வெளிப்படும். சரிதான். "இழவு பரீக்ஷை வந்து விட்டதே" என்று கூறிக்கொண்டே, ஷண்முகம் மூக்குத்தூள் 1ம் நிர். பட்டணம் பொடி மட்டையை தலையணைக்கு அடியிலிருந்து எடுத்து இரண்டு சிட்டிகை மூக்கிலே பலமாய் உறிஞ்சுவார்கள். அவ்வளவுதான். சுறுசுறுப்பாய் மேலும் சில நிமிஷங்கள் படிப்பார்கள். அந்தக் கிறு கிறுப்பு மருந்து தலையைச் சுழற்றிவிடும். புஸ்தகம் போன விடம் தெரியாது. விளக்கு எரிந்துகொண்டே யிருக்கும். பையன் கண்ணை மூடித் தூங்கிவிடுவான். சரியாய் மூன்றுமணிக்கு அலாரம் வைத்த "டைம்பீஸ்" கணகணவென ஒலிக்கும். உடனே பையன் முணங்கிக் கொண்டே விளக்கை யணைத்து வைத்துவிட்டு நன்றாய்த் தூங்கிவிடுவான். காலையில் பள்ளிக்கூடத்திற்குப் போக நேரமாய்விடும். தகப்பனார் கோபத்தோடு வைது அவனைப் பூஜைகள் போட்டு எழுப்புவார். இவ்வசவுகளைக் கேட்கப் பொறாமல் பையன் தேம்பி யிருப்பான். அப்பொழுது தாயாரோ பாட்டியாரோ குறுக்கிட்டு, "பையன் என்ன செய்வான்? பாவம்! மணி 4 இருக்கும் தூங்கும் பொழுது. பரீக்ஷை பரீக்ஷை என்று உயிர் விடுகிறான்." என்று சமாதானம் கூறியவாறே அவனை அழைத்துப் போய் ஆசார உபசாரமாகச் சாப்பாடுகள் போட்டுப் பள்ளிக்கு அனுப்புவார்கள். இது தான் தற்கால மாணவர் பெரும்பாலோரது பரீக்ஷைப் படிப்பு முறை. நிற்க.

கனகசபாபதி இதுவரை, இவ்வநுபவங்களைக் கையாடவில்லை. அவன் சரியாய் $7\frac{1}{2}$ மணிக்குப் படிக்க உட்காருவான். $10\frac{1}{2}$ மணிக்குப் புத்தகத்தை மூடிவைத்துத் தூங்குவான். தூக்கம் வராமல் இருந்த நாளே கிடையாது. இக்காலத்துச் சிறுவர்களது நவீன கோலாகல லீலைகளிலே அவனுக்குப் பிரத்தியக்ஷமான அநுபவமில்லை யென்றாலும் அவைகளைக் கண்ணாரக் கண்டும், காதாரக் கேட்டும் இருக்கிறான். இன்றைக்கு அவன் தன்பால் ஏற்பட்டுள்ள புதிய

மாறுதலைக் குறித்து மெத்த விசனமடைந்தான். "ஏதாவது படிக்கலாம்.

"யாதானும் நாடாமால், ஊராமால், என்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு" (திருக்குறள்)

என்று திருவள்ளுவ தேவர் கூறியவாறு—கல்வி பிறப்புத் தோறும் தொடரும் பெருமை யுடையதாகையால், எத் தொழில் வயிற்றுப் பிழைப்புக்காகச் செய்யினும், தொழில் ஒழிந்த நேரங்களில் உத்தமமாகிய கல்வியை மேலும் மேலும் கற்றல் அவசியமன்றோ?

செவிக்கு உணவில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும். (திருக்குறள்)

நல்லவை கற்றலும், கேட்டலுமே பிறந்ததனாலாய பயன் என்றெண்ணியவாறே புத்தகங்கள் வைத்துள்ள அலமாரி யினண்டை போய் உட்கார்ந்தான்.

கனகசபாபதி பரம்பரைத் தமிழ் வித்துவான்களாகிய கவிராயர் குடும்பத்திலே பிறந்தவன். அவர்களுக்குச் சொந்த ஊர்தென்காசி. இவனது தந்தையாகிய மாசிலாமணி கவிராயர், தமிழிலே தேர்ந்த வித்துவான். "குலவித்தை கல்லாமற் பாகம் படும்" என்றபடி கனகசபாபதியிடம், இயற் கையாய்த் தமிழ் வளம் குடிகொண்டமைந்து விளங்கிற்று. இராஜம்மாளின் தமையனாகிய மாணிக்கவாசகமும் இவனும் உள்ளூர் ஆங்கிலப் பாடசாலையிலே ஒரு வகுப்பு மாணவராய் ஆறாவது பாரத்து முடிவு அரசியற் பரீக்ஷையில் தேறினார் கள் இருவரும் ஆப்த நண்பர். கண்ணுக்குக் கண்ணான பிராண சிநேகிதர். மாணிக்கவாசகம், உள்ளூர்ப் படிப்பு முடிந்த பின்னர், சென்னை மருத்துவக் கல்லூரியிற் சேர்ந்து படித்து வந்தான். கனகசபாபதியை அவ்வாறெல்லாம் படிக்க வைக்குஞ் சக்தி, கவிராயரிடம் இல்லாமையால், அவனுடைய ஆங்கிலக் கல்விக்கு முற்றுப்புள்ளி போடும் படியாயிற்று. இவ்வளவிலே அவன் தந்தை காலஞ்சென்றார். வீடு வறுக்கத் தொடங்கிற்றாகையால், அருகிலுள்ள ஆரம்

பப்பாடசாலை யொன்றிற் சொற்ப மாத வேதனத்தில் ஆசிரியனாக அமர்ந்தான். தமிழில் இலக்கண இலக்கியங்களைத் தானே வருந்திக் கற்று, இவ்வருடத்திலே தான் மதுரைத் தமிழ்ச்சங்கத்தார் நடாத்தும் தனித் தமிழ்ப்பண்டித பரீக்ஷையில் முதல் வகுப்பில் முதல் தரமாகத் தேர்ச்சியுற்றுத் 'தங்கத் தோடா' பரிசு கிடைக்கப்பெற்றான். அப்பொழுது அவன் தாய், "உனக்குத் தங்கத் தோடா கிடைத்ததோடா" என வியந்து பாராட்டித் தழுவிக்கொண்டாள்

இன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய். (திருக்குறள்)

இதனோடும் அமையாமல், சென்னை யூனிவர்ஸிட்டியார் நடாத்திவரும் தனித் தமிழ் வித்துவான் பரீக்ஷைக்கும் எழுத விரும்பியுள்ளான். அந்தப் பரீக்ஷையில் முதல்தரமாகத் தேர்பவருக்குத் திருப்பனந்தாள் காசிமடாலயத் தலைவர், ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாதத் தம்பிரானவர்கள் மனமுவந்து வருடந்தோறும் அளித்து வரும் ஆயிரம் ரூபாய் பரிசையும் பெறுதற்காக அரிய முயற்சிகள் எடுத்து ஆத்திரத்துடன் கற்று வருகிறான். இடையிடையே பள்ளிக்கூட ஊதியம் வீட்டுச் செலவுக்குப் போதாதாகையால் உலகமுவப்பப் புது முறையிலே பல புத்தகங்களை எழுதி வெளியிட்டும், பத்திரிகைகளுக்குக் கட்டுரைகளும் கதைகளும் எழுதியும் சிறிது பொருள் சேகரித்தான்.

இன்று "என்ன படிக்கலாம்"? என்ற யோசனையோடு கனகு, "தொல்காப்பியம்" என்னும் பழந் தமிழ் இலக்கண நூலை யெடுத்தான். புத்தகத்தை இதழ் இதழாகப் புரட்டினான். கருத்து, புத்தகத்திற் செல்லவில்லை. ஆனால் காதலியாகிய இராஜ லக்ஷ்மியை நாடிச் சென்றது. படிப்பில் புத்தி செல்லாததை யெண்ணிக் கனகு தன்னையே நொந்து கொண்டான்.

"தையலார் மயலிற் பட்டார் தமக்கொரு மதி யுண்டாமோ!"

என்ற பரஞ்சோதி முனிவரது திருவாக்குச் சட்டென

ஞாபகத்திற்கு வந்தது. உடனே பட்டெனப் புத்தகத்தை மூடிவிட்டு ஒரு பால் உட்கார்ந்திருந்தான். இராஜலக்ஷ்மியின் மேலுள்ள மோகம், அமோகமாய் அவனை ஆட்டத் தொடங்கிற்று. விளக்கைச் சிறிது இறக்கி ஓரமாய் வைத்தான். பித்துப் பிடித்தவன் போல உட்கார்ந்தான். அவன் முன் இராஜலக்ஷ்மியே வந்து நிற்பதாகத் தோன்றிற்று. காதல் ததும்பும் கண்களால் தன்னை நோக்கிக் காலால் நிலத்தைக் கீறி நின்ற அம்மங்கையின் இங்கித முகத்தைப் பார்த்ததும் பொங்கி வழியும் காதலை அடக்குஞ் சக்தி யில்லாமல், தன் தாயார் கூறியவற்றை யெல்லாம் மறந்து—

"என் அன்னப் பேடணங்கே—இன்று
என்னுடன் கூடிணங்கே.

மங்கையே வாராய், ஏழை முகம் பாராய்;
இங்கிதமுத்தம் தாராய்; என் வருத்தம் ஓராய்;
இன்பசுகந் தாராயோ!— [என் அன்னப்

"பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்." (திருத்குறள்

என்று பாடிக்கொண்டே தன்முன்னின்ற இராஜலக்ஷ்மியைக் கட்டித் தழுவச் சென்றான். கையினுள்ளே மரத்தூணொன்று அகப்பட்டது. கண்களைத் துடைத்துக் கொண்டு, "என் அன்பே! இப்படியும் என்னை ஏமாற்றலாமோ!" என்று வாய் விட்டுக் கூறி யெழுந்தான். அங்கு ஒருவரையும் காணவில்லை. "ஆஹா மோசம் போனேன்: உரு வெளித் தோற்றத்தை உண்மையாக நம்பினேனே! என்ன அறிவீனம்!" என்று கூறி எல்லாவற்றையும் அறவே மறந்து விட்டதாகப் பாவனை செய்தான். தன் செய்கையை அன்னியர் பார்த்திருப்பார்களோ என்னும் நாணத்துடன் வெளியே வந்து சுற்றும் முற்றும் பார்த்தான். நல்ல வேளையாய் யாரும் காணப்படவில்லை. பக்கத்திலிருந்த போலீஸ் ஸ்டேஷனில் மணி இரண்டு அடித்தது. அகால வேளையாய் விட்டது என்று விளக்கை யணைத்துப் படுக்கைக்குப் போய்க் கண்ணை

முடினான். தூக்கம் வருவதாகத் தோன்றவில்லை. காதலியை முன்னிலைப் படுத்திப் பின் வருமாறு கூறலானான்.

"என் கட்டிக் கரும்பே! கரும்பின் பாகே! பாகின் சுவையே! உனக்கு ஏழு வயதுப் பருவத்திற் பூங்காவனத்தில் நான் உன்னோடு விளையாடியது ஞாபகம் இருக்கிறதா? மாலைக் காலத்திலே, விநாயகர் எழுந்தருளிய அரசும் வேம்பும் வளர்ந்த மணிமேடையினருகிலே நாம் நின்று கொண்டிருக்கையில். நான் உன்னை நோக்கி, "நாமிருவரும் இவ்வேம்பும் அரசும் போல இருக்கிறோமல்லவா? நீ—வேம்பு; நான் அரசு;" என்றேன் அதற்கு நீ—"அத்தான்! நீங்கள் "அரசு" என்பது ஒக்கும். அரசு—ராஜா—நடராஜா கனகசபாபதி. ஆனால் நானென்ன வேம்பா? வேப்பங்காய் கசக்கும். பிள்ளை பிறந்து பிறந்து சாகக் கொடுக்கிறவர்கள் பிள்ளைக்கு வேம்பு என்று பேரிட்டால் எமன் கூட அதைத் தீண்டமாட்டானாம். அப்படித்தானே! நான் வேம்பு—இல்லை! ஆனால் நான் வேண்டுமானால் ஒரு உவமை சொல்கிறேன். இதோ!—இப்பூந்தொட்டியைப் பாருங்கள். நடுவிலுள்ள கொழு கொம்பைப் பற்றிக்கொண்டு—பூங்கொடி சுற்றிச் சுற்றி வளர்கிறது. கொழு கொம்பு இல்லாவிட்டாற் பூங்கொடி செழித்து வளராதல்லவா?"—என்றாய். நானும் உன் உவமையை மெச்சி, ஆஹா! நீ மிக்க அறிவு படைத்த பெண். புலவர் ஒருவர் கூட முருகக் கடவுளைத் துதிக்கும் பொழுது,

"அலர்கொடி இரண்டு படர் ஒருகொழு கொம்பினுடன்
அம்புலீ ஆட வாவே" [அரிகை முருகன் பிள்ளைத் தமிழ்.

என்று பாடி யிருக்கிறார்" எனச் சொல்லி உன் கன்னத்தைக் கிள்ளி முத்தமிட்டேன். அவ்வாறு முத்தமிட்ட நேரத்திலே, உன் தாயார் அங்கே வர, அவர்கள் முக மலர்ந்து,—"ஏதேது! இப்பொழுதே உங்களைக் கலியாண முடித்துத் தனி வீட்டில் குடி யிருத்திவிட்டால் ஒழுங்காய்க் குடும்ப நிர்வாஹஞ் செய்வீர்கள் போலிருக்கிறது'

என்று கூறி நம்மை அழைத்துப்போய்த் தின்பண்டங்கள் கொடுத்தனுப்பியது ஞாபகமிருக்கிறதா?

இன்னொரு சமயம், நான் என் பெற்றோரோடு ஒரு மாதம் தென் காசிக்குப் போய்த் திரும்பிவந்து, "என்ன ராஜம்மா! என்னை மறந்து விட்டாயே! அழகான ஒரு அருட்பா பாடு" என்றேன். உடனே நீ சற்றும் தயங்காமல்,

"உன்னை மறந் திடுவேனோ? மறப்பறியேன்: மறந்தால்
உயிர்விடுவேன் கணந்தரியேன்; உன் ஆணை; இது: நீ
என்னை மறந்திடுவாயோ? மறந்திடுவா யென்னின்
என்ன செய்வேன்? எங்குறுவேன்? எவர்க்குரைப்பே?
[னெந்தாய்!
அன்னையினுந் தயையுடையாய்! நீமறந்தா யெனினும்
அகிலமெலாம் அளித்திடும்நின் அருள் மறவா தென்றே
இன்னுமிகக் களித்திங்கே யிருக்கின்றேன்: மறவேல்!
இதுதருணம் அருட்சோதி எனக்கு விரைந் தருளே!
(அருட்பா)

என்று நீ பாடிய திருப்பாசுரத்தைக் கேட்டு அருகிலிருந்த என் தந்தையார் உன் தாயாரைப் பார்க்க, அவர்கள் என்னைப் பார்க்க, நான் உன்னைப் பார்க்க, நீ என்னைப் பார்க்க, உடனே நாமிருவரும் அங்குச் சற்றும் தாமதிக்காமல் அவ்விடத்தை விட்டு ஓடியது உனக்கு ஞாபக மிருக்கிறதா? இவை யெல்லாம் பொய்யாய்க் கனவாய்ப் பழங்காய்ப் புனை சுருட்டாய்ப் போயின. அப்பால் நான் மேல் வகுப்புகளுக்குப் போய்விட்டமையால், அடிக்கடி உன்னோடு விளையாடவரும் சந்தர்ப்பம் வாய்க்கவில்லை. நீயும் இலக்கண இலக்கியங்களைக் கற்றுக்கொண்டிருந்தாய். என் தகப்பனார் இறக்கும்பொழுது உனக்கு வயது 12; நீ பாடசாலையில் ஆறாவது வகுப்புப் படித்துக்கொண்டிருந்தாய். அப்பொழுது நான் உனக்கு வீட்டில் வந்து இரண்டு வருஷம் குறள், சிலப்பதிகார முதலியன கற்பித்து வருகையில் பாடசாலையில் வருஷ நிறைவு விழாக் கொண்டாட்டத்தில்

நடைபெறும் பாட்டுப் பாடும் போட்டிப் பரீக்ஷையில் பாடு வதற்காக எனக்கு இரண்டொரு கீர்த்தனைகள் கற்பிக்க வேண்டு மென்று கேட்க, நான்—சிலப்பதிகாரத்திலிருந்து—வழக்குரை காதை; கண்ணகி பாண்டியனது சபையை யடைந்து அவனோடு வாதாடி வழக்குரைக்கும் நெஞ்சை உருக்க வல்ல பாகத்தை அபிநயத்தோடு மனப் பாடஞ் செய்து ஒப்பிக்குமாறு கற்பித்தேன். நீ அதனைப் பரீக்ஷையில் ஒப்பித்து, கேட்டவர் யாவரும் பிரமித்து நிற்கும்படி செய்தனை. அப்பொழுது பரீக்ஷாதிகாரியாய்த் தலைமை வீற்றிருந்த சிங்கம்பட்டி ஜமீன்தார் தீர்த்தபதி ராஜா அவர்கள் உன்னுடைய திறமையை மெச்சித் தங்கப்பதக்கம் அளித்தார்களல்லவா? அதனை நீ கொணர்ந்து என்னிடம் கொடுத்து—"அத்தான்! நீங்கள் தான் இதற்கு உரியவர்கள்" என்று அதனை எனக்கு வற்புறுத்திக் கொடுத்தாய். அதற்கு நான், "என் ஞாபகமாக நீ இதனை எப்பொழுதும் அணிந்துகொள்" என்றேன். உடனே நீ, "தங்களுடைய ஞாபகமா? தாங்கள் தான் இவ்வுயிர். இப்படி வேறு பிரித்துத் தாங்கள் பேசுவது அழகா?" என்றாய். நான், சரி, சரி, நமக்குள் இப்பொழுதே இந்தப் பேச்சு வேண்டாம். "காத்திருந்தவன் பெண்டாட்டியை நேற்று வந்தவன் கொண்டு போனான்" என்ற கதையாய் விடின், நாம் என்ன செய்வோம்? எல்லாம் வரவரப் பார்த்துக்கொள்வோம்;" எனவே, நீ முகம் கோணிப் பாடத்தைச் சட்டென முடித்து விட்டு வீட்டிற்குள் போய்விட்டாய். அதற்குச் சிலநாட் பின்னர்த் தானே நின் தாயார் நீராப்பிணியாற் பீடிக்கப் பெற்றிறந்தனர். அதனால் அன்றைய சம்பாஷணையே நமது கடைசிச் சம்பாஷணையாய் முடிந்தது. நீயும் அடியோடு மறந்திருப்பாயென்றே யிதுவரை யெண்ணியிருந்தேன். நான் நுங்கள் வீட்டுத் தர்பார்களை உத்தேசித்து உன் அன்பை மறக்காவிடினும், உன்னோடு கூடி வாழலாம் என்ற நம்பிக்கையை அறவே ஒழித்து விட்டேன். என்னினும் ஏழையாய், சிறிது கல்வியறிவு பெற்ற, குடும்ப நிர்வாகத்திற்குப் பொருத்தமான ஒரு பெண்ணையே மணந்து கொள்ள விரும்பியுள்ளேன். உன்

னைத் தண்ணீரிலிருந்து காப்பாற்றி உன்னோடு பேசியது முதல் இந்த எண்ணம் சலிப்படைகின்றது. நீ சொல்லிய சொல்லொன்று என்னை முழுதும் மயங்கச் செய்கின்றது. "தங்களுக்கு உரிமையுடைய இவ்வுடல் வேறொருவர் கையிலகப்படுமா!" என்ற ஒரு வாக்கியம் எவ்வளவு விழுமிய பொருள் செறிந்து விளங்குகின்றது. ஆயினும் இதனால் பெரிய அல்லல்கள் விளையுமே யன்றி உண்மையாய் ஏதேனும் கைகூடுமென்பது தோற்றவில்லை. நான் உன் கணவனுதற்கு யோக்கியதை யுடையவனல்லேன். நீ பெற்றோர் சொற்படி கேட்டுச் சீமானொருவனை மணந்து சுகமாய் வாழ்க. இன்பம் பெருகுக." என்று தன் மனத்தைத் திடப் படுத்திக் கூறியவாறே கண்ணை மூடித் தூங்கிவிட்டான்.



## அத்தியாயம் 3.

## நெருப்புப் பற்றி எரிகையில் காற்றும் அடித்தது.

மணி 12க்கு மேல் இருக்கும். இராஜம்மாள் கண்ணை விழித்துப் பார்த்தாள். மெய்ம்மறந்து அவ்வளவு நேரம் தூங்கியது அவளுக்கே அதிசயமாயிருந்தது. கண்ணைத் துடைத்துக்கொண்டே நிமிர்ந்து பார்த்தாள். கண்ணுக்கு எதிரே ஆடவனொருவன் நிற்பது போலத் தெரிந்தது. உற்று நோக்கினாள். அவ்வாடவன், தனது உள்ளங் கவர் கள்வனாகிய கலியாணபுரத்துறை கனகசபாபதியாகத் தென்பட்டான். உடனே, "ஆஹா! என் ஆசைப் பெட்டகமே! ஏழையேன் மீது இவ்வளவு அன்பு கூர்ந்து இந்நேரத்தில் இங்கெழுந்தருளிய இன்னருட் கருணையை என்னென்பேன்! என்னருகில் வாருங்கள். தூர நிற்றல் அழகோ? இத்தகைய அன்பு என் மீது இல்லையா? தாமதம் ஏனோ? தயை புரியாய்!" என இரங்கிக் கூறினாள் இராஜலக்ஷ்மி. ஆனால் இவ்வளவு கனிந்து கூறியும், காதலன் அருகில் நெருங்கி வருவதாகக் காணப்படவில்லை. அவனது அழகிய முகத்தில் இளகிய புன்முறுவல் அரும்பியது. மறுபடியும் அம்மடமங்கை, "என்னருமைக் கண்ணாள! என்னை என் இங்ஙனம் முறுவலித்தல் வேண்டும்? சரி, சரி; தாங்கள் நின்று கொண்டிருக்க நான் உட்கார்ந்திருக்கிறேனென்ற கோபமோ? இதோ, நானே தாங்கள் பால் வலிய வருகிறேன்."—என்றுஇருக்கை விட்டெழுந்தாள். காதலன் நின்ற இடத்தினருகிற்சென்றாள். காதலனது கழுத்தைக் கரங்களாற் கட்டிக்கொண்டாள். "உத்தம அன்பீர்! என்மீது சித்தம் வைத்து, இன்ப முத்தம் தந்து, ஏழைமுகம் பாரீரோ!" என்று கூறியவாறே காதலனைத் தழுவ முயன்றாள். தழுவ முயன்றவள், மேன்மாடத்தின் வெளித்தெற்றியிலே தொட்டியில் வைத்திருந்த குரோட்டன்ஸ் செடியையே எட்டிப்பிடிக்கும்படி நேரிட்டது. இதென்னை? எனத் திகிலடைந்து எறிட்டுப்பார்க்கையிற் காதலனைக் காணவில்லை. அவள் மனம் அலைகடல் துரும்புபோலத் தத்தளித்தது. தான் கண்டது, கனகசபாபதியின் பொய்யுருவே என்பது அவளுக்

குத் தெளிவாயிற்று. இது வன்றோ காதல்? காதலின் உண்மை நுணுக்கம் இப்பொழுதன்றோ வெளிப்படுகின்றது? பிறகு ராஜலக்ஷ்மி, கலங்காத வண்ணம் கலங்கிக் கட்டிலில் வந்து சாய்ந்து விட்டாள். சிறிது நேரம் கழித்து—"என் இருதயத்தில் எழுந்தருளிய இன்பத் தெய்வமே! அன்புக் கோட்டையே! இன்று உருவெளித் தோற்றமாய்க் காட்சியளித்து என்னை ஏமாற்றிய தங்களை நேரிலேயே கண்ணாரக் கண்டு களிப்பேன்" என வாய் விட்டுச் சொல்லிக்கொண்டே எழுதும் மேஜையினண்டை போய் உட்கார்ந்தாள். பின் வருமாறு ஒரு காகிதத்தை யெடுத்து வரைந்தாள்:—

நாளை மதிபோய் மறையும் வேளை,
காளை யனையீர், கண்ணுள் மணியீர்!
பொழில்வாய் வருவீர்! எழில்வாய் தருவீர்!
வாரா தொழியின் அறியீர் உயிரே!

காகிதத்தை மடித்தாள். பொழுது விடிவது எப்பொழுது? என ஏங்கி யிருந்தாள். சாமக் கோழி கூவிற்று. வானத்திற் காகங் 'கா கா' எனக் கரைந்தது. ஆகாயம் வெள்ளென வெளுத்தது. பொழுதும் பொள்ளெனப் புலர்ந்தது. அடுத்த வீட்டுச் 'சம்பந்தம்' என்னுஞ் சிறுவன், "அக்கா! அக்கா!" என்று கூப்பிட்டுக்கொண்டே, மாடியிலேறி இராஜம்மாள் அறைக்குள் நுழைந்தான்; "எனக்குக் கணக்குச் சொல்லிக்கொடு; இன்று ஏழு மணிக்கே பள்ளிக்கூடத்துக்குப் போகணும்," என்றான். ராஜலக்ஷ்மி, "தம்பி! நீ நல்ல பிள்ளை. நானே உன் எழுத்துப்போல எழுதிக் கணக்குப் போட்டு வைத்து விடுகிறேன். நீ போய், சாப்பிட்டுவிட்டுச் சட்டை போட்டுக் கொண்டுவா. வந்து நோட்டுப் புஸ்தகத்தை யெடுத்துக்கொண்டு நேராய் பள்ளிக்கூடத்துக்குப்போ என்றாள். சம்பந்தனுக்குச் சந்தோஷம் வந்துவிட்டது. "பேஷ்! பேஷ்! அக்கான்னா நீ தான் அக்கா" எனத் தமாஷ் பாடிக் கொண்டு குதித்து ஓடினான். ஐந்து நிமிஷத்தில் திரும்பி வந்து விட்டான். "கணக்குப் போட்டிட்டையா அக்கா!" என்றான். "சம்பந்தா! கீழே இறங்கிப் போய்ச்

சித்தி என்ன செய்கிறாள்! என்று பார்த்துவா" என்றாள். அச்சிறுவன் ஓட்டமாய் ஓடிச்சென்று மடமடவென்று படிக்கட்டுகளினிறங்கினான். வீடெல்லாம் நன்றாய்ப் பார்த்து விட்டுத் திரும்பினான். "அக்கா—சித்தி, குடத்தை எடுத்து கிட்டுத் தண்ணீருக்குப் போயிட்டா. கணக்குப் பிள்ளை வாசல்லே நிற்கிறார். வெளியே போயிருப்பாரு இதற்குள்ளே!" என்றான். "அப்படியா சங்கதி—சம்பந்தா, இன்னொருதரம் கீழே போய், கணக்குப்பிள்ளை போய்விட்டாரா என்று பார்த்துவா," என்று மெதுவாய்க் கூறினாள்.

அதற்குச் சிறுவன், "என்ன அக்கா! சும்மாச் சும்மா மாடியிலே ஏறி யிறங்கச் சொல்றே. கணக்குப் போட்டிட்டயா இல்லையா? இல்லென்னா, தந்துடு, பள்ளிக்கூடத்துலே போயி யாரேன் பார்த்துக் காப்பி யடித்து வாத்தியாரிட்ட காண்பிச்சுடுறேன். அக்கா, தந்துடு நோட்டு" என்றான். அதற்கு ராஜலக்ஷ்மி, "தம்பி, காப்பியடிப்பது பெரிய தப்பிதமல்லவா? படிப்புக்கு மிகுதியும் கெடுதல்" என்றாள். சம்பந்தன் சிரித்துக்கொண்டு, நல்லாயிருக்குது கதை. இப்போ, நீயே கணக்குப் போட்டுக் கொடுத்தாயே. இது மாத்திரம் ஒழுங்காயிருக்கோ?" என்று கேட்டுக் கல கலவெனச் சிரித்தான். ராஜலக்ஷ்மி சமாளித்துக்கொண்டு, "கெட்டிக்காரப் பயல்டா நீ, கணக்குப் போட்டு முடித்து விட்டேன். நீ எனக்கு ஒரு உதவி செய்யவேண்டும். அதாவது, இந்தச் சிறு காகிதத்தை, உன் பள்ளிக்கூடத்துக்கு மேல்பக்கத்து வீட்டிலே குடியிருக்கிற கனகு அத்தானிடம் கொடுத்துவிடு; ஆகட்டுமா; சம்பந்தம்?" என்றாள் சம்பந்தன்—"யார் கனகத்தான்? எங்கள் கணக்கு ஸார்; அவுகதானே, கொடுத்துடுறேன்." ராஜலக்ஷ்மி—அவர்கள் "கணக்கு உபாத்தியாயரா! எனக்குத் தெரியாதே. நீ இந்தக் கடுதாசியைக் கொடுக்கிறது, வேறு ஒருவருக்குந் தெரியக் கூடாது." பையன்—"நல்லது அக்கா!" என்று காகிதத்தை வாங்கி மடியில் வைத்துக்கொண்டு போனான். போனவன் கனகசபாபதி தன் வீட்டு வாயிலிலேயே நிற்கக் கண்டு—

'ஸார்! எங்கக்கா, உங்களுக்கு ஒரு கடுதாசி கொடுத்தா' என்று மிகவும் பணிவோடு கடிதத்தைக் கொடுத்துத் தலை குனிந்து வணக்கமாய் நின்றான். நின்று விட்டு "நான் போகட்டுமா, ஸார்?" என்றான். அவன் முதுகைத் திருப்பினானோ, இல்லையோ! அதற்குள், அங்கே ஒய்யார நடை நடந்து, சிங்காரச் சிரிப்புச் சிரித்து உடலைக் குலுக்கித் தலையை யாட்டிக்கொண்டே எதிர்ப்பக்கத்திலிருந்து வந்த காமாட்சிபாச்சி, "யாரடா, உங்கக்காள்—ராஜம்மாளா?" என்றாள். பையன், "அதெல்லாம் ஒண்ணு மில்லெ" என்று சொல்லிக் கொண்டே பள்ளிக்கூடத்துக்குள் ஓடிவிட்டான்.

காமாட்சியாச்சி கனகசபாபதி முன்னர் எமசொரூபமாக வந்து நின்றாள். "என்னடா, இது அநியாயமாயிருக்கிறது. உங்கள் இரண்டு பேருக்குள்ளே இருக்கிற அந்தரங்கம் எனக்குத் தெரியாமலில்லை. என்னை ஏமாற்ற முடியாது. பையனும் சிறுக்கியும் சேர்ந்து ஊரைக் கேலி பண்ணுகிறீர்கள். உனக்கு ஊரை விட்டுப் போகிற காலம் மிகவும் நெருங்கி விட்டது. கொழும்புப் பிள்ளையும் மாணிக்கமும் ஊருக்கு வந்து சேரட்டும். ஒரு கை பார்க்கிறேன்." இதற்குள் கனகசபாபதிக்குக் கோபம் மீறிவிட்டது. "அப்பாடா நீ மிக்க ஒழுங்கு. நான் பதிவிரதா சிரோமணி. என் அக்காள் கேடு கெட்ட அவிசாரி என்ற கதையாயிருக்கிறது. நான் ஊரை விட்டுப் போவது நிச்சயமானால் நானும் ஒரு கை பார்க்காமலா விடுவேன்? ஆண்பிள்ளை சிங்க மென்றறிந்து கொள். ஊரெல்லாம் உன் பக்கம் என்று கொட்டம் அடிக்காதே. இவ்வுலகமெல்லாம் எனக்குச் சொந்தம். உன் யோக்கியதை ஊர் முழுதும் நாறிக்கிடக்கிறது. நீ மற்றவர்களுக்குப் புத்தி சொல்ல வந்து விட்டாய். வாயை மூடிக் கொள். ஊற்றை வாய் நாற்றம் வீசப்போகிறது" என்ச் சரமாரியாய்ப் பொழிந்தான். காமாட்சியாச்சிக்குத் தலைகால் தெரியவில்லை. அளவுக்கு மிஞ்சிய கோபமும் தாபமும் மேலிட்டன. என்னடா! நேற்றுப் பிறந்த பயலுக்கு இவ்வளவு தெம்பா! இரண்டு நாளில், என் அதிகாரம் எப்படி யிருக்கிறது? உன்னுடைய வீரத்தனம் தான் அதனை எப்படி

அடக்குகிறது என்பதை எல்லாம் பார்த்து விடுகிறேன்'' என்று கர்ஜித்துக் கொண்டே சென்றாள். மங்கையர்க்கரசி இக்கலவரங்களைக் கேட்டு வீட்டிற்குள்ளிருந்து வெளியே வந்து, "என்ன, கனகு—இவளோடு வாக்குக் கொடுக்க வேண்டாம், என நேற்றே சொல்லவில்லையா? உனக்கு இவளோடு என்ன பேச்சு? நேரமாச்சு பள்ளிக்கூடத்துக்குப் போ" எனக் கூறிச் சென்றாள்.

கனகசபாபதி அன்னை கூறிய வார்த்தைகட்கு மறுமொழி ஒன்றுஞ் சொல்லாமற் பள்ளிக்கூடத்துக்குப் போய் விட்டான். இன்று அவனுக்கு வேலை சரியாய் ஓடவில்லை. காலை 10½ மணிக்குப் பாடசாலை முடிவு நேரமாகையால் நேரே வீட்டுக்கு வந்து, தான் வழக்கமாக வியாசம் எழுதி வரும் "ஜெய பாரதி" என்னும் தினசரிப் பத்திரிகைக்கு அபூர்வமானதொரு விஷயத்தை யெழுதி யனுப்பினான். அப்பத்திரிகை, சென்னைப்பட்டணத்திலிருந்து பிரபல தேச பக்தர் ஸ்ரீமான் S. வெங்கட்டராமன் அவர்களை ஆசிரியராகக் கொண்டு பல அரிய கட்டுரைகளும், புத்தம் புதிய தந்திகளும் தேச முன்னேற்ற வழிகளும் தாங்கி வெளிவருவது ஆகையால், மறுநாளே கனகு எழுதிய கட்டுரை பிரசுரமாகி விடும். இராஜம்மாள் எழுதிய கடிதத்தைத் திரும்பத்திரும்பக் கனகு படித்து முடித்தான். மாலை கழிந்து இரவும் நெருங்கிற்று. அன்று நாலாம்பிறை. மதியொளி மழுங்கி, எங்கும் இருள் பரந்தவுடனே, கனகசபாபதி வீட்டை விட்டு வெளியே கிளம்பினான். இராஜலக்ஷ்மியின் வீட்டுப்பின்புறத்தில் வாய்க்காற் படிக்கரை போயடைந்தான். அங்கு, அதற்கு முன்னமேயே வேறொரு ஆடவன் வந்து நின்று கொண்டிருப்பதை அவன் பார்த்தான். கனகசபாபதிக்குச் சிறிது ஐயம் ஏற்பட்டு, நின்று கொண்டிருந்த அம்மனிதனுக்கு அருகிலே போனான். அவ்வாறு அங்கே நின்றிருந்தவன் ராஜம்மாள் வீட்டுக் கணக்கனாகிய ஆறுமுகம் பிள்ளை. ஆறுமுகம் பிள்ளை, கனகசபாபதியே அங்கு வந்தவனென்பதை யறிந்து, "யாரடா? திருட்டுத்தனமாக, பின்பக்கத்திலிருந்து வீட்டிற்குள்ளே நுழைந்து திருடப் பார்ப்பவன்? போடிரு

தவடையிலே" என்று வாய் குழறிப்பேசினன். அப்படிப் பேசிய கணக்கனது வாயினின்று குப்பென்று கள்ளுநாற் றம் கிளம்பிற்று. கள் வெறியோடு நிற்பவனை முகத்திலே ஓங்கியறைந்தால், கீழே விழுந்து விடுவான் என்பது கனகு க்குத் தெரியும். ஆகையால் அவன், ஆறுமுகம் பிள்ளையை முகத்திலே படீரென்று ஓங்கி அறைந்தான். ஒரே அறை யில் ஆறுமுகம் பிள்ளை, வாயிலிலிருந்து நுரை நுரையாய்க் கக்கிக் கொண்டு கீழே விழுந்து மூர்ச்சை போய்ச் செத்த பிணமாய் விட்டான். அதே சமயத்தில் இராஜம்மாள் அங்கு வந்து சேர்ந்தாள். "அத்தான் மகா சூரர் போலிருக்கிற தே! முரட்டு மனிதனை ஒரே யடியில் உருட்டி விட்டீர்கள். நான் இங்கே வந்து பதினைந்து நிமிஷங்களாயின. இவன் இங்கு நிற்பதைப் பார்த்து, வெளியே வரப் பயந்து சுவ ரோரமாய்ப் பதுங்கி நின்றிருந்தேன். நல்ல வேளையாய், ஆறுமுகம் பிள்ளை இன்னும் சில நிமிஷத்திற்கேனும் எழுந் திருக்க முடியாமற் செய்து விட்டீர்கள். இனி நமது அலு வலைக் கவனிப்போம். அவசியமான விஷயத்தை முன்னி ட்டு இந்நேரத்தில் தங்களை இங்கு வரும்படி எழுதினேன். நான் தங்களையே உண்மையிற் கணவராக மனத்தில் வரித் துப் பூசித்து நேசித்து வருகிறேன். தங்களுடைய திருவுள் ளம் யாதோ? அறிகிலேன். எத்தனைபேர் வந்து எவ்வளவு உபதேசித்தாலும், என் விருப்பத்தை மீறி என் பிதா அவர் களும் தமையனும் செய்யத் துணியார்கள். தங்களுடைய சம்மதத்தை யறிந்தே அவர்கள் இங்கு வந்ததும் தெரிவிக்க வேண்டியிருக்கிறது. தலைவர்களாகிய அவ்விருவரும் விரும்பி ச்செய்யும் பொழுது, அவர்களைத் தடுக்க வேறு யாராலும் இயலாது. ஆதலால், என்ன சொல்லுகிறீர்கள்?" எனத் திண்டுக்கல்லுக்கு போனல் இரண்டிலொன்று" என்பது போலக் கண்டிப்பாய்க் கேட்டாள். கனகசபாபதியோ இராஜம் இவ்வளவு தீர்மானமாய்த் தன்னிடம் இவ்விஷயத் தைப் பற்றிக் கேட்பாளென எதிர்பார்க்கவில்லை. ஆகையால் "இன்ன சொல்வ" தெனத் தெரியாமல் ஆடு திருடிய கள் வனைப் போலத் திறுதிறு வெனச் சிறிது நேரம் விழித்த

வாறே இமை கொட்டாமல் நின்றான். பிறகு, அவன் சாவதானமாக, ராஜம்மாளை யுற்றுநோக்கி, "இராஜம் அவசரமாக ஒன்றும் கூறுதே, 'பத்து வந்தாலும் பதட்டமாகாது' என்னும் பழமொழி நீ யறியாததன்றே? குடும்ப நிலைமையையும், உலகாநுபவத்தையும் ஒட்டி எட்டி யோசிக்கையில், இப்பொழுதுள்ள தன்மையிலே நாமிருவரும் தம்பதிகளாவது அவ்வளவு பொருத்தமாகாது. காந்தர்வ முறையில் காதல் மணம் புரிந்து நாமிருவரும் கண்ணுக்கெட்டாத சீமைக்குப் போய் விடுவதென்றாலும், உலகம் நம்மைத் தூற்றும். என் மனம் துணியவும் இல்லை. பெற்றோர் ஆதரவையும் நாம் இழக்க நேரிடும். சுற்றமும் நம்மை முற்றும் வெறுக்கும். நானோ பரம ஏழை. நீ பெரிய சீமாட்டி உனக்கும் எனக்கும் இசையாது. பாலியத்திலே நமக்குள் நடந்த விவகாரங்களை அறவே இனி நீ மறந்துவிடு. நம் இருவரையும் கெடுத்தற்குச் சதியாலோசனைக்காரர் பலர் மும்மரமாக வேலை செய்து வருகின்றனர். நான் என் காதலை அடியோடு மறந்து விட்டேன். நீயும் அவ்வாறே என்னை மறந்து விடுதல் நேரிது. சுகமாகச் சுந்தரத்தை மணந்து நீ மேன்மையாயிருந்தால், உனது சுகமான வாழ்க்கையைப் பற்றிக் கேள்வியுறுவதே எனக்கு மகிழ்ச்சியை யளிக்கும். ஆதலால், பெண்கள் நாயகமே! சகல க்ஷேமங்களையும் இனிதேயடைந்து, நீ நீடூழி வாழ்வாயாக. இனி என்னை இங்ஙனம் இராக் காலங்களில் வருமாறு எழுதாதே." என்று கூறினன்.

இதனைக்கேட்ட மங்கையின் முகம் வெண்டாமரையாய் வெளுத்தது. கண்களிலிருந்து கண்ணீர் முத்து முத்தாய்ச் சிந்திற்று. பிறகு ஒருவாறு, சோகமேயுருவாய அந்நங்கை தன் மனத்தைத் தேற்றிக்கொண்டு, "என் தமையனாரும் தந்தையாரும் என்னைவேண்டுமென்று வணக்கி தங்களை வலிய வந்து கேட்பார்களாயின், தாங்கள் மறுக்கவும் துணிவீர்களோ? ஏனையோரது கோள் குண்டுணிகளும், அவர்கள் செய்யநினைத்திருக்கும் தீங்குகளும் என்னசெய்யும்!" என்று சொல்லிக்கொண்டிருக்கையில், யாரோ அங்குவரும் காலடிச்

சத்தம் கேட்டமையால் "அத்தான், நான் போய்வருகிறேன்; எப்பொழுதும் தங்களுடைய அன்பு அடியாள் மீதன்றி வேறியாரிடமும் செல்லாதிருக்கப் பிரார்த்திக்கிறேன்" எனக் கைகூப்பி வணங்கியவாறே; அவ்விடத்தைவிட்டகன்று ஓடிப் போய்விட்டாள். கனகபாபதி அங்கு சற்றுநேரம் நின்று கொண்டிருந்து, பிறகு வீட்டுக்குப்போய்ப் பல பலயோசனைகளோடு திண்ணையிலே படுத்திருந்தான். அப்பொழுது மங்கையர்க்கரசி, "கனகு! ஊருக்குப் போவதைப்பற்றிய யோசனை எப்படியிருக்கிறது? ஒரு மாதம் பள்ளிக்கூடத்தில் ரஜாவாங்கிக்கொண்டு, இருவரும் எங்கேயாவதுபோய்த் திரும்பி வருவோம். இந்தவூரில் வாழ்வது என் மனதுக்கு ரம்மியமில்லை. நாளைக் காலையில் புறப்படுவதற்குச் சித்தமாயிரு" என்றாள். பிறகு, அடே கனகு! இன்றைக்கு மாலையிற் கடிதம் ஒன்று உன்பேருக்கு வந்திருக்கிறது. சொல்ல மறந்துபோனேன். வயதாக வாக ஞாபக மறதியும் வளர்ந்து கொண்டேபோகிறது." எனக் கூறிக்கடிதம் ஒன்றை எடுத்து வந்து அவன் கையிலே கொடுத்தாள். கனகு "கொலாலம்பூர்க் காகிதம். அண்ணாஜி சிதம்பரம் பிள்ளை எழுதியிருக்கிறார்கள்போலும்" என்று மொழிந்தான் அதன் மேல் அவன் தாய், கடிதம் கனமாயிருக்கிறது. வளைத்து வளைத்து நிரம்ப நிரம்ப எழுதியிருப்பான். படித்துப்பார்த்துக் காலையிலே விஷயத்தைச் சொல்லு. நான் தூங்கப் போகிறேன். தூக்கம் வருகிறது," என்று சொல்லி உள்ளே போய்விட்டாள். கனகசபாபதி கடிதத்தை முழுதும் படித்துப் பார்த்தான். சந்தோஷமும், துயரமும் ஒருங்கே தோன்றின. கடிதத்தை மடக்கிப் பெட்டியில் வைத்தான். அப்பால், அவன் மனதிற் சில கலவரங்கள் ஏற்பட்டன.

"ஆஹா! நான் நேற்றுப் பத்திரிகைக்கு எழுதிய கட்டுரை மிகச்சிறிய அளவினதே. என்றாலும் மிக்க அழகாயமைந்தது. இதுகாறும் நான் ஒருவரைப் பழித்துப் பத்திரிகையில்எழுதியதேயில்லை. இப்பொழுதிருக்கிற'மாறுதலான துணிவு' நேற்றேயிருந்திருந்தால் நான் எதற்காக அநாவசியமாய் ஒருவரைப் பழித்து எழுதவேண்டும், இருந்தாலும்

பொதுவாக ஜனசமூகத்துக்கு ஒருவருடைய கெட்ட செய்கைகளினால் தீங்கு விளைவதாயிருந்தால், அதனை உலகத்திற்கு எச்சரித்தல் அறிவாளியின் கடமையன்றோ? என் எண்ணம் இப்படியிருக்க, இராஜலக்ஷ்மியின் எண்ணம் திண்ணமாயிருக்கிறது. அவள் தன் எண்ணத்தை இம்மியும் மாற்றுவதாகத் தோற்றவில்லை. பெற்றோரிடம் தெரிவிப்பேன் என்கிறாள். இன்னும் அவள் கூறுவதைப்பார்த்தால் கலியாணம் முடிந்தே தீரும் போலவும் தெரிகிறது. திருவுளச்சம்மதம் எப்படி யிருக்கிறதோ? அதனையார் கண்டது? என்ன செய்யலாம்? இன்றைக்கு நேற்று எங்கள் மனத்திலே உதித்த அன்பாயிருந்தால், திடீரென ஏற்பட்டது போலவே திடீரென மறைதலும் முடியும். ஆனால் எம்மிருவருக்கும் அதிபாலியத்திலேயே; விபரம் அறியாத சின்னஞ்சிறு பருவத்தில் தோன்றிய உள்ளன்பு இரத்தக் கலப்பிலேயே உண்டான சம்பந்தம். பழகிப் பழகிப் பெருகி எழுந்த காதல். அந்தக் காதல் இப்பொழுது பொங்கி வழிகிறது. அதனைத் தடுக்க முடியவில்லை. பண்டைத் தமிழ் நாட்டில் காதல் மணமே நடைபெற்று வந்தது ஒத்தவயதும், அழகும், செல்வமும், குணமும், குலமும் உடையாராகிய ஆண்மகன் ஒருவனும், பெண்மகள் ஒருத்தியும், எங்காயினும் ஓரிடத்திலே தனியாகத் தம்முட் சந்தித்து, ஓர் ஆவிற்கு இருகோடு தோன்றினாற்போல, அவ்விருவர் மனத்திலும் காதல் முளைக்கும். உடனே; அவ்விருவரும் தம்முள் மனது ஒத்துக் காந்தருவ மணம் புரிந்துவிடுவர், இங்ஙனமே அப்புறம் சிலதடவைகள் அக்காதலரிவரும் தனியே சந்தித்து இன்பம் நுகர்தல் வழக்கம். நாளடைவில் அவர்களிருவரிடையே விள்ளா நட்பு முதிர்ந்து, காதல் வளர்ந்து, அன்புகனிந்து, ஒருவரை ஒருவர் இன்றியமையாதவராவர். இதனைக் குறிப்பாய்த் தெரிந்துகொண்டு ஊரிலுள்ள சின்னஞ் சிறுமியரும், பென்னம் பெரிய கிழவியரும், கட்டிளமை நீங்காக்காளையரும் இவர்களது கள்ளத்தனமான காதல் ஒழுக்கத்தைப் பலர் அறியப் பறைசாற்றி, அலர் தூற்றித்திரிவர். இவ்வாறு ஊர்அறியப்பெற்றோரும் இதனை

உணர்ந்து அவர்களது உண்மைக் காதலைச் சோதித்துத் தெளிவுற்றுப் பின் அவ்விருவருக்கும் நாடறிய விதிப்படி மணஞ் செய்விப்பார்கள். ஆனால் பெற்றோர்களுக்கு இவர்களது அன்பு சம்மதமாக இராவிடின் அவர்கள் தம் மக்களைச் சிறிது கண்டிக்கத் தொடங்குவர் உடனே காதலன் பழிவருமென்றஞ்சிப் பெற்றோரும் மற்றோரும் அறியாவண்ணம் வேற்று நாடு செல்லுங் கருத்தோடு அர்த்த ராத்திரியே கடுவழி நடப்பான். இதனைக் காதலியும் அறிந்து அவன் போன வழியே சென்று அவனைக் கூடி இருவருமாகக் காடு மேடுகளென்றும் பாராது விரைந்து செல்வர். காதலன்' காதலி மிக மேன்மையாய் வளர்ந்தவளாயிற்றே என்று கலங்குவான். காதலியோ காதல் உணர்ச்சி மிகப் பெற்று எத்தகைய கஷ்டத்தையும் திரணமாத்திரமாக மதித்து "தோகைக்கும் தோன்றற்கும் ஒன்றாய் வரும் இன்ப துன்பங்களே" என்றபடி "உன்னைப் பிரிந்திருந்து தனியாய் இருக்கையில் என் மனம் என்னைச் சுடுவதைக் காட்டிலும், இப்பாலை வனம் என்னைச் சுடுமோ" என்று கூறி அவனை மகிழ்விப்பாள் வெய்யில் மிகுந்த கொடிய பாலை வனம் அவர்களுக்குத் தண்ணிய நிலவெரிக்கும் கடற்கரையாகத் தோற்றும் வீட்டிலே செல்வத்தில் மூழ்கி வளர்ந்த பெண்களது அழகிய மெல்லடி,

"அனிச்சமும், அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெரிஞ்சிப்பழம்:—

என்று அவ்வளவு மிருதுவான அவர் தம் பாதம், செவிலித் தாயர் செம்பஞ்சு ஊட்டுகையில் அதனைத் தாங்கலாற்றாது பையப் பைய என்று பதறி உதறும் சின்னஞ் சிறிய சிவந்த பாதம் காதல் மீதூரப் பெற்றமையால் பட்டப் பகலில் உச்சி வேளையில் காதலரோடு செல்லுகையில் கல்லும் முள்ளும் கூட உறுத்துவது தோன்றாமல் சுகமாக நடந்து வழி வருத்தந் தோன்றாது செல்வர்.

அருமை மகள் காதலனோடு கள்ளத்தனமாக ஓடியதை யறிந்த பெண்ணின் பெற்றோர் தக்க ஆள் பலத்துடன்

சென்று அவர்களைத் தேடிக் கண்டு கொள்வார்கள். பின்னர்க் காதலியின் தாய் கோபத்துடனிருக்கும் தந்தையைத் தேற்றிச் சிபார்சு செய்யத் திருமணம் விரைவிலே சிறப்பாக முடிவு பெறும். இத்தகைய இன்ப மணங்கள் நடந்த நாட்டிலே, வடநாட்டு ஆரியக் கலப்புத் தோன்றித் துன்ப மணங்கள் நடைபெறலாயின. நான் ராஜலக்ஷ்மியை மணக்கும் அதிர்ஷ்டமுள்ளவனாயின் என்னை விட அதிர்ஷ்டசாலிகளும் உலகில் உளரோ? எப்படியிருந்தாலும் எங்கள் இருவருக்கும் மணம் நடக்குமென்பது தோன்றவில்லையே! வேறு யாரையேனும் மணப்பதாக நேரிடின் ராஜலக்ஷ்மி உயிர் தரிக்கமாட்டேன் என்கிறாள். பெற்றோர் துன்பத்திற்குப் பயந்து, அவள் மனமாரவே ஒப்புக்கொண்டு வேறொருவனை மணந்து கொண்டாலும், அவளுடைய வாழ்க்கை இனிக்குமோ? இந்தப் பிறவியிலே நாங்கள் இனிச் சந்திக்க இயலாது. ஏனெனில் எனக்கு இந்த அல்லல்களில் தலையிட்டுக்கொள்ள விருப்பமில்லை. ஆதலால் நான் என் சிற்றன்னை புதல்வனாகிய சிதம்பரம் பிள்ளை, கடிதத்தில் நேற்று எழுதியுள்ளபடி சிறிது காலம் கோலாலம்பூருக்குச் சென்று அவரோடு தங்கியிருத்தல் நலம். அங்கேயே நமது நேசர்களும் சிலரிருக்கின்றனர் தமிழறிந்த மக்களும் மிகுதியாக இருக்கின்றனராம் அவ்விடத்தில் நமக்குத் தகுந்தாற் போல வேலையொன்று கிடைத்துவிட்டால் இந்தத் திசையில் எட்டி மிதிக்க வேண்டிய அவசியமில்லை ராஜம்மாள் நாளேற வேற மனம் மாறுதலையடைந்து சுகமாக வாழ்ந்திருப்பாள். இதுவே சரியான யோசனை ராஜம்மாள் நம்மிடத்தில் நேற்றிராத்திரி கூறியவாறு தன் தந்தையாரையும் தமையனையும் சரிக்கட்ட முடியாது. தந்தைக்கு இளைய சம்சாரத்தின் மீது அளவு கடந்த வாஞ்சையுண்டு. காமாட்சியாச்சியிடம் அவருக்கு அபார நம்பிக்கையும் அன்பும் உண்டென்பது நமக்குத் தெரியும் சிவகாமியம்மாள் தன் தம்பிக்கே ராஜம்மாளை விவாகஞ் செய்விக்க விரும்பி அதற்கு வேண்டிய வேலைகள் செய்து வருகிறாள். ராஜலக்ஷ்மியின் தமையனுக்கும் சுந்தரத்துக்கும் பாலிய முதலே பலத்த நேசமுண்டு. மாணிக்கத்தின்

சொற்ப சகவாச தோஷங்கட்கும் முதற் குரு சுந்தரமேயன்றோ? இப்பொழுது மாணிக்கம் சென்னையிலிருந்து திரும்பி வருகையில் முற்றும் புதிய மனிதனை மாறி நாகரிகமே உருவெடுத்து வந்தாற் போல வருவானென்பது நிச்சயம். மாணிக்கம் சுந்தரத்தின் இஷ்டத்திற்கு மாறுதலாக எதுவும் செய்யமாட்டானென்பது உறுதி. மாணிக்கத்தைக் கெட்ட வழிகளில் திரும்பாதபடி நான் அவனுக்கு நற்புத்தி கூறும்பொழுதெல்லாம் சுந்தரம் எனக்கு விரோதமாய்க் குறுக்கே நின்று, எனக்குத் தெரியாமல் அவனைக் கெட்ட வழிகளிற் புகுத்தி வந்தது எனக்கு மறந்து போய் விட்டதா? இந்தச் சுந்தரம் ஒருவன் நமக்கு விரோதியாய்க் கிளம்பி ராஜலக்ஷ்மியை மணக்க நிச்சயித்திருக்கிறான், மேலும் நேற்று ஆறுமுகம் பிள்ளை கால்வாய்க் கரையில் இராத்திரி அந்நேரத்தில் வந்து நின்றதைக் கவனித்தால் அவனும் ராஜலக்ஷ்மியை நாடியே அலைகிறானென்பது தெளிவாய்த் தெரிகின்றது. இவன் இப்படி அடிபோட்டுக் கொண்டிருப்பது காமாட்சிக்குத் தெரியுமோ தெரியாதோ? அவள் எத்தனை திருகல் திருகுகிறாளோ? தெரியவில்லை அவள் வேறொரு மாப்பிள்ளைக்கு 2000, அல்லது 3000 என்று பேரம் பேசிக்கொண்டு கொழும்புப் பிள்ளை வந்ததும் சிபார்சு பண்ணுவாள். எந்தக் கையிலே தனக்குப் பெருவாரிப் பணம் வருகிறதோ அந்த இடத்திற்கு ராஜலக்ஷ்மியைக் கொண்டுபோய்ச் சேர்க்க முயலுவாள். இந்த மாப்பிள்ளைதான் அசகாய சூரன்; மணலைக் கயிறாய்த் திரிப்பான்; வானத்தை வில்லாக வளைப்பான். என இல்லாததும் பொல்லாததும் சொல்லித் திருநாவுக்கரசுப் பிள்ளையின் மனத்தை மாற்றி விடுவாள். இப்படி எத்தனையோ பெண்களுக்காக இவள் பேரம் பேசிக் கைக்கூலி வாங்கிக்கொண்டு முடித்திருக்கிறாள்! இந்த வழியிலே இவள் சேர்த்துள்ள பணத்திற்கு அளவு சங்கை கிடையாதே! மேடை வீட்டு மீனாட்சிநாத பிள்ளை மகளைச் சொந்தமான முறை மாப்பிள்ளைக்குக் கட்டிக் கொடுப்பதாக நிச்சயித்திருந்தார்கள். வெற்றிலை பாக்குக் கூடக் கைமாற்றி

விட்டார்கள் அகற்கு அப்புறம் காமாட்சி திருநெல்வேலிச் சர்க்கரையப்ப பிள்ளை மகன் சீனியப்பனுக்கு அந்த பெண்ணை எத்தனை ஏமாற்றங்களோ செய்து கலியாணத்தை முடித்து விட்டாள். கோர்ட்டிலே வியாஜ்ஜியம் கூட நடந்தது முதலிலே பேசியிருந்த மாப்பிள்ளை வீட்டுக்காரரே ராஜிக்கு வந்து இவர்களோடு சமாதானம் பேசி கோர்ட்டுச் செலவு தொகைகளை ஒப்புக்கொண்டு கொடுத்ததுமன்றிக் கூடவேயிருந்து காமாட்சி குறிப்பிட்ட மாப்பிள்ளைக்கு நடந்த கலியாணத்தையும் சிறப்பித்தார்கள். அந்தக் கலியாணம் முடிகிறவரை சாமாட்சிக்கு மூன்று கையிலிருந்தும் பணம் ஏராளமாய் வந்து கொண்டேயிருந்ததாம். இறுதியில் அந்தப் பணத்தைக் கொண்டு மொத்தமாய் ஒரு கோட்டை விரைப்பாடு வாங்கினளாம். அவள் எடுத்த கட்சி ஒரு நாளும் தோற்பதேயில்லை ராஜலக்ஷ்மியின் அழகு குணம் பொருள் முதலியவைகளுக்கு ஆசைப்பட்டு அவள் தகப்பனர் கொழும்பிலிருந்து வந்ததும் ஆயிரக் கணக்கான மாப்பிள்ளை வீட்டுக்காரர்கள் வருவது திண்ணம். காமாட்சி எந்தக் கையிலே நாலு ஸ்தானப் பணம் வரும் என்று பார்த்து அந்தக் கட்சிக்குத் தாகு பேசி முடிக்கப் பார்ப்பாள் ராஜலக்ஷ்மியை எவனேனும் ஒரு தொண்டு கிழவனுக்கு அல்லது முறை கெட்டவனுக்கு முடித்துப் படுகுழியிலே ஆழ்த்திவிடுவாள். இதுவே உறுதியாய் நடக்கப் போகிற காரியம். இராஜாம்பாள் நினைப்பும் எனது நினைப்பும் பகற் கனவுகள் தான். என் கண்மணி! இனி அவ்வாறு சொல்வது கூடக் குற்றம். உனக்கும் எனக்கும் இந்தப் பிறவியிலே சொந்தம் இல்லை. உன்னை நான் கலியாணம் பண்ணுதற்கேனும் நானும் நீயும் இன்னொரு பிறவி எடுத்தல் வேண்டும். அப்படிப் பிறந்தாலும் இந்தப் பாழும் நாட்டிலே பிறக்காமல் காதல் மணமே சிறந்தது எனக் கொண்டாடும் வேறெந்நாட்டினும் பிறத்தல் வேண்டும் இல்லாவிட்டால் நமது ஆன்மா சாந்தியடையாது. எல்லாம்வல்ல இறைவன் ஒருவன் உளன் என்பது உண்மையாயின், அவன் எவ்வுயிர்களிடத்தும் கருணையுடையவனயின் நமது

மனோரதத்தை நிறைவேற்ருனு? ஏ ஜகதீசா! எல்லாம்—எனையாளும் ஈசன் செயல்—என்று கடவுளைத் தியானித்த வண்ணம் நித்திரை போயினன். தனக்கும் இராஜம்மாளுக்கும் சொல்லமுடியாத பல பல துன்பங்கள் நேரிடுவதாகவும் காடு செடிகளிலே தான் ஓடுவதாகவும் திருடர்கள் கையிலகப்பட்டுக் துன்புறுவதாகவும் எத்தனையோ கொலைகள் நடப்பன போலவும் துன்பங்கள் நிறைந்த கனவுகள் கண்டான். ஒவ்வொரு கனவினிறுதியிலும் அவன் திடுக்கிட்டுக் கண்விழித்து எழுந்து சிறிது நேரம் உட்கார்ந்திருந்து எண்ணாத வெல்லாம் எண்ணிக் கண்ணயர்ந்தும் பிறகு சிறிது நேரம் கழித்து மறுபடி எழுந்து உட்கார்ந்தும் இப்படியாக உள்ளமும் உடலும் ஒருங்கே வேதனையடைந்தான். நடுயாமத்தில் ஏதோ கனவு கண்டு இராஜம்மாளே பிறந்து விட்டாளோ என்று கூடச் சந்தேகித்து இராஜம்மாள் வீடு வரையிலும் போய்த் திரும்பினுன். பிறகு ஒருவாறு தேறி மனதைத் திடப்படுத்திக்கொண்டு கனவுகளெல்லாம் நமது மனத்தில் எண்ணுகிற எண்ணங்களின் பிரதி பிம்பங்களே யன்றி வேறில்லை இதற்கு நாம் கவலைப் படவேண்டிய அவசியமே யில்லை கனவுகளிற் காண்பனவெல்லாம் உண்மையில் நடக்கக் கூடியன என்றெண்ணுவது பொய். பழங்கிழடுகள் "சொப்பன சாத்திரம் குப்பண கோத்திரம்" என்று பொய்யும் புளுகும் எழுதி வைத்துப் போயின இவைகளெல்லாம் தகர்த்தெறியப்படும் அந்நாளே நம் நாடு க்ஷேமமடையும் நன்னுள் என்றெண்ணினுன்.



## அத்தியாயம் 4.

## சென்னைச் சிங்கார விலாசம்.

சென்னைப்பட்டணத்திலே சிங்கப்ப நாய்க்கர் வீதியின் நடு நாயகம் போல விளங்குவது "சிங்கார விலாசம்" இதனுடைய பெயருக் கேற்ப இம்மாளிகை சிங்கார மயமாகவே தோற்றும். இது அடுக்கடுக்காய் ஐந்தாறு மேடைகளமைந்த அழகிய பெரிய வீடு. உள்ளே பெரியவும் சிறியவுமான நூற்றுக் கணக்கான அறைகளுண்டு. ஏக காலத்தில் பலநூறு வாலிபர்களையும் இளநங்கையர்களையும் ஜோடி ஜோடியாகக் காணத் தகுந்த சிங்கார உலகம் சிற்றின்பச் சீமை, பூலோக கந்தருவ நாடு, என்று இதனைச் சொல்லலாம் எந்நேரமும் வீணாகானமும் மேனகா நடனமும் இடையறாது முழங்கிக் கொண்டிருப்பதை இங்குக் காணலாம். கீழிரண்டு தளங்களிலுள்ள அறைகள் வாடகைக்கு விடப்பட்டிருந்தமையால் அவைகளிற் பெரும்பாலும் சினிமா நடன மாதரும் நடிக வாலிபரும் நாகரீகக் கனவான்களும் வாசம் செய்திருந்தனர். மேல் தளங்கள் விதவா விடுதிகளாக அமைக்கப்பட்டிருந்தன. கணக்கில்லாத பாலிய விதவைகள் அங்கு வாசஞ் செய்தார்கள் கீழ்த்தளத்தில் விதவா விவாக சபைக்காரியாலயம் அமைக்கப் பட்டிருந்தது.

விதவைகள் பலர் இந்த சபையின் ஆதரவில் அந்த மாளிகையிலே வாசஞ் செய்தார்கள். இவர்கள் ஒவ்வொருவரைப் பற்றிய வரலாறுகளும் நிழலுருவப் படங்களும் (போட்டோ) இக்காரியாலயத்தில் சொற்ப விலையிற் கிடைக்கப்பெறும். விதவா விவாக சபையின் நிர்வாகம் முழுமையும் பத்துப்பன்னிரண்டு உறுப்பினர்கள் அடங்கிய வாலிபர்களால் நடை பெற்று வந்தது. அவ்வுறுப்பினர்களனைவரும் பெரிய பெரிய பிரபுக்கள் வீட்டுப் பிள்ளைகள் புதிய சீர்திருத்தத் துறையிலே ஈடுபட்டு உழைக்கும் நவ நாகரீகர்கள் விதவா விவாகத்தைப் பற்றிப் பிரசாரஞ் செய்யும் பிரசாரகர்கள் பலர் நியமிக்கப்பட்டிருந்தனர். அவர்கள்

இச்சங்கத்தின் ஆதரவில் ஊர் ஊராகச் சென்று பிரசாரஞ் செய்தும் பத்திரிகைகளுக்கு எழுதியும் உழைத்து வந்தார்கள்.

கலியாணம் என்பதன் உண்மை அர்த்தத்தை அறியக் கூடச் சக்தியில்லாத சிறு பருவத்திலே பொம்மைகளுக்குக் கலியாணம் நடத்துவது போலப் பால்குடி மறவா வயதிலே மணம் செய்வித்து, அத்தம்பதிகளில் மணமகன் கலியாணம் ஆன சில காலத்திற்குள்ளே காலரா, பிளேக் முதலிய கொள்ளை நோய்களால் இறந்து போக அதனால் எத்தனையோ சிறுமிகள் கைம்பெண்களாகிச் சகல சுக போகங்களையும் இழந்து ஐந்து வயது முதல் சாகும் பரியந்தம் முக்காடிட்டு மூலையிலே கிடத்தப்படும் மூடத்தனமான அறிவற்ற கொடிய செயல்களையும் தரமில்லாத வயதுகளையுடைய தம்பதிகளை அதாவது பல்லுப்போன கிழவனுக்கு மணவாசை பிடித்துப் பால் குடி மறவாப் பெண்ணை மணம் புணர்ந்தபிறகு கொஞ்சநாட்களில் தடியூன்றிய அக்கிழவன் மண்டையைப் போட்டுவிட அதனால் அறுக்கப் பெண்டாட்டி வேண்டுமே என்ற ஹோதாவில் கலியாணஞ் செய்த அச்சிறுமியை விதவையாக்கி அவளை முக்காட்டினால் மூடிவிட்டுத் தான் எமனுலகஞ் சேர்கின்ற அடாத செயலையும் இப்படிப் பலவிதமான கண்மூடித்தனமான மூடச் செயல்களால் விதவைகளைப் பெருக்குகின்ற வேண்டாச் செய்கைகளையுங் கண்டித்து இவ்வாறு இந்தியா முழுதும் வாழும் லக்ஷக் கணக்கான பாலிய விதவைகளின் க்ஷேமத்திற்காகப் பாடுபடுவதே இச்சபையின் நோக்கமாகும். பாலிய விதவைகளின் பரிதாபகரமான நிலைமையும் அவர்கள் ஆயுள் முழுதும் அழுத கண்ணுஞ் சிந்திய மூக்குமாகக் காலந்தள்ளுங் கண்றாவியும் சகிக்க முடியாதன அல்லவா! பாலிய விதவைகள் பலர் சரியான யௌவனப் பருவம் அடையப் பெற்றவுடன் தங்கள் உள்ளத்தில் இயற்கையாய் எழும் இன்ப உணர்ச்சியை அடக்குஞ் சக்தியின்றிச் சோரம் போகின்றவர்களும் அங்ஙனம் சோரம் போன செய்தி பெற்றோர்

உற்றார் மற்றாருக்குத் தெரிந்து நாளடைவில் ஊர் முழுதும் பரவி விடவே ஆறு குளம் கிணறுகளில் விழுந்து உயிரை மாய்த்துக் கொள்கின்ற பெண் மணிகள் எத்தனை பேர்? கள்ளக் காதலரோடு கெட்டழிந்து தேசாந்திரம் சென்று சிலகாலம் இன்புற்றிருந்து பின்னர் அக்காதலன் இவர்களது இளமை குறைவதைக் கண்டு வெறுப்புற்று முறைப்படி வேறொருத்தியை மணஞ் செய்து கொண்டு இவர்களைத் திக்கின்றித் தவிக்க விட்டு விடுகிற அநியாயச் செயல் எத்தனை கொடுமையுடையது! இன்னும் விதவைக்கோலங் கொண்டு பக்குவதியான முதற்படியில் அண்டையயல் வீட்டு வாலிபரும் நாளாவிர்த்தியில் ஊர் முழுதும் உள்ள வாலிபரும் வீசும் வலையிலே அகப்பட்டுக் கற்பழிந்து இவர்களால் படாதபாடுபட்டுத் திண்டாடி இறுதியில் வியபிசாரிகளாகவே மாறித் தம் மானத்தைப் பைசாக்கணக்கிலும் அணுக் கணக்கிலுமாக விற்றுவரும் விபரமறியாச் செய்கை எவ்வளவு அநியாயகரமானது?

இம்மங்கையர் தொடக்கத்தில் ஒன்றிரண்டு வாலிபர்களிடம நட்புக்கொண்டு அந்நட்பு வெளிக்குத் தெரியாமலிருக்க வேண்டுமென்று மறைந்து ஒழுகுகையில் திடீரெனக் கருப்பம் உற்று அங்ஙனம் கருப்பமுற்ற செய்தி வெளிப்படும் முன்னர் கருப்பத்தை அழிக்க முயன்றும் அக்கருப்பங் குலையாவிட்டால் உடலும் பலஹீனமடைந்து சமயத்தில் உயிரையும் இழக்கத்தக்க கொடிய ஆபத்திலே சிக்கிக் கொள்கிறார்கள். ஒரு சமயம் எவ்விதத்திலும் கருப்பம் கலையாமல் குழந்தைகளே பிறக்கும்படி நேரிட்டவிடத்து அக்குழந்தைகளைக் கொன்றொழிக்கின்றனர் இவ்வாறு விதவைகளுக்கு நேரிடும் சொல்லமுடியாத துன்பங்களையெல்லாம் ஒழித்தற்காக வாலிபர்கள் முன்வருதல் வேண்டும் நாட்டில் பாலிய விதவை ஒருத்திகூட இருத்தல கூடாது என்னும்படி செய்தற்குரிய நோக்கத்துடன் இவ்விதவா விவாஹ சபை வெகு பிரயாசை எடுத்து உழைத்து வருகின்றது. நாள்தோறும் இச்சிங்காரமாளிகையில் வைத்தும்

வேறு பல ஊர்களிலும் இந்தச் சபை தன் ஆதரவில் பல விதவா விவாஹங்களை ஒழுங்காக நடைபெறும்படி செய்து நாட்டுக்கு நன்மையளித்து வருகின்றது.

சிங்கார மாளிகையின் கீழ்த்தளத்தின் மேல்புறத்தில் அமைந்த ஒருபெரிய நீளமான ஹாலும் அதற்கு அடுத்துள்ள இரண்டு அறைகளும் விதவா விவாஹ சபைக்காரியாலயமாகும். இதனை நிர்வகித்து நடத்தும் அங்கத்தினர்கள் அனைவரும் கௌரவ உத்தியோகஸ்தர்களே யாவர். அரசாங்கத்திலும் பொது ஜனசமூகத்திலும் பெரிய பெரிய வியாபார ஸ்தலங்களிலும் மேன்மையான உத்தியோகங்களில் அவர்கள் இருந்து ஊதியம் பெற்று வந்தார்கள். அவ்வுத்தியோகங்களை வகித்துக்கொண்டே ஒழிவு நேரங்களில் இச்சபை விஷயமாக அவர்கள் தங்கள் கவனத்தைச்செலுத்தி வந்தனர். மேலே கூறிய நியமத்தினால் காரியதரிசி யிருக்குமிடம் மற்ற அறைகளில் குமாஸ்தாக்கள் பகலில் வேலை செய்து கொண்டிருப்பார்கள். காரியதரிசி மாத்திரம் பகலில் சௌகரியப்பட்ட வேளைகளிலேயே காரியாலயத்துக்கு வருவது வழக்கம். ஆனால் தினப்படி இரவு 8-மணி முதல் 10 மணி வரை கட்டாயமாகக் காரியாலயத்தில் இருப்பார் அந்நேரத்தில் அவர் காரியாலயத்தை ஒருமுறை பார்வையிட்டு விட்டுப்பின்மறுநாள் நடத்தவேண்டிய காரியங்களைக்குறித்து மானேஜருக்குக் கட்டளைகள் பிறப்பித்துவிட்டு அப்பால் மணி 10-க்கு மேல வெளியேறுவது வழக்கம்.

ஒருநாள் இரவு மணி $10\frac{1}{2}$ ஆகின்றது காரியதரிசி காரியாலயத்தைப் பூட்டிக்கொண்டு வெளியே போக வேண்டிய நேரம் ஆய்விட்டது ஆபீஸ் குமாஸ்தாக்களும் மானேஜரும் போய்விட்டார்கள் யாரோ ஒருவரைத்தனித்துச் சந்திப்பதற்காக உட்கார்ந்திருப்பவர்போலக் காரியதரிசி காணப்படுகிறார் மணி 11-ம் ஆயிற்று காரியதரிசி இது என்ன? அவள் வருவதாகச்சொன்ன நேரம் கழிந்து போய்விட்டதே இன்னும் காணவில்லை. அல்லது அவளைப்பற்றிக கூறியது மோசச் செய்தியாயிருக்குமோ? எப்படியும் இன்

னும் சற்று நேரம் பொறுத்திருப்போம் என்று மெல்லிய குரலில் சீழ்க்கையடித்துக் கொண்டு நாற்காலியிற் சாய்ந்த வண்ணம் உட்கார்ந்திருக்கையில் நவநாகரிகப் பெண்மணி ஒருத்தி அழகிய பூங்கொடி போல ஒல்கி, வெட்கம் ஒரு புறம் இழுப்பதனுல் அதனைத்தாங்கமாட்டாமல் சமன் செய்வதற்காக ஒருகையால் இழுத்து இழுத்து மேலாடையைப் போர்த்துக்கொண்டவாறே உள்ளே நுழைந்தாள். இவளது தோற்றம் நாகரிகத்தின் போக்கு எவ்வளவு தூரம் நம் இளமங்கையரை இழுத்துச் சென்றிருக்கின்றது என்பதனை அளந்து காட்டுதற்கேற்ற அளவுகோலாக விளங்கிற்று. மயில் என ஒதுங்கி மயில்என நடந்து வந்த அம்மங்கை குயிலெனுமொழியிற் காரியதரிசிக்கு மாலைவந்தனம் கூறி அருகாமையிற் கிடந்த ஆதனத்தில் அமர்ந்தாள். காரியதரிசி வயதிலே மிக்க இளைஞராயினும் சுறுசுறுப்புமிக்கவர் மந்தஹாஸம் தவழும் அழகியமுகத்தினர் மின்னென மிளிரும் பல்வரிசையினர் "ஆடவர் பெண்மையை அவாவும் தோளினய்" என்று புலவர் புகழ்ந்தவாறு ஆண்மக்களும் இவ்வண்ணலைச் சேரப் பெண்பிறவி எடுத்தல்வேண்டும் என்று விரும்பி அவ்வாறின்றி ஆண்பிறவியாகத் தம்மைப்படைத்த பிரமதேவனைப்பழித்துக் கூறத்தக்கவிதத்திலே அழகின் கொழுந்துமயமாய் நாற்காலியிற் சாய்ந்த வண்ணம் உட்கார்ந்திருந்தார். அங்ஙனம் உட்கார்ந்திருந்தவர் வந்த நங்கைக்குக் கைகொடுத்துக் குலுக்கி அன்பான மொழிகளால் இன்பம் ததும்பும் முகமன்கூறி உட்காரவைத்து, "என்ன? தாங்கள் சிறிது நேரத்திற்கு முன்பே இங்குவருதாகக் குறித்திருந்தீர்களல்லவா? என்றார். அதற்கு அந்நங்கை ஆமாம் அதற்கென்ன இப்பொழுது? "இண்டியன் பங்சுவாலிட்டி", மன்னித்துக் கொள்ளுங்கள் என்று வணக்கமாகக் கூறினள். காரியதரிசி நன்றாயிருக்கிறது 'நம் இந்திய மக்களுக்கே காலத்தின் அருமை தெரிகிறதில்லை. மேனாட்டு மக்கள் ஒவ்வொரு நிமிஷத்தையும் பொன்னும் மணியும் போலப் போற்றுகின்றனர். காலத்தை வீணுகக் கழிக்க அவர்கள் மனம் சகிப்பதில்லை. நேரத்தை உயிரென மதித்து அதனை ஜாக்கிரதையாய்ச்

செலவழிக்கின்றனர். நம்மவர்கள் சத்திரஞ்சாவடிகள் தெருத் திண்ணைகளில் உட்கார்ந்துகொண்டு வம்பளப்பதிலும் சீட்டாடித் துட்டுகளைத் தோற்பதிலுமாக நேரத்தைக் கழிக்கின்றனர். பொன்போலும் பொழுதின் அருமை தெரியாமையால் நம்மக்களுக்கு எதனையும் குறித்த நேரத்தில் செய்யத் தொடங்குவதும் அதனைக் குறிப்பிட்ட நேரத்திற்குள்ளேயே முடிப்பதுமாகிய நல்ல பழக்கங்கள் ஒருக்காலும் படிவதில்லை. 7-மணிக்கு ஒரு கூட்டம் நடைபெற வேண்டுமாயின் 5மணிக் கென்றே அறிக்கை வெளியிடவேண்டியிருக்கின்றது. இம் மாதிரி நம்மிடத்திலிருந்து வருகின்ற தீயபழக்கவழக்கங்களை அடியோடு ஒரேகட்டாகத் தொலைத்து விடவேண்டு மென்றே என்நண்பர்களும் நானும் அரும்பாடுபட்டு வருகின்றோம். ஆதலால் தாங்கள் இனிமேல் எப்பொழுதும் குறிப்பிட்ட நேரத்தில் எதனையும் செய்யத் தவறலாகாது என்றேனும் புதிதாய்ப் பழகும் ஒவ்வொருவருக்கும் இம்மாதிரியையே முதலில் நான்வற்புறுத்துவது என்வழக்கம். இதனை ஒரு புத்திமதியாகத் தாங்கள் ஏற்றுக்கொள்ளுவீர்களென்று எண்ணுகின்றேன் வேறு வித்தியாசமாக எண்ணிவிடுதல் கூடாது என்னை மன்னித்துக் கொள்ளுங்கள் சரி இப்பொழுது என்ன காரியத்தை உத்தேசித்து இவ்விடம் வருவதாகத் தாங்கள் தெரிவித்தீர்கள்? தங்களுக்கு எந்தவூர்?" என்று இவ்விதம் கேட்டார் காரியதரிசி.

அதற்கு அந்த மாது ஐயா தாங்கள் வெகுபிரயாசை எடுத்து எத்தனையோ விதவைகளின் துயரைமாற்றித்தொண்டாற்றி வருவதாகக் கேள்வியுற்றேன். நான் இங்கேயே இருக்கப்போகின்றவள் சில நாட்களுக்கு முன்னர்த்தான் இவ்வூருக்கு வந்தேன். தங்கள் நண்பராகிய ஸினிமாப் புரோப்ரைட்டர் மனமோகனனுக்கு ஒருமுறையில் நான் தங்கை அழகாய்ப் பாடவும் நர்த்தனம் செய்யவும் அறிவேன் எனக்கு இங்கிலீஷ் தமிழ் ஹிந்துஸ்தானி ஆகிய மூன்று பாஷைகளில் எழுதப் படிக்கவும் பேசவும் தெரியும். எனக்குச்சொந்தவூர் பாம்பே பக்கம் இங்கு மனமோகன் என்னை

வரவழைத்தது என்னைத் தகுந்த வாலிபரொருவருக்கு மணஞ்செய்விக்க வேண்டும் என்ற கருத்துப்பற்றியே நான் கலியாணமானவள் என்று என் தகப்பனார் அவரிறக்குந் தறுவாயில் என்னிடம் கூறத்தான் எனக்குத் தெரியவந்தது. எனக்கு நாலைந்து வயதிலே கலியாணமாயிற்றாம். கலியாண மான இரண்டு மூன்று தினங்களில் என்னை மணம்புரிந்த சிறுவர் காலராவுக்கு இரையாயினராம். என் தாய் தந்தை யர்க்கு நான் ஒரேயொரு செல்வமகள் என் தந்தையார் அரு மையாய்த் தேடிவைத்த ஐந்து லக்ஷம் ரூபாய் பெறுமான சொத்துக்கள் என் ஒருத்திக்கே உரியன. ஆதலால் என் பெற்றோர் இறக்கும் வரையில் நான் மிகவும் செல்வமாக வளர்ந்ததும் அல்லாமல் தற்கால உலகத்திலே பெண்கள் சுதந்திர உணர்ச்சியுடன் சுகமாக வாழ்தற்கேற்ற சகலவித மான தேர்ச்சிகளையும் நான் அடையும்படி அவர்கள் செய்து வைத்தார்கள் அண்டை வீட்டிலேயிருந்த தென்னாட்டுப் பிராமணர் ஒருவர் நட்டுவாங்கமும் வல்லுநராகையால் அவர் எனக்கு ஓழிவு நேரங்களில் பரதநாட்டியமும் கற்பித்தார். பெற்றோர் இறக்கும் தருணத்தில் எனக்குரிய சொத்துக்களை நான் என்மனம்போனபடி செலவழித்துவிடாமலிருத்தற்காக எனக்குத் தமையன் முறையிலுள்ளவராகிய மனமோகனைப் போஷகராக நியமித்து அச்சொத்துக்களைத் தருமமார்க்கத் திலேயே நான் செலவழித்துவருமாறு கண்காணித்துவரும் படி ஒப்பந்தம் செய்தார்கள்.

ஆனால் மனமோகன் சிலவருஷங்களுக்கு முன் பம்பாய் நகரத்தை விட்டு இங்குவந்து பிறகு திடமான பெரிய சீர் திருத்தக்காரராக மாறியபடியால் அவர் என்பெற்றோர் கூறிய வாறு தருமமார்க்கத்திலே அச்சொத்துக்களைச் செலவழிப் பதிலும் மிக்க பாலியையாகிய நான் விதவையாக இருத்தல் ஒழுங்கற்றதாதலால் சரியான ஆடவரொருவரை மணஞ் செய்துகொண்டு அந்தச் சொத்துக்களை வைத்துச் சுகமாக வாழ்தலே ஏற்றது என்று முடிவுசெய்தார். நானும் உலக முன்னேற்றத்தைக் கூர்ந்து கவனித்து வருபவளாகையால்

அவருடைய வார்த்தைக்கு இணங்கினேன். தங்களுடைய சபையின் ஆதரவிலேயே மணாளனை அடையக்கூடும் என்றும் அவர் குறிப்பிட்டார். இப்பொழுதும் அவரே என்னை இங்குத் தனிமையாகச்சென்று என் கருத்தைத் தங்களிடம் தெரிவித்து வரும்படி அனுப்பியுள்ளார். நான் எதிர்ப்புறத்து அறையிலேயே அவருடன் தாமசிக்கின்றேன் என்று புன்முறுவல் தவழ்ந்த முகத்துடன் கூறிமுடித்தாள் காரியதரிசி சிறிது ஆலோசிப்பவர்போலத் தலையை ஒய்யாரமாக நிமிர்ந்து ஜாடையாக அம்மங்கையின் அழகுகளைப் பருகியவாறே "ஓஹோ! அப்படியா? நேற்று அவர் என்கூடப்பேசிக்கொண்டிருக்கும் பொழுது தாங்கள் உள்ளே நிற்பது என்கண்களிற் பட்டது. உடனே "அது யாரையா? என் தங்கையைப் பார்த்தாற்போல இருக்கிறது பிரமன் ஒரே அச்சில் இருவரையும் வார்த்ததுபோல இருக்கின்றார்களே" என்றேன் அதற்கு அவர் இவை ஒன்றும் சொல்லாமல் "நம்முடைய ஆள் தான் என்று மாத்திரம் கூறி வேறு என்னென்னவோ பேசிக்கொண்டிருந்தாரே என்றார்... அப்பால் அப்பெண்மணியாகிய **கமலாபாய்** காரியதரிசியை நோக்கி ஏழையாகிய என்மீது தாங்கள் கருணை பாலித்து நான் சுகமாக வாழும்படி செய்தல் வேண்டும் நான் விரும்பியுள்ள மணவாளனையே எனக்குத் தாங்கள் அநுக்கிரகிக்க வேண்டும் என்றாள். அதற்குக் காரியதரிசி தாங்கள் சொல்வதைப் பார்த்தால் தாங்களே ஒரு மணவாளனைக் குறிப்பிட்டிருப்பதாகவும் அவரையே நான் தங்களுக்கு விவாகஞ் செய்விக்க வேண்டும் என்றும் அல்லவா தெரிகிறது. அது சாத்தியமான காரியமா! எங்கள் சபையிலே அந்த மாதிரி கட்டாயப் படுத்த முடியாதே! இரண்டு கட்சியும் மனம் ஒத்து வந்தாலன்றி எங்களால் யாதும் செய்யலாகாது தாங்கள் குறிப்பிட்டுள்ள மணவாளர் யாரோ! அவரைக் கண்டு தாங்களே தான் முதலில் தங்களுடைய விருப்பத்தைத் தெரிவிக்கவேண்டும். அப்படியானால் தகராறு அதிகம் கிடையாது இல்லையென்றால் நாங்களாக அவரிடம் கேட்கவேண்டும் அது அவ்வளவு ஒழுங்கான முறையன்று என்று கூறினார். மறுபடியும்

அம்மங்கை நல்லாள் அப்படியெல்லாம் ஒன்றுமில்லை தங்களுக்குச் சிறிது மனசு தான் வேண்டும் நிறைந்த புத்தியுள்ளவர்களாகிய தங்களுக்குப் பன்னிப் பன்னிச் சொல்வதில் அவசியமில்லை குறிப்பு அறியும் சக்தி இல்லாதவர்களா தாங்கள்? ஒருவர்மீது திடீரென ஏற்பட்ட அன்பை மாற்ற முடியாதல்லவா? என்றாள் காரியதரிசி இன்னும் ஏதோ ஆழ்ந்த யோசனையுள்ளவர் போலக் குனிந்தும் நிமிர்ந்தும் உட்கார்ந்து கமலாபாயின் கேசாதி பாத லக்ஷணங்கள் அனைத்தையும் உற்று நோக்கி அம்மா! தாங்கள் குறிப்பிடும் மணவாளர் எனக்கு நெருங்கிய ஆப்தரோ! அப்படியானால் தானே தாங்கள் கூறிய வார்த்தை பொருத்தமாகும். அவ்வாறு ஆவிருப்பாரானால் நான் வேண்டிய முயற்சிகளைச் செய்து காரியத்தை முடிப்பதில் தடையில்லை தாமதமின்றித் தாங்கள் அவர் யார் என்பதைத் தெரிவியுங்கள்—என்று அழுத்தந் திருத்தமாகப் பேசினார். கமலாபாய்—ஐயா! நேற்று நீங்கள் கடற்கரையிலே பெரும் கூட்டத்திற்குத் தலைமை வகித்து விதவா விவாகத்தைப் பற்றிப் பேசுகையில் என் தமையனாராகிய மனமோகன் என்னை அங்கு அழைத்து வந்திருந்தார் விதவா விவாகத்தின் மேன்மையை எனக்குத் தெளிவு படுத்தி என்னை அதற்குச் சம்மதிக்கச் செய்ய வேண்டுமென்றே அங்ஙனம் அவர் அழைத்து வந்தார் நேற்றுத் தங்கள் வாய்ச்சொல்லைக் கேட்கும் அளவும் பாலியத்திலேயே விதவைப் பட்டம் தாங்கிய நான் ஒரு ஆடவரையும் என் மனத்திலும் எண்ணாமலே காலம் தள்ளினேன் உங்களுடைய பிரசங்கம் முடிவானதும் என் உள்ளத்திலே ஒரு உத்தமர் குடி கொண்டார்: அவரையே நான் மணஞ் செய்து கொள்ள வேண்டுமென்ற தீர்மானமான எண்ணமும் என்னை வாட்டத் தொடங்கிற்று தங்களுடைய சொற்பொழிவாகிய மதுவை மாந்தி என் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட ஆப்தரது தோற்றமாகிய பித்துத் தலைக்கேறிச் செய்வதென்னவென்றறியாமல் வீட்டுக்கு வந்தேன் என் உள்ளத்தின் நிலைமையை உணர விரும்பிய என் தமையன் தங்களுடைய பிரசங்கத்தின் தன்மையைப் பற்றி என்பால் கேட்டார். நான் எல்லாம்

சரிதான் அண்ணா! இவ்வளவு வாய்ப்பறை சாற்றும் இந்த உத்தமர் விதவையை மணம் புரிந்திருக்கிறாரா? என்று கேட்டேன் அதற்கு மனமோகன் இல்லை அம்மா இவர் இன்னும் கலியாணமாகாதவரே இவர் மனத்திற்குப் பிடித்தமான விதவை கிடைப்பின் எள்ளளவும் தாமதமின்றி உடனே விவாகஞ் செய்து கொள்ளுவார் இவருடைய பிரசாரத்துக்கு ஒத்துழைக்கக் கூடியவளாகவும் இந்தியா முழுதும் அநேகமாய்ப் பொதுப்பாஷையாக விளங்கும் ஹிந்தியில் நல்ல ஞானமுடையவளாகவும் அவள் இருத்தல் வேண்டுமென்பது அவர் கோரிக்கை ஆதலால் அத்தகைய நங்கையைத் தேடி இவர் தவம் புரிகிறார் என்று சொன்னார் அப்பொழுதே என் உயிர் திரும்பி வந்தாற் போலிருந்தது என் மனம் பரவசமடைந்தது ஏனென்றால் மனமோகன் பாம்பேயில் ஸினிமாக் கம்பெனிக்காக படங்கள் தயாரித்து வருகையில் நானும் அவர் கூடவே இரண்டு வருஷங்கள் வரை இருக்க நேர்ந்தது அப்பொழுது நான் கல்வி விஷயமாகவும் மதுவிலக்கு விஷயமாகவும் பம்பாய் மகாணத்திற் பலஇடங்களிற் பிரசங்கங்கள் செய்து வந்திருக்கிறேன் ஆதலால் எனக்கு ஹிந்தி பாஷையில் பிரசங்கம் செய்யும் சக்தி அபாரமாய் உண்டு ஆகவே தங்களுடைய நோக்கங்களுக்கு மிகவும் ஒற்றுமையுடைய ஒருத்தி இவ்வுலகத்தில் இதுவரை பிறந்திருப்பாளாயின் அவள் என்னையன்றி வேறில்லை ஆகையால் சுருக்கமாகச் சொல்லுமிடத்துத் தாங்களே என்னை மணம் புரிந்து என் விதவைக் கோலத்தைக் நீக்கியருளுதல் வேண்டும் ஒரு பெண் வலிய வந்து இவ்வாறு கூறுதல் அழகோ? என்று தாங்கள் எண்ணக்கூடும். ஆனால் நான் எக்காரியத்திற்கும் நாமே பிரயாசையெடுத்து உழைக்க வேண்டுமென்று தீவிரமாகக் கருதி யிருப்பவள். காதல் மணத்தின் கருத்தும் தாங்கள் அறியாததன்று ஆசை வெட்கம் அறியாது என்பது பழமொழி மனமோகன் நேற்றுத் தங்களுடைய கருத்தைத் தெரிவிப்பதற்கு முன்னமேயே தாங்கள் என் சிந்தையிற் குடிகொண்டு விட்டீர்கள் அவர் தங்களைப் பற்றித் தெளிவாகக் கூறியபின் என் மனம் மட்டற்ற மகிழ்ச்சி

யிலே திளைத்தது. எனக்குரிய செல்வமெல்லாம் தங்களுடையனவே தாங்கள் இதற்குத் தடை செய்வீர்களாயின் என் சொத்துக்கள் மனமோகனனை படையும் என் உயிரும் சுவர்க்கத்தை அடையும் எனச் சொல்லி முடித்தாள்.

இதுவரையிலும் ஏதேனும் பதில் சொல்லிக் கொண்டே வந்த காரியதரிசி அப்பால் ஒன்றும் பேசாமல் எல்லாம் ஒருமாதம் பொறுத்துத்தான் என் காரியத்தைப்பற்றி யோசிக்கவேண்டும். என் சொந்த ஊர் தெற்கே திருநெல்வேலி ஜில்லாவைச் சேர்ந்த கலியாணபுரம் என் தந்தை வியாபார நிமித்தமாய்க் கொழும்பிலேயே யிருக்கிறார் இன்னும் மூன்று தினங்களில் நான் என் சொந்த ஊருக்குப் போகவேண்டும் என் மருத்துவக் கலாசாலைப் படிப்புக்கள் முடிந்து பத்துத் தினங்களாயின ஊரிலிருக்கும் என் தங்கைக்கு—(உன் போலவே இருக்கிறதாகச் சொன்னேனே) இந்த மாதத்திலேயே விவாகம் முடியவேண்டியிருக்கிறது அவள் கலியாணம் முடிந்த பிறகு தான் என் கலியாணத்தைப் பற்றி ஆலோசிக்க வேண்டியிருக்கிறது அதனாலேயே நான் இதுவரையும் ஒரு மாதை என் மனைவியாகத் தீர்மானித்துத் தேர்ந்தெடுக்கவில்லை. என் தகப்பனார் பழைய காலத்து வைதீகம் அபார பூஜைக்காரர் சுத்த வைதீக சித்தாந்த சைவச் சார்பினர் அவருக்கு இத்தகைய சீர்திருத்தங்களைப் பற்றிக் கேட்டாலுமே மூக்கு நுனியிற் கோபம் பொங்கி வழியும் ஆதலால் என் சகோதரியின் கலியாண காலத்தில் அவருக்குத் தகுந்தபடி விஷயங்களை எடுத்துச் சொல்லி அவரை ஒருவாறு சரிப்படுத்திக்கொண்டு பின்னர்த்தான் சென்னைக்கு வந்து என் விருப்பம் போல ஒரு பாலிய விதவையை மணம் புரிய வேண்டுமென்று தீர்மானித்திருந்தேன். ஆனால் இரண்டு நாட்களாக என் மனத்தை மடவாள் ஒருத்தி வசப்படுத்தித் தன் வசமாக்கியிருக்கிறாள் என்று சொல்லுகையில் கமலாபாயின் மனம் சற்றுத் திடுக்கிட்டது தங்கள் மனத்தை வசப்படுத்திய புண்ணியவதி யாரோ? என்று கவலை மடைந்த முகத்துடன் கேட்டாள்

கமலாபாய். அதற்குக் காரியதரிசி புன்னகை பூத்து, "அன்னவள் இங்கேயே இருக்கின்றாள் நேற்று மாலை தான் என் மணமாலையை அவளுக்கு மனப்பூர்வமாகச் சூட்டியுள்ளேன் என்றார். இதனைக் கேட்டு இன்னும் சிறிது அதிகமாகக் கலங்கிய மனத்துடன் அப்படியானால் நான் எண்ணிய எண்ணமெல்லாம் ஊமை கண்ட கனவாய்ப் போயிற்றே. தாங்கள் கூறுவதில் ஏதோ மர்மம் இருக்கிறது எனக்கூறி நடுங்கினாள்.

அவ்வளவில் காரியதரிசியாகிய டாக்டர் எம். வி. கன் என்பவர் இருக்கையினின்று சரேலென எழுந்து, சுற்று முற்றும் ஒருமுறை பார்த்துவிட்டுக் கமலாபாயின் அருகில் நெருங்கினார். இன்னும் யாரென் மனத்தைக் கொள்ளை கொண்டது என்பது தங்கட்குத் தெரிய வில்லையோ? இப்பொழுது தெரிந்துவிடும் என்று கூறிக்கொண்டே கமலா பாயைக் கட்டியணைத்து அவளது கன்னங்களில் மாறி மாறி முத்தங்கள் பல பொழிந்தார் காரியதரிசி இச்செய்கைக்கு அஞ்சி மிகவும் துயரப்படுபவள் போலப் பாவனை காட்டிக் கமலாபாய் ஆத்திரமும் கோபமும் மிகுந்தவளாய், ஐயா! என்ன நேர்மை இது! என் தமையனாராகிய போஷகரொருவரிருக்கிறாரே அவர் என் சொத்துக்களுக்கெல்லாம் கார்டியனாக இருப்பவர். நான் தங்களிடம் என் கருத்தைத் தெரிவித்து விட்டாலும் அவரிடமும் ஒரு வார்த்தை கேட்டுக் கொள்ளவேண்டாமா? தாங்கள் பெரிய மனிதர் என்றல்லவா இவ்விடத்திற்குள் நுழைந்தேன் எனக் கூறி மானம் தாங்கமாட்டாதவள் போல வாயிற் கதவண்டை விரைவாகச் சென்றாள் ஆனால் டாக்டர் அவளை விடுபவரா! அவளுடைய சாகஸம் தனக்கு மிகவும் சாதகம் என்றே எண்ணிக்கொண்டு அவள் மேலாடையைப் பற்றி யிழுத்த வண்ணம் அம்மா! தங்கட்கு இவ்வளவு கோபமாகுமா! என்னென்னவெல்லாமோ என்னைச் சுட்டித்தானே கூறினீர்கள் அப்படி யிருக்கத் தங்கட்கு இவ்வளவு ஆத்திரம் வந்தது என்? தங்கள் கருத்தைத்தான் நான் வெட்ட

வெளிச்சமாகத் தெரிந்து கொண்டேனே! அதை உணராமலா நான் இப்படிச் செய்தேன் என்று நினைத்தீர்கள் இன்னும் தாங்கள் அப்படியே எண்ணிக்கொண்டு வருத்தமுற வேண்டாம் என்று கொஞ்சலாக அவள் முகத்தை உற்று நோக்கிப் பேசி அவளை மறுபடியும் ஆசனத்தில் உட்கார வைத்தான். அவளும் அதைப் பற்றித் தனக்கு அவ்வளவு வருத்தம் ஒன்றும் இல்லாதவள் போலச் சமாளிக்கத் தொடங்கினாள்.

ஆனால் டாக்டர் கன் அம்மா! நான் உன்னைப் பற்றிக் கேள்வியுற்று அநேக நாட்களாயின என் ஆப்த நண்பனாகிய மனமோகன் உன்னை எனக்காகவே தான் இவ்விடத்திற்கு வரவழைத்தார். நான் உன்னை நேரிற் பார்த்தாலன்றி மணஞ் செய்து கொள்ள இலலாது என்று கூறினேன். நேற்று நான் உன்னைக் கண்டதும் எனக்கு அரைவாசி மனது பிடித்தது இங்கு வந்து நீ நேரிலே என்னிடத்தில் சம்பாஷித்த பிறகோ என் சந்தோஷத்திற்கு அளவில்லை நம் இருவருக்கும் நடக்க வேண்டிய விவாகச் சடங்கு ஒன்று தானே பாக்கி. அதுவும் என் தங்கையின் கலியாணம் நிறைவேறிய மறு நாளே நிறைவேறி விடுகிறது. மனமோகன் இதனை எள்ளளவும் ஆட்சேபிக்கமாட்டான். ஆனால் தங்களுக்குப் பிரியமில்லாவிடில் நான் தங்கள்பால் இப்பொழுது அளித்த பொருள்களைத் திருப்பக் கொடுத்து விடுங்கள். இதற்காகச் சஞ்சலம் சிறிதும் தங்கட்கு வேண்டியதில்லை என்றான். இவற்றையெல்லாம் கேட்ட கமலாபாய் நிரம்பவும் சந்தோஷக்குறியைக் காட்டி, ஆஹா! இதோ திரும்பத் தந்து விட்டேன் வாங்கிக்கொள்ளுங்கள் என்று கூறி இருக்கையினின்று எழுந்து டாக்டரை இறுகத் தழுவி முத்தம் அளித்தாள் இருவரும் அப்பாற் சிறிது நேரம் சொல்லொணு விதத்திற் சல்லாபமாயிருந்தனர். அப்பால் ஒருவரை ஒருவர் அறிந்து மெய்ம்மறதி நீங்கினர், டாக்டர் தன்கைக் கடிகாரத்தை உற்று நோக்கினர். மணி $1\frac{1}{2}$ ஆயிற்று அப்பொழுது தான் டாக்டருக்கு இராத்திரிச் சாப்பாட்டின் ஞாபகம்

உண்டாயிற்று. உடனே வெளியே வந்து 'பாய்' என்று கூவினர் டாக்டருக்காகச் சாப்பாடு கொண்டு வந்த முகம்மதியச் சிறுவன் டாக்டரோடு யாரோ பெண்பிள்ளை பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் இப்பொழுது உள்ளே செல்லலாகாது என்றெண்ணி வாயிற் கதவின் பக்கத்திலேயே கொண்டு வந்தவைகளையெல்லாம் வைத்து விட்டுத் தானும் படுத்துத் தூங்கி விட்டான். 'பாய்' என்று டாக்டர் கூவியதும் சிறுவன் திடுக்கிட்டு விழித்து 'ஸார்' என்று கத்திக் கொண்டே எழுந்தான். பாய் சப்பாடு எடுத்து வந்ததை உள்ளே கொணர்ந்து அங்கொரு புறத்திலே வைத்தான் டாக்டர் உடனே அவனை வெளியே அனுப்பி விட்டார் டாக்டரும் அவர் தம் புத்தம் புதிய ஆருயிர்க் காதலியுமாக இரா உணவை அருந்தி முடித்தார்கள்.

அப்பால் டாக்டர் காரியாலயத்தைப் பூட்டிக்கொண்டு வெளியே புறப்பட்டார். தானே தன்னுடைய காரை ஓட்டத் தொடங்கினர் கமலாபாய் சிறிதும் தயங்காமல் காரில் ஏறி உட்கார்ந்து டாக்டருக்குப் பதிலாகத் தானே காரைச் செலுத்தினள். இருவரும் டாக்டரது சொந்தமான ஜாகைக்குப் போய்ச் சேர்ந்தார்கள். இரண்டு நாட்கள் முழுவதும் அவ்விருவரும் எங்கெங்குப் போனர்கள்? எங்கெங்கெல்லாம் சுற்றித் திரிந்தார்கள் என்று நிச்சயமாய்ச் சொல்ல இயலாது. புதியதாய் மணந்து கொண்ட தம்பதிகளைப் போலவே அவ்விருவரும் சென்னையிலுள்ள அழகிய கண்காட்சிகளை யெல்லாம் கண்டார்கள். கமலாபாய் சென்னைக்குப் புதிதாகப் பம்பாயிலிருந்து வந்தவள் என்ற நினைப்பு டாக்டருக்கு.

கமலாபாயின் சந்திப்பு நேரிட்ட நான்காம நாட் காலை வண்டியில் டாக்டர் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள தம் சொந்த ஊராகிய கலியாணபுரத்திற்குப் புறப்பட்டார். ஸ்ரீமதி கமலாபாயும் டாக்டரோடு புறப்பட்டு விட்டாள். டாக்டர் நமது கதையிலே எவ்வளவோ சம்மந்தம் உடையவரென்பது இன்னும் வாசகர்களுக்குத் தெரியாமலிராது.

இவர் தான் நம் கதா நாயகியான ராஜலக்ஷ்மியின் தமையனார் இவரது உண்மைப் பெயர் 'மாணிக்க வாசகன் என்பது. அதைத்தான் ஆங்கில முறையிற் குறுக்கி, (M. V. Gun) எம். வி. கன். என வைத்துக்கொண்டிருக்கிறார். இவர் ஐந்து வருடங்கட்கு முன் சென்னைக்கு வந்த புதிதில் இவரைப் பார்த்தவர்கள் இவர் சரியான திருநெல்வேலிச் சைவர் வீட்டுப் பிள்ளை என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போலத் தெரிந்துகொள்வார்கள். அவ்வளவு ஆசாரமும் தலையில் உச்சிக் குடுமியும் வேஷங்களும் வைதீக முறை களும் இவற்பாற் குடிகொண்டு விளங்கிற்று. ஆனால் இப்பொழுது அவர் முற்றிலும் மாறி விட்டார் என்பது சொல்லாமலே தெரிந்து கொள்ளக்கூடும்.



## அத்தியாயம் 5.

### கற்புக் கலங்காக் காரிகை.

கால்வாய்க் கரையில் கள்ளுண்டு நின்ற துர்த்தனாகிய ஆறுமுகம் பிள்ளையைத் தன் காதலன் முகத்திலே அறைந்து கீழே வீழ்த்திய பிறகு, ராஜலக்ஷ்மி தன் அபிப்பிராயத்தைக் கள்ளங் கபடு இல்லாமல் கனகசபாபதியிடம் கூறிவிட்டு யாரோ வருகிற காலடிச்சத்தம் கேட்டமையால் சரேலென வீட்டை நோக்கி நடந்தாள். அவள் வழக்கம் போல சாப்பாட்டை முடித்து மாடிக்குப் போனாள். அறைக்குள்ளே காற்றில்லாமல் இறுக்கமாயிருந்தபடியால் மேன்மாடியின் பின்பக்கத்துத் தட்டோட்டிலே போய் உட்கார்ந்தாள். தட்டோட்டி அகன்று சுண்ணம்பு பூசப்பெற்ற விஸ்தீரணமான ஒரு இடம். அங்குப் போய் அவள் உட்காரவே காற்று சிறிது மெல்லென வீசத்தொடங்கிற்று- ஆதலால் அவள் ஒரு ஹரிக்கேன் லைட்டை ஏற்றிப் பக்கத்தில் வைத்துக்கொண்டு அழகிய நாவலொன்றைப் படித்துக் கொண்டிருந்தாள். அந்நேரத்தில் வீட்டிற்குள் யாரும் விழித்திருப்பதாகத் தோன்றவில்லை காவற்காரச் சம்புத்தேவன் குறட்டை விட்டுத் தூங்கி மூன்று சாமமாயிற்று காமாட்சியாச்சியும் சிவகாமியம்மாளும் நாள் தவறாமல் நடத்தும் சம்பாஷணையும் ஓய்ந்து இரண்டு மணி நேரமாயிற்று இராஜலக்ஷ்மி, கால்வாய்க்கரையிலிருந்து திரும்பி வந்து ஐந்துமணி நேரத்துக்கு மேலிருக்கலாம் அவள் நாவல் படிக்கத் தொடங்கி ஏழெட்டு நாழிகை யிருக்கும். நாவலில் இருபங்கு வரை முடிந்திருக்கிறது. அதாவது அந்த நாவல வடுவூர் ஸ்ரீ துரைசாமி ஐயங்காரியற்றிய திகம்பர சாமியார் பாலிய லீலையில் மைசூர் மகாராஜாவின் திவான் ஸாஹேப்பின் மாளிகையை யடைந்த மடமங்கை, சயனக்கிரகத்திலே தங்க நேரிட்ட தர்ம சங்கடமான நிலைமையைப் படித்தாள் ராஜலக்ஷ்மி ஐயோ! கள்ளங்கபடுஅறியாதபேதைப் பெண்களுக்கு எத்தகைய பொல்லாங்குகளும் ஆபத்துகளும் நேருகின்றன என்றெண்ணிய வண்ணம் மெய்ம்மறந்து

தன்னையறியாமல் தன் கண்களிலிருந்து பொங்கி வழிந்த கண்ணீரைத் துடைத்துக்கொண்டு புஸ்தகத்தை மடியிற் போட்டவாறே பித்துப் பிடித்தவள் போல உட்கார்ந்திருந்தாள். சற்றுப் பொறுத்து நிமிர்ந்து நோக்கினாள் கன்னங்கரேலெனக் கறுத்த சரீரமும் மார்பு முழுதும் நிறைந்து படர்ந்த அடர்த்தியான உரோமக்கட்டும், முறுக்கித் திருக்கி ஆட்டுக்கொம்புகளைப் போல வளர்க்கப் பெற்ற மீசைகளும் காதுகளில் வில்லொளி வீசும் கல்லுக் கடுக்கன்களும் கரங்களில் விரல்கள் தோறும் நுழைத்த அழகிய மோதிரங்களும் வலக்கையிலே யாளி முகப்பு வைத்துக் கட்டப்பெற்ற கனத்த சங்கிலியும் இடக்கையிலே கைக்கடியாரமும் துலங்கப் புன்கிரிப்புத் தவழ்ந்த முகத்துடன் ஒருவன் நிற்பதைக் கண்டாள்.

சற்றே உற்று நோக்குகையில் அங்கு வந்து நின்றவன் காமாட்சியாச்சியின் புதல்வனான கட்குடியன் ஆறுமுகம் பிள்ளை என்பது தெளிவாகத் தெரிந்தது. அதனை உணர்ந்த ராஜலக்ஷ்மியின் உடலம் துடியாய்த் துடித்தது கூக்குரலிடவும் தோன்றவில்லை. ஒன்றும் அறியாதவளைப் போலப் புத்தகத்தைப் பார்த்தவாறே உட்கார்ந்திருந்தாள் அறையினுள்ளே நுழைந்து வந்தவனாகிய ஆறுமுகம் பிள்ளை பின்புறக் கதவின் நடைப்படியில் உட்கார்ந்தான், அவனுக்கு நான்கு கஜ தூரத்தில் ராஜலக்ஷ்மி தட்டோட்டியில் உட்கார்ந்திருந்தாள். 'இராஜம்மா! இன்னும் நீ தூங்கவில்லையா? தூங்கியிருப்பாயென்றல்லவோ எண்ணியிருந்தேன். உங்கள் சித்தியெல்லாம் உறங்கி நான்குமணி நேரமாகிறது நீ எவ்வளவு தைரியமாகத் தன்னந் தனியாய் இந்நேரத்தில் தட்டோட்டியில் உட்கார்ந்திருக்கிறாய்? என்னடா இது? இந்த அகால வேளையில் தட்டோட்டியில் விளக்கு எரிந்து கொண்டிருக்கிறதே! என்ன செய்தி? என்றல்லவா பார்ப்பதற்கு ஓடிவந்தேன், என்று கேட்டான் ஆறுமுகம் பிள்ளை,

இராஜலக்ஷ்மி தலை குனிந்தவாறே அதெல்லாம் ஒரு புறம் இருக்கட்டும், தாங்கள் இங்கே எப்படி வந்தீர்கள்?

மாடிக்கு வரும் வாயிற்படிகூடப் பூட்டியிருக்கிறதே! இந்நேரத்தில் தங்கட்கு இங்கு என்ன வேலை? சீக்கிரம் கீழிறங்கிச் செல்லுங்கள் என்று வெடுவெடுப்பாய்க் கூறினாள். அதற்கு சிறிதும் வெறுப்புக் குறி காட்டாமல் ஆறுமுகம் பிள்ளை எனக்கு என்ன வழியா கிடையாது. மனவீதி யுண்டானால் இடவீதியுண்டு என்று ஒரு பழமொழி கூட உண்டே! நீ படித்தவளாகையால் உன் முன்னே என் சரக்கை அவிழ்க்க கூடாது, உன்னிடம் தனியாக ஒரு விஷயம் கலந்து பேச வேண்டுமென்றெண்ணினேன். உடனே இங்கு வந்துவிட்டேன். என்னிடத்திலுள்ள மந்திர சக்தியால் கதவு கூடத் திறந்து விட்டது. இனி நம்முடைய காரியமும் ஜயம் தான் என்று மகிழ்ச்சி யடைந்துள்ளேன். வெகு நாளாய் உன்னோடு பேசவேண்டுமென்ற ஆவல் எனக்கு உண்டு. சில நாட்களாக என்னை வீட்டு வாசலிற் கண்டவுடனேயே நீ கதவைச் சாத்திக்கொண்டு உள்ளே ஓடி விடுகிறாய் ஆனாலும் இன்று உன்னிடத்தில் நேரிற் கலந்து பேசிக்கொண்டால் உன்னுடைய முழுச் சம்மதத்தையும் நான் தெரிந்து கொள்ளலாம் என்ற பூரணமான நம்பிக்கை எனக்கு இருக்கிறது அதற்கப்புறம் உன் தமையனாரும் தந்தையவர்களும் ஊருக்கு வந்த பிறகு மற்ற விபரங்களையும் அவர்களிடம் தெரிவித்துக் காரியத்தை முடிவு செய்து விடலாம் என்ற உறுதியான எண்ணம் என்னை பிடர் பிடித்துத் தள்ளுகிறது ஆகையால் எத்தனையோ உபாயங்களின்பேரில் இங்கு வந்து சேர்ந்திருக்கிறேன் என்றான்.

இராஜாம்பாள் சரி சரி! என்ன விஷயமானாலும் என்னிடத்தில் பேச்சு வேண்டியதில்லை. பெரியவர்களாகிய முக்கியஸ்தர்களிருக்கும்பொழுது சின்னஞ் சிறு பெண்ணாகிய என்னிடத்தில் எதைப் பற்றியும் பேசவேண்டிய அவசியமே கிடையாது. ஆதலால் நீ ஒன்றும் வாய் திறவாமல் உடனே கீழே இறங்கிச்செல் இல்லையென்றால் 'திருடன்' என்று கத்தி விடுவேன் என்றாள். இதற்கெல்லாம் பயப்படுவானா ஆறுமுகம் பிள்ளை? அவன் உடனே ராஜலக்ஷ்மியை நோக்கி திருடன் என்று கத்தினால் அவ்வளவுதான்

எனக்கும் தெரியும் உன் பொட்டலங்களை யெல்லாம் அவிழ்த்து ஒவ்வொன்றாய் உதறிவிடுவேன். உன்னுடைய மானம் சீர்குலைந்து காற்றிற் பறக்கச் செய்து விடுவேன் என்றான் இராஜாம்பாள் பரபரப்புடன், மானமோ அவமானமோ என்னுடைய விஷயங்கள் என்னிடத்திலிருக்கின்றன. அதில் தாங்கள் தலையிட்டுக் கொள்வது பொருத்த அநாவசியம். தாங்கள் நிரம்ப யோக்கியர். தங்களுடைய வார்த்தையினால் எனக்கு அவமானம் நேரிடப் போகிறதென்பது, மலை சரிந்து விடுமென்று புல் அழுகிறது போலத்தான்

இன்றைக்கு விளக்கேற்றி வைத்த இரண்டு மூன்று நாழிகையளவில் கால்வாய்க் கரையில் ரஸ்தா உருளைபோல உருண்டு கிடந்தது தங்களுடைய அருமைத் திருமேனி தானே! என்றாள். ஆறுமுகம் பிள்ளை அச்சம் சிறிதுமின்றி உற்சாகத்துடன் ஒரு கனைப்புக் கனைத்துக்கொண்டு, அம்மா அப்படி வா! நீயே உன் சரக்குகளை அவிழ்க்கத் தொடங்கி விட்டாய். என்மேலே பழி போடுவதற்கு இனி இடமில்லை நானகச் சொல்லி அவமானத்தை விளைவிக்கும் விஷயத்தை நீயே கிளப்பி விட்டாய் உனக்கு அவ்வளவு நேரத்தில் வாய்க்காற் கரையில் என்னவேலை? கண்ணாளர் கனகசபாபதிக் கவிராயரவர்களைக் கண்டு பேசிக்கொண்டிருக்கிறவேலை இது உண்மையாய் நடந்த விஷயம். இதில் ஒளிக்கக்கூடியது ஒன்றுமில்லை இன்று காலை அவனை வரச் சொல்லிக் கடிதம் எழுதினாய் அந்தக் காமாட்டியும் இங்குக் கட்டுக் காவல் ஒன்றுமில்லையென்றெண்ணித் துணிகரமாய் வந்திருக்கிறான். இடையிலே நான் அகப்பட்டேன் உங்களுக்குக் காரியம் செடுதலாய் முடிந்தது போலிருக்கிறது என்னை அவன் அடித்தானா? எவ்வளவு பொய்? அவன் கன்னம் வீங்கும்படி நான் ஓங்கி அறைந்தது இன்னும் என் கை வலிக்கிறதே! அவ்வளவில் அவன் வந்த வழியே திரும்பி ஓடியதை நான் கண்ணாரப் பார்த்தேன் என்னை அவன் அடித்து உருட்டி விட்டானென்று கூறி அவனுக்கு வீரப்பட்டம் கட்டுகிறாயா? நம்மூர்ச் சுப்பிரமணிய வேளாளரிடம் சொல்லி சரியான மெடல் ஒன்று செய்து

அவனுக்கு தொங்கவிடு நன்றாயிருக்கும் இந்தப் பொய்யும் புளுகும் கூறி என்ன பயனை யடையப் போகிறீர்கள் என்றான்.

ராஜலக்ஷ்மி, "அப்படி யெல்லாம் பொய்யும் புளுகும் கூறுவது எனக்கு பழக்கமில்லை ஊர் வம்புகள் பரிகாச வார்த்தைகள் அநாவசியச் சொற்கள் முதலியன பேசி என் நேரத்தை வீணாக்கவேண்டாம் 'கன்னு பின்னு' என்று உளறாமல் கீழே இறங்கிப் போய்விடும். ஒருவரைப்பற்றி விதண்டா வாதமாகத் தூஷித்துக்கொண்டு என் முன்னே நிற்கக்கூடாது. மரியாதையாய் வெளியேபோடா" என்று கட கட வென்று கூறினாள். ஆனால் ஆறுமுகம் பிள்ளை பரிகாசப் புன்னகை புரிந்தான். அடடா! எவ்வளவு பேச்சுச் சாமர்த்தியம்! 'கன்னுப் பின்னு' என்ற வார்த்தைகளைப் பாட்டாக இணைத்து வந்த மடையனைக் கம்பர் ராஜாவிடம் அழைத்து சென்று பரிசுகள் வாங்கிக் கொடுத்த கதை உனக்குத் தெரியாதா? அதே போலச் சுத்த மடையனாகிய என்னுடைய உளறுபடியை நல்லபடியாக்குவது சரஸ்வதியின் அவதாரமாகிய உனக்குக் கடமையல்லவா? நான் கீழே இறங்கிப் போய் விடுவதில் யாதும் ஆக்ஷேபணையில்லை ஒரே ஒரு விஷயத்திற்கு மாத்திரம் பதில் சொல்லிவிடு எனக்கு இப்பொழுது இங்கு வேலை கிடையாது இதோ போய்விடுகிறேன் என்றான் ஆறுமுகம் பிள்ளை.

அதற்கு ராஜம் மறுபடியும் ஒன்றும் பேசாமல் தலை குனிந்தபடியே உட்கார்ந்திருந்தாள். அப்புறம் ஆறுமுகம் பிள்ளை அம்மா! தங்கள் வீட்டுச் சொத்துக்களுக்கும் உங்கள் சிற்றன்னை வீட்டுச் சொத்துக்களுக்கும் நான் ஒருவனே பொறுப்பாளியாயிருந்து அதிகாரஞ் செலுத்திவருகிறேன் என்பதை நீ நன்றாய் அறிவாய். இன்னும் இரண்டு வீட்டு முதலாளிகளுக்கும் தெரியாத சொத்து நுணுக்கங்களும் குடும்ப விஷயங்களைக் குறித்துக் கோர்ட்டுகளில் நடக்கும் காரியங்களைப்பற்றிய முழு விபரங்களும் என் ஒருவனுக்கே தெரியும் இவை யெல்லாம் நான் தற்பெருமையாய்ச் சொல்

லிக் கொள்ள வில்லை. 'ஊரிலே கிடக்கிறது தராசும் படியும்' இப்பொழுதே இரண்டு முதலாளிகளையும் பாப்பர் ஆக்கித் திருவோடு எடுக்கும்படி செய்யக்கூடிய சுருக்கமான தந்திரங்களும் எனக்குத் தெரியும். அப்படியன்றி மேலும் மேலும் விருத்தியைச் செய்து மேன்மைப் படுத்தி வைக்கவும் என்னால் முடியும். நான் இட்டதே சட்டம் நான் வைத்ததே வரிசை. வல்லவன் பம்பரம் மணலிலும் ஆடும் அல்லவா? இக்கவிராயனாகிய கனகை நீ மனப்பூர்வமாய் காதலிக்கிறாய் என்பதை நான் நன்றாய் அறிவேன். அவன் என்ன மனிதன் சாமர்த்தியசாலி என்று உன் மனத்திற் படுகிறதா? படிப்பிலே சூரன் என்று வேண்டுமானால் நீ சொல்லலாம் படிப்பு என்ன வேண்டியிருக்கிறது. பிரமாதம் படிப்பை நீதான் மெச்சிக்கொள்ளவேண்டும். அவனுடைய படிப்பு எதற்கு உதவும். அதிகாரம் பண்ணுதற்காகுமா? அல்லது கோர்ட் நாட்டுக்குத்தான் செல்லுமா? அந்தப் படிப்பிலே நீ மயங்க வேண்டிய அவசியமே இல்லை உனக்குப் படிப்புத் தெரியாதிருந்தால் தானே நீ அவனுடைய படிப்பில் பிரமை கொள்ள வேண்டும். உனக்குத் தெரிந்த அளவு கூட அவனுக்குத் தெரியுமோ? சந்தேகந்தான்.

உனக்குக் கலியாணமாகும் மாப்பிள்ளை எப்படிப்பட்டவனாக இருக்கவேண்டும் தெரியுமா? சிறிது படிப்பு இருந்தாலும் போதுமானது. கோர்ட்டு விவகாரங்களில் மகா சாமர்த்தியமுள்ளவனாகவும் சொற் சாதுர்யம் வாக்கு நாணயம் முதலிய லக்ஷணங்களமைந்துள்ளவனாகவும் இருத்தலே அவசியம் அப்படியானால் தான் உன் வீட்டுச் சொத்து விவகாரங்களை நிர்வகிக்க முடியும். கனகு பெரிய ஏமாளி இளித்த வாயன் உனக்குரிய சொத்துக்களை நிர்வகிக்குஞ் சக்தி அணுவளவேனும் அவனுக்குக் கிடையாது. இனி உன் தமையன் டாக்டர் வேலையாய் ஊர் ஊராகச் சுற்றுவானேயன்றி இங்குத் தங்குவதாயில்லை. ஆதலால் உனக்குக் கணவனாக வருபவனே உன் தமையனுக்குரிய சொத்துக்கள் உன் பிரத்தியேகமான சொத்துக்கள் எல்லாவற்

றையும் கவனித்துப் பார்க்கவேண்டியவன் என்றும் அவனே இந்த வீட்டில் வாசஞ் செய்பவன் என்றும் உன் தகப்பனார் எனக்குக் கடிதம் எழுதி யிருக்கிறார்கள் ஆதலால் கனகுச்கு இந்தச் சொத்துக்களை வைத்து ஆளும் விதம் தெரியாமல் நாலுவிதமாய் ஏமாற்றமடைந்து கடைசியில் தான் கெடுவதும் போகாமல் உன்னையும் ஓட்டாண்டியாக்கித் தெருவில் நிறுத்திவிடுவான்.

கனகு தான் இப்படி யென்றால் உன் சிற்றன்னை முதலியோர் கருதுகிறபடி அவள் தம்பியாகிய சுந்தரமோ கேட்க வேண்டியதில்லை. பெரிய நிவால் மைனர் உள்ளதை யெல்லாம் ஒரே நாளில் தேவடியாள் கையிலே கொட்டிக் கொடுத்துவிட்டு வந்து விடுவான், ஆகவே ராஜலக்ஷ்மி! நான் சொல்வதற்காகச் சொல்லவேண்டாம் ஆற அமர ஆலோசித்துப் பதில் சொல். என்னை நீ கலியாணஞ் செய்து கொண்டால் உனக்கு ஒரு விதக் கவலையும் வேண்டியதில்லை உன் சொத்துக்கள் இரும்புப் பெட்டியில் வைத்துப் பூட்டியது போலப் பத்திரமாயிருக்கும், என்று கூறினான்.

இராஜலக்ஷ்மி ஒன்றும் கூறத் தோன்றாமல் அனல் பொறிலயப்போல வீராவேசங்கொண்டபார்வையாய் அவனை ஏற இறங்க ஒரு முறை பார்த்து விட்டுத் தலை குனிந்தாள். மறுபடியும் ஆறுமுகம் பிள்ளை அம்மா! என்ன யோசிக்கிறாய்? கனகத்தான் சிவப்பு நிறம். சுந்தர மாமா அதைக் காட்டிலும் சிவப்பு இவன் சுத்தக் கறுப்பாயிருக்கிறனென்று எண்ணுகிறாயோ? ஆள் சிவப்பாயிருப்பதனால் மாத்திரம் பிரயோசனமில்லை. சிவப்பானாலும் கறுப்பானாலும் ஆடவருக்கு 'ஆண்மை' வேண்டும் பெண்டிருக்கு முகத்திலே 'லக்ஷ்மீகரம் வேண்டும். 'சிவப்பு ஒரு அழகு; சூடு ஒரு ருசி' என்பார்கள் அது வாஸ்தவமானாலும் நான் 'கறுப்பு ஒரு அழகு, கரும்பு ஒரு ருசி' என்று சொல்வேன். இது பழமொழிக்குப் பதில் புதுமொழி 'கறுப்பு' என்றாற் கேவலமில்லை. சர்வலோக ரக்ஷகனான ஸ்ரீமந் நாராயண மூர்த்தி மைக்கறுப்பு. உலகம் எல்லாம் ஈன்ற உமாதேவி அசல்

புளு பிளாக் மை. இதெல்லாம் போனாலும், 'செத்தாலும் ஆயிரம் பொன், இருந்தாலும் ஆயிரம் பொன்' எனப் புகழப்படுகிற யானைக்கு நிறமென்ன? கறுப்பு அல்லவா! அழகுக் கடவுளாகிய மன்மதனே கறுப்பு! இவை நீ அறியாதன வல்ல!

நான் உன்னிடமே என் உடல் பொருள் ஆவிகளை ஒப்பித்துவிட்டேன். உன் காலுக்கு நான் அடிமை. உனக்குக் குற்றேவல் செய்வதே எனக்குப் புண்ணியமும் புருஷார்த்தமும். எனக்குச் சொத்து ஒன்றும் இல்லை என எண்ணவேண்டாம். என் தாயார் பலவிதத்திலும் ஏராளமான சொத்துச் சேர்த்திருக்கிறாள். இனி மூன்று வகைப்பட்ட கணக்கிலடங்காத ஐவேஜுகளுக்கெல்லாம் நீயே எஜமானி. நீ காலாலிட்ட வேலைகளை நான் தலையாற் செய்து முடிப்பேன். நீ மௌனமாயிருப்பதைக் கவனித்தால் இவ்வளவு கூறியபின் நீ விஷயங்களை நன்றாயுணர்ந்து சம்மதிக்கிறாயென்று தெரிகிறது. உனக்குக் கனகைக் குறித்தேனும் சுந்தரத்தைப் பற்றியேனும் ஒருவித இடைஞ்சலும் உண்டாகாது. கனகுக்கு ஊரை விட்டு ஓடிப்போகும் காலம் கிட்டிற்று. இன்னும் இரண்டு நாட் கூட அவனுக்கு இங்கு இருப்புக் கிடையாது. சுந்தரமோ—(கூர்மையான கத்தியை நீட்டிப் பிடித்துக்கொண்டு) என்றைக்கும் ஒரு நாள் இந்தக் கத்திக்கே இரையாவது திண்ணம். உனக்குச் சம்மதம் என்பதை உன் அழகிய வாயால் தெரிவி. மௌனமாயிருப்பதில் பிரயோஜனமில்லை. உன்னுடைய மனசு எனக்குத் தெரிவது எப்படி? என் காதுக்குள்ளே வேண்டுமானாற் சொல்லிவிடு. நான் உன் பக்கத்தில் வந்து உட்காருகிறேன் என்று கூறிய வண்ணம் ராஜலக்ஷ்மியிடம் நெருங்கினாள்.

ராஜலக்ஷ்மிக்கு செய்வது இன்னதென்று புலப்படவில்லை அவளது உடல் நடுங்கிற்று. வியர்வை ஆறாக ஓடிற்று கைகால்கள் வில்விலத்தன. அம்மயிலிளஞ்சாயலாள் தட்டோட்டி முழுதும் சுற்றிச் சுற்றி யோடினாள் பாதகன் அவளை

விடுவதாக இல்லை. புலிகையில் அகப்பட்ட மான் போலவும் வலையிற் சிக்கிய மீன் போலவும் அவள் துடிதுடித்தாள். இன்னும் ஒரே நிமிஷத்தில் ஆறுமுகம் பிள்ளை ராஜலக்ஷ்மியைக் கட்டிப் பிடித்து விடுவான் என்று தெரிகிறது. ஆனால் அக்கற்புக் கலங்சாக் காரிகை அதற்கு இடங்கொடுப்பாளா! இராஜலக்ஷ்மி கட்டோட்டியினின்று திடீரெனத் தரையில் குதித்து விட்டாள். என்ன செய்வான் ஆறுமுகம் பிள்ளை! அவளோடு கூடக் குதிக்கத் துணிவு அவனுக்கு ஏற்படுமா! பாக்குக் கடிக்கும் நேரம் அங்கே நின்றான். பிறகு எப்படியோ வெளியேறி மறைந்து போனான். ராஜலக்ஷ்மி தவிடு பொடியாய் நொருங்கியிருப்பாளென்பதே அவனது எண்ணம். காலை விடிந்ததும் இந்த இரண்டு பயல்களில் யாரேனும் ஒருவன் தலையிலே ராஜலக்ஷ்மியின் கொலைக் குற்றத்தை யேற்றித் தான் தப்பித்துக்கொள்ளலாம் என்ற உறுதியான தீர்மானத்தோடு பொழுது புலரும் தறுவாயை எதிர் நோக்கியிருந்தான்.

கட்டோட்டியிலிருந்து குதித்த தளரியல் தளிர்போன்ற இரண்டு கரங்களினால் தாங்கப்பெற்றாள். மலரின் இதழ்களுக்கு நடுவில் வீழும் வண்டுபோல இரண்டு கைமலர்களுக்கிடையில் விழுந்த அம்மெல்லியலாளின் கரத்திற் கடிதம் ஒன்று வைக்கப்பட்டிருந்தது. ராஜலக்ஷ்மி தரையிற் சாய்ந்தாள் அவள் தன்னையாரோ ஆடவர் கரங்களால் தாங்கினர் என்று மாத்திரம் உணர்வாள். ஆனால் அவ்வாறு தாங்கினவர் யாரென்பது அவளுக்குத் தெரியவில்லை ஆண்மகன் ஒருவன் கறுப்பு ஆடைதரித்து வீட்டுப்பின்புறச் சுவரேறி ஓடியதாக மாத்திரம் அவள் நினைவிற்பட்டது இதற்குள் உயரத்திலிருந்து கீழேகுதித்த அதிர்ச்சியினால் மூர்ச்சையடைந்தாள். மூர்ச்சை தெளிந்து அவள் தானெழுகையில் காலை மணி 5 ஆய்விட்டது தூப்புக்காரி சுப்பம்மாள் என்ன அம்மா நின்றுகொண்டிருக்கிறீர்களே! என்று கேட்டவண்ணம் சென்றாள் அப்பால் இராஜம்மாள் தன் அருகிற்கிடந்த கடிதத்தைப் பத்திரப்படுத்திவிட்டு வீட்டுவேலைகளை வழக்

கம் போலக்கவனித்தாள். அவள் மனதில் வியப்பும் திகைப்பும் மாறிமாறித் தோன்றிக்கொண்டிருந்தன. சிற்றன்னை சுபாவத்தை விட்டுவிடாமல் அடிக்கடி ராஜாம்மாளது வேலைகளுக்கு முணுமுணுத்துக்கொண்டே யிருந்தாள் மத்தியான வேளையில் காமாட்சியாச்சி வீட்டுக்கு வந்தாள். அவள் "சிவகாமி! இன்று ராத்திரி 1½ மணி மெய்லில் பட்டணத்திலிருந்து உன்மகன் வருகிறான். தந்தி வந்திருக்கிறது ஆறுமுகம் உன்னிடத்தில் சொல்லும்படி சொன்னான் என்றாள் அதற்குச் சிவகாமி "உன்மகனுக்கு வேலை என்ன? ஏதாவது உபயோகமில்லாத விஷயத்தைத்தான் சொல்லியனுப்புவது வழக்கம் யார்வந்தாலென்ன? போனாலென்ன? நமக்குக் கவலையில்லை. எனக்குப் பிள்ளையும் இல்லை குட்டியுமில்லை," என்று தடபுடலாய்ப்பேசினாள். காமாட்சி அதற்கப்புறம் போய்ச்சேர்ந்தாள்.

பொழுதுசாயும் நேரமாயிற்று மணி 4 இருக்கலாம வீட்டுவேலைகள் ஒருவாறு தீர்ந்து ராஜலக்ஷ்மி கடிதத்தை எடுத்துக்கொண்டு மேல்மாடிக்குச் சென்றாள். தன் அறையிலே போய் உட்கார்ந்து கடிதத்தைப் படிக்கத் தொடங்கினாள்.

## கடிதம்.

கனகசபாபதி, கலியாணபுரம்,

ஆசிரியர். திகதி 24-6-

அருங்குணம் நிறைந்த அறப்பெருஞ் செல்வீ!

நாம் இருவரும் நம்முடைய தீர்மானங்களை அடியோடு மறந்து விடுதல் இன்றியமையாதது. பெருவேதனையிலாழ்த்தவே வேதன் நம்மைப் படைத்தான் போலும்! நான் உன்னை முற்றிலும் மறந்தேன். நீயும் அங்ஙனமே என்னை மறந்து விடுக. நான் இவ்வூரிலிருத்தலால் உனக்குப் பலவித இடைஞ்சல்கள் உண்டாதல் திண்ணம். ஆனால் நம்முடைய கோரிக்கை நிறைவேறுவது ஆகாயத்தாமரையே ஆம்

ஆதலால் நான் ஊரை விட்டு அகல்கிறேன் இன்ன இடத்திற்குச் செல்வேனென்பதைக் கூற எனக்கு விருப்பம் இல்லை. நாளை மாலை 5 மணி வண்டியில் என் பிரயாணம் தொடங்குகிறது. நீ பெற்றோர் கட்டளைப்படி கண்ணுக்கினியானொருவனை மணந்து, எல்லா இன்பங்களும் மல்கி இனிது வாழ்வாயாக.

இங்ஙனம்,

உன் விள்ளா நட்பை உள்ளாது தள்ளும்

கொடியன்,

கனகசபாபதி.

இக்கடிதத்தை ராஜலக்ஷ்மி பல முறை படித்துப் பார்த்தாள் பல பல எண்ணித் துயருழந்தாள். மணி என்ன ஆயிற்று என்று பார்த்தாள். 5 மணி அடித்தது உடனே ஐந்து நிமிஷத்திற்குள் கடிதம் ஒன்று எழுதினாள்.

கடிதம்.

இராஜலக்ஷ்மி கலியாணபுரம்,

திகதி 25-6-

மறப்பினும் மறக்க இயலா அறப் பெருந் தலைவ!

என்னுடைய உள்ளன்பைக் கடிந்து செல்லும் தங்கள் துணிவை என்னென்பேன்! புருஷர்களது மனம் கல்லினும் கடிது என்பதைத் தாங்கள் நிதர்சனமாக்கினீர்கள். எவ்வளவோ மடித்து மடித்துக் கூறியும் தாங்கள் என்னைத் தள்ளவே துணிந்தீர்கள் நன்று; நன்று, தாங்கள் நேற்று நள்ளிருளிலும் எதிர்பாராவிதத்திலே என்னைக் காப்பாற்ற நேர்ந்த ஆச்சரியத்தை நான் எங்ஙனம் தாங்குவேன்? இதனோடு மூன்று தடவை என்னுயிரைக் காப்பாற்றினீர்கள்.

கைம்மாறு கருதாச் செம்மலே!

இனி என் உயிரைக் காப்பாற்றத் தங்களால் இயலாது

நான் இன்னும் நான்கு தினங்கள் உயிர் தரித்திருப்பேன் நான்கு தினங்களுக்குள் தாங்கள் எவ்விடத்தில் தாமதிக்க நேர்ந்தாலும் அவ்விடத்திலிருந்து எனக்குக்கடிதம் விடுக்கத் தவறுதீர்கள் தங்கள் கடிதம் கண்டதும், என் தந்தையையும் தமையனையும் தாங்களிருக்கும் இடத்திற்கு அனுப்பி விரைவிலே நம் கோரிக்கையை முடிப்பது உறுதி. அதைப்பற்றி ஐயம் தங்கட்கு வேண்டியதில்லை தங்கள் கடிதம் காணு விட்டாலும் அல்லது அவ்விருவரும் என் கருத்துக்கு இணங்கா விட்டாலும் என் உயிரை அப்புறம் காணுதல் அரிது நான் உயிர் துறப்பது நிச்சயம். அவ்வாறு இறக்க நேரிடுமாயின் என்னுடைய இறுதி வந்தனங்களை இத்துடன் தங்கள் திருவடிக் கமலங்கட்குச் சமர்ப்பிக்கும்,

பிரியை இயலாப் பிரியை,

இராஜலக்ஷ்மி.

இக்கடிதத்தை எழுதி முடித்ததும் ராஜலக்ஷ்மி தூப்புக்காரி சுப்பம்மாள் வசம் அதைக் கொடுத்தாள். ஓட்டமாய் ஓடிச் சென்று 5 மணி ரயிலுக்குப் போய்க் கனகுவிடம் கொடுக்கும்படி ஏற்பாடு செய்தாள் நிற்க.

இனிக் கனகசபாபதியின் நிலைமையைக் கவனிப்போம் இராத்திரி தூங்கிக்கொண்டிருந்தவன், கொடிய கனவுகள் பல கண்டானல்லவா? நடுச்சாமத்தில் பதறி எழுந்தான். மேற்கண்ட கடிதத்தை எழுதிமுடித்தான் எப்படியாவது ராஜாம்பாள் வீட்டிற்குச் சென்று பின் புறம் வழியாய் உள்ளே நுழைந்தால் அங்கு இலேசாக மாடியிலேறிச்செல்லும் பாதை ஒன்று உண்டு என்பது அவனுக்குத் தெரியும் அப்படி ஏறி மாடிக்குச்சென்று சௌகரியப்படுமானால் இராஜலக்ஷ்மியிடம் இறுதியாகச் சாம்பாஷித்துச் சமாதானமாகக் கடிதத்தைக் கொடுத்துவிடலாம் என்று எண்ணித் திருடன் போலத் தோட்டத்திற்குள் நுழைந்து வந்தான். அங்கு வந்த நேரத்தில் தட்டோட்டியில் நடந்த செய்தியைக் கண்ணாரக்கண்டான். என்ன ஆபத்து வருமோ என

உஷாராயிருந்தான். இராஜலக்ஷ்மி கீழே குதித்ததும் அவளைத் தாங்கி அங்கேயே போட்டு விட்டுக் கடிதத்தையும் அவள் கையில் வைத்து மறைந்து ஓடிச் சென்றான் வீட்டிலே போய் மறுபடியும் படுத்துக்கொண்டான்.

மறு நாட் பொழுது புலர்ந்தது 10 மணி மெயிலும் கலியாணபுரத்துக்கு வந்து சேர்ந்தது அன்றைய "ஜெய பாரதி" பத்திரிகை அந்த ரயிலில் வந்திறங்கிற்று.

‘கலியாணபுரம் கனதனவான்களுக்கு எச்சரிக்கை’

"விதவா மோகினி"

என்று கொட்டை எழுத்திலே அச்சிடப்பட்ட சுவரொட்டிகள் அன்று கடை தோறும் தொங்கின. கலியாணபுரத்தில் அன்று பகல் 12 மணிக்குள் ஆயிரம் இதழ்களுக்குமேல் அன்றைய ‘ஜெயபாரதி’ விற்பனையாயிற்று கணக்கன் ஆறுமுகம் பிள்ளை அன்று கடைவீதியில் நின்று கொண்டிருந்தான், அப்பொழுது எதிர்க்கடையிலே தொங்கவிட்டிருந்த பிரசுரத்தைக் கண்டான். உடனே தானும் காலணுக்கொடுத்து ஒரு பிரதி வாங்கிக் கொண்டான் எழுத்தெண்ணிப் படிக்குஞ் சாமர்த்தியசாலி யாகிய ஆறுமுகம் பிள்ளை அந்த பத்திரிகையுடன் வீடு வந்து சேர்ந்தான் சுமார் 25 வரிகளுள்ள அக்கட்டுரையை அவன் ஒரு மணி நேரத்தில் படித்து முடித்துவிட்டான் அதை முடித்தது தான் தாமதம் அவனுக்கு ஆத்திரம் பொங்கித் ததும்பிற்று. ‘இந்தப் பயல் ‘கனகு’ தான் இதை எழுதியிருக்கிறான். அந்தச் சின்னப்பயல் ஜெயபாரதி பத்திரிகை ஏஜண்ட் என்று கேள்வி அதனோடு அவனே பத்திரிகை நிருபர் என்றும் சொல்லிக்கொண்டார்கள். இவனை யல்லாமல் வேறு யார் இந்த விஷயத்தைப் பத்திரிகைக்கு எழுதி யனுப்ப முடியும்? என் தாயார் மீது இந்தப் ‘படவா’ வுக்குள்ள க்ஷாத்திரம் நமக்குத் தெரிந்தே யிருக்கிறது. இவனே இந்த அயோக்கியத்தனமான காரியத்தை எழுதியிருக்கிறான். இதில் சந்தேகம் என்ன? குட்டிச்சுவரில் முட்டிக்கொள்ள வெட்கமற்றா? இன்றே அவனைக் காதோடு தொலைக்காப்

போடுகிறேன். என்று கையில் பிரம்பை எடுத்துக்கொண்டு வெளிக்கிளம்பினான் அந்தச் சமயத்தில் காமாட்சி யாச்சி வீட்டுக்குள்ளிருந்து ஓடி வந்து 'அடே ஆறுமுகம்! கனகு என்ன எழுதினான். எனக்குக் கொஞ்சம் படித்துக் காட்டு. அப்புறம் உன்னுடைய சூரத்தனத்தைக் காட்டலாம் என்று குறுக்கிட்டாள். உடனே ஆறுமுகம் பிள்ளை இந்தா பாரு படிக்கிறேன்—படவாப் பயல்—ராஸ்கல், எழுதியிருக்கிறான் எவ்வளவு துணிச்சல்! (திக்கித் திக்கிப் படிக்கிறான்)-



கலியாணபுரம், கனதனவான்களுக்கு

**அவசியமான ஓர் எச்சரிக்கை.**

**"விதவா மோகினி"**

பண்டொரு காலத்தில் திருமால், மோகினி அவதார

மெடுத்தார் திருப்பாற் கடலைக் கடைந்தெடுத்த அமுதத்தைத் தேவர்களுக்கு மாத்திரம் கொடுப்பதாகத் திருமாலின் யோசனை. அசுரர்கள் மோகினியின் மோக வலையில் அகப்பட்டு மயங்கிக் கிடந்தார்கள் திருமால் தேவர்களுக்கு மட்டில் அமிர்தத்தை வழங்கினார் இந்தச் சூதை அறிந்த அசுரன் ஒருவன் உருமாறித் தேவர்களுக்கு நடுவில் வந்து உட்கார்ந்தான். திருமால் இதனை உணர்ந்து அகப்பையினால் ஒரு போடு போட்டார் அசுரன் இரண்டு பிளவாக வீழ்ந்தான் அப்பிளவுகளே இராகு கேதுக்கள் என்பார்கள் இந்தக்கதை இந்திர ஜால புராணத்தில் மந்திர ஜாலப் படலத்திற் கண்டது ஆனால் இது நம்பத் தகுந்ததோ! இல்லையோ? என்பது வேறு விஷயம். பல்வளங்களும் நிறைந்த கல்யாணபுரத்தில் மோகினியின் அவதாரமாக ஒருத்தியுண்டு. அவள் சிறு வயதிலேயே அறுதலியானவள் அவளுக்கு இப்பொழுது வயது ஐம்பதுக்கு மேலிருக்கலாமாயினும் மங்கைப் பருவத்தினள் என்று பார்த்தவர் மயங்கத்தக்க தளுக்குப் பிலுக்குகள் அவளிடம் குடிகொண்டு விளங்குகின்றன. பளபளவென்று நெறித்து நீண்டு சுருண்ட கூந்தல், முத்துக்கோர்வை போன்ற பல் வரிசைகள் பெட்டை யானை போன்ற நடை அணிந்துள்ள விலையேறப்பெற்ற ஆபரணங்கள் பாலாடை போலும் மெல்லிய மஸ்லீன் பட்டாடை கம்பீரமான மருண்ட பார்வை முதலியவைகளால் பதினாறு வயது வாலிபனையும் மயங்கும்படி செய்யும் அவ்விதவையை மோகினி என்று கூறுவதில் தடை யாது? கலியாணபுரத்துக் கனதனவான்களுக்கெல்லாம் இவளிடத்தில் அபார வாஞ்சையும் நன் திப்பும் நம்பிக்கையும் இருப்பது பெரிதும் வியக்கத்தக்கது! இவளை செல்வந்தர் வீட்டிற் சரசமாகப் பழகுவதற்கு இடங்கொடுத்தலால் விளையும் தீமைகள் கணக்கில்லாதவை இவளை நம்பி, கன்னிகைகளுக்கு இவளைத் துணையாக இருத்தி அயலூர்களுக்குக் கூடச் சில பணக்காரர் சென்று விடுகின்றனர் இதுகாறும் இக்காதகியின் வஞ்சகத்தால் கற்புக்குலைந்த மடவார் பலர் ஆதலால் கலியாணபுர வாசிகளான சீமான்களே! இனியேனும் இத்தகைய மோசக்காரியான விதவா

மோகினியின் விஷயத்தில் ஜாக்கிரதையாக இருந்து நங்கள் இளம் புதல்வியரின் நிறையைக் காப்பீராக! உங்களுடைய குலத்திற்கும் கீர்த்திக்கும் செல்வத்திற்கும் அழிவு விளையத் தக்க பழியைத் தேடிக்கொள்ளாதீர்! விதவா மோகினியின் நயவஞ்சகத்தில் அகப்பட்டு விழிக்காதீர்! உஷார்!

உண்மை விளம்பி.

ஆறுமுகம் பிள்ளை இங்ஙனம் படிக்கக்கேட்ட காமாட்சி யாச்சிக்குக் கைகால் தெரியாமற் சினம் பெருகிற்று ஒரு குதி குதித்து வெளிக்கிளம்பினுள் ஆறுமுகம் அவளைப் பிடித்து வீட்டுக்குள்ளே தள்ளிக் கதவைப் பூட்டிவிட்டு ஓட்டமாய் ஓடிக் கனகசபாபதி வீட்டை அடைந்தான கனகு தாயாரை ஊருக்கு அனுப்புவதற்கேற்ற தயார் செய்து முடித்து அப்பால் தானும் அன்று 5 மணி வண்டியில் மதுரை போய் அங்கிருந்து சென்னை மார்க்கமாகக் கொலாலம்பூர் போவதாக முடிவு கட்டி கொலாலம்பூருக்குக் கடிதம் ஒன்று எழுதிக் கொண்டிருந்தான் ஆறுமுகம் விரைவாக வீட்டுக்குள் நுழைந்து 'இதுதானே பத்திரிகைக்கு எழுதிய கை' என்று பிரம்பினுல் ஓங்கிக் கனகசபாபதியின் கையிலே ஒரு அறை பளீர் என்று இழுத்தான். ஆனுல் அந்த அறை அவன் எழுதிக்கொண்டிருந்த மேஜையிலே பட்டது பிரம்பும் சுக்கல் சுக்கலாய்ப் போயிற்று. இதற்குள் கனகசபாபதி எழுந்து நின்றுன். ஆறுமுகம் அவன் கையைப் பிடித்துக் கறகறவென்று தெருவுக்கு இழுத்து வந்தான் கனகு ஒன்றுமே வாய் திறந்து பேசாமல் ஆறுமுகம் பிடித்திருந்த பிடியிலிருந்து கையை உதறி அவன் பல்லுதிரும்படி கன்னத்தில் ஒரு அடி வீக்கினுன். ஆறுமுகத்தின் பற்களில் இரண்டு கீழே விழுந்து இரத்தமும் கொளுகொளுவென்று வழிந்தது ஒரே நிமிஷத்தில் இருவரும் தெருவிற் கட்டிப் புரண்டார்கள். ஆனுல் அப்பொழுது மத்தியானம் இரண்டு மணியாகையால் தெருவிற் கூட்டம் பலத்தது. ஜனங்கள் இருவரையும் விலக்கினுர்கள்! ஆறுமுகம் 'இன்று ராத்திரி எப்படியும் நீ செத்தாய்' என்று கூறிக்கொண்டே தன் வீட்

டை நோக்கிப் போய்விட்டான். கனகசபாபதி வீட்டிற்குள் சென்றான் தாயாரும் தனயனும் அடைந்த வருத்தத்திற்கு அளவு இல்லை கனகசபாபதி துரிதமாக எல்லாக் காரியங் களையும் முடித்து விட்டு தாயாருடன் புகை வண்டி நிலையை அடைந்தான் 4 மணிக்கு மேற்கே போகும் ரயிலில் தாயா ரை அனுப்பினான் இருவரும் கண்ணீரருவியிற் படிந்து பிரிந்தார்கள். 5 மணிக்குக் கிழக்கே செல்லும் வண்டியில் கனகசபாபதியும் ஏறினான் ரயிலும் நகர்ந்து பிளாட் பாரத் தைக் கடக்கும் தறுவாயில் யாரோ ஒரு போர்ட்டர் ஐயா! ஒரு பெண்பிள்ளை தங்களிடம் இதைக் கொடுக்கும்படி சொன்னாள். என்று சொல்லிக் கனகசபாபதியின் கையில் ஒரு கடிதத்தை ஓடி வந்து கொடுத்தான் ரயில் விரைவில் ஸ்டேஷனை விட்டு அகன்றது.



## அத்தியாயம் 6.

### நவநாகரிகக் காமுகர்.

இரவு மணி 10½ க்குச் செங்கோட்டையிலிருந்து வரும் திருவநந்தபுரம் எக்ஸ்பிரஸ் விருதுநகர் ஜங்ஷனுக்கு வந்து சேர்ந்தது. சென்னையிலிருந்துவரும் மெயிலும் அந்நேரத்தில் அங்கு வந்துநின்றது. திருவநந்தபுரம் எக்ஸ்பிரஸ் சற்றுப்பிந்தி வந்ததாகையால் அதிலிருந்து ஆட்கள் ஏறியும் இறங்கியும் நின்றுகொண்டிருந்தார்கள். சென்னை மெயிலில் இரண்டாவது வகுப்புத் தனிவண்டியொன்றில் நடக்கும் ஒரு காட்சியைச் சற்று கவனிப்போம். நவநாகரீகக் காமுகர் இருவர் ஆண் அன்னமும் பெண் அன்னமும் ஜோடியாயிதாற்போல உட்கார்ந்திருந்தனர். ஆடவனுக்குச் சுமார் 25 வயது இருக்கலாம். ஆங்கிலேயர் முறையில் அவன் ஆடம்பரமான உடைகள் தரித்திருந்தான். தலையிலிருந்த தொப்பியைக் கழற்றிக்கையில இடுக்கிக்கொண்டு அடிக்கடி அவன் வெளியே எட்டிப்பார்ப்பதும் உள்ளேயிருக்கும் தன் காதலியோடு சம்பாஷிப்பதுமாயிருந்தான். அவன் முன் உட்கார்ந்திருந்த நங்கையோ, நாகரீகமான இந்தியச் சீமாட்டிகளைப்போல உடைகள் அணிந்து, ஆங்கில மாதரைப்போலக் கூச்சம் சிறிதுமில்லாத நடையும் நொடியு முடையவளாக விளங்கினாள். அவள் பேசுகிற பேச்சிலிருந்து அவளுக்குத் தமிழ், இங்கிலீஷ், ஹிந்துஸ்தானி முதலிய மூன்று பாஷைகளிலும் பரிச்சயம் உண்டென்பது தெற்றெனப்புலப்பட்டது இடையிடையே இடையிற் செருகியிருந்த பட்டுக் கைக்குட்டையை எடுத்து முகத்தைத் துடைத்தவாறே காதலனோடு பேச்சுச் சாரசம்சத்தில் ஆழ்ந்திருந்தாள்.

வைஸிராயும் அவர்தம் சீமாட்டியும் போலக் கைகோத்துக் கூடிக்குலாவும் அந்நாகரீகக் காமுகர் இருவரும், எதெதையோபற்றி உல்லாசமாக பேசிக்கொண்டிருந்தனர். அவர்களது பார்வைகள் ஒருவரை ஒருவர் நாடினவே யன்றிப் பக்கத்தில் நாற்புறமும் ஜனங்கள் நடமாட்டமிருப்பதைக்

கவனித்தனவாகத் தோற்றவேயில்லை. இவர்களிருந்த இடத்திற்கு நேரே, திருநெல்வேலி மார்க்கமாய் வந்துநின்ற எக்ஸ்பிரஸின் 3-வது வகுப்பு வண்டியில் ஆணும் பெண்ணுமாக அநேகர் கூடிநின்று இவ்விரு காதலரது உல்லாச சல்லாப லீலா விநோதங்களைப் பார்த்தவண்ணமாய்ப் பிரமிப்புடன் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களில் ஓரேஒரு ஆண்மகனது பார்வை இவர்களை மிகவும் கூர்ந்து கவனிப்பதாகப் புலப்பட்டது. இனி இருவருக்குள் நடந்த சம்பாஷணையைக் கவனிப்போம்.

(சம்பாஷணை ஆங்கிலத்தில் நடந்ததைத் தமிழில் மொழி பெயர்த்திருக்கிறது.)

காதலன்:- அநேகமாய் என் ஊருக்கு நெருங்கி விட்டேன்.

காதலி:- 'நம்முடைய ஊர்' என்று சொல்லலாகாதா? தங்களுடைய ஊர், இனி எனக்கும் சொந்தவூர்தானே. இப்பொழுதே தாங்கள் என்னைப் பிரித்துக் குறிப்பிடுவதைப் பார்த்தால் எனக்குச் சற்றுப் பயமேற்படுகிறது.

காதலன்:- என் அன்பே! அங்ஙனம் அன்று. பழைய ஞாபகத்திலே பேசிவிட்டேன். இப்பொழுது நாம் ஜோடியாக இருக்கிறோம் என்பதை நினைக்கவில்லை.

காதலி:- சரி! பேஷ்! ஹா ஹா .... .... (சிரிப்பு) எத்தனை மைல்கள் உண்டு, கல்யாணபுரம் ஸ்டேஷனுக்கு?

காதலன்:- இன்னும் சுமார் 85 மைல்கள்.

காதலி:- இதற்கு அடுத்ததுதானே திருநெல்வேலி ஜங்க்ஷன்.

காதலன்:— இல்லை நடுவில் மணியாச்சி ஜங்க்ஷனிருக்கிறது. சரியாய் $1\frac{1}{2}$ மணிக்கு இந்த வண்டி கலியாணபுரம் போய்ச்சேரும்.

காதலி:— கலியாணபுரத்தில் வண்டி நின்றதும் நாம் நேரே வீட்டுக்குத்தானே போகவேண்டும். வீடு ஸ்டேஷனிலிருந்து நிரம்பதூரமா?

காதலன்:—மிகச் சமீபம்தான், ஆனால் நான் உனக்காக ஸ்டேஷனுக்கு அருகாமையில் பங்களா ஒன்று அமர்த்தி வைக்கும்படி நேற்றைக்கு முந்தியநாளே தந்திகொடுத்தேன், அதற்கு அப்படியே சித்தம் செய்து வைத்திருப்பதாக பதில் தந்தியும் வந்துவிட்டது. ரயிலிலிருந்து இறங்கினதும் உன்கூட ஒருஆளைப்பார்த்து உன்னைப் பங்களாவுக்கு அனுப்பி விடுகிறேன். நான் வீட்டுக்குப்போய் திருப்பி வந்து .... .... அப்புறம் .... .... ....

காதலி:- ஏன் அப்படி? எனக்காக என்ன சௌகரியத்தைத் தாங்கள் கேடவேண்டி யிருக்கிறது? தங்கள் வீட்டிலேயே தனிஅறை ஒன்றுகொடுத்தாற் போதுமானது

காதலன்:- அப்படியல்ல. எங்கள் வீடுகள் புராதன மாதிரியிலமைந்தவை நம்முடைய சௌகரியங்களுக்கு அம்மாதிரி வீடுவசதியாயிராது. வேறும் பலவித இடைஞ்சல்கள் உண்டு. நான் சென்னைக்கு வந்தபிறகு சொந்தவூருக்குப் போவதையே அநேகமாய் நிறுத்திவிட்டேன். அப்படிப் போனாலும் சொற்பநாட்களே அங்குத்தங்குவது. அங்ஙனம் தங்கும் நாட்களிலும் வீட்டில் தரித்திருப்பது துர்லபம்.

காதலி:- ஆமாம் பட்டணவாசத்திற்கு வந்த பிறகு பட்டிக்காடு நரகமாகத் தோற்றுவது சகஜம்தான. நம்முடைய பங்களா சௌகரியமா யிருக்குமல்லவா?

காதலன்:- ஓஹோ! மெத்த சௌகரியம் நிரம்ப ஷோக். (புன்சிரிப்பு)

காதலி:- என்ன?. பரிகாஸம் செய்கிறீர்களா? ஏனோ இந்தக் கேலி?

காதலன்:- என் அன்புக் காதற் களஞ்சியமே! உன்னைப் பரிகாஸம் செய்ய எனக்குப் பைத்தியமா? நன்றாயிருக்கிறது. எனக்குச் சிரிப்பு வந்தற்குக் காரணம் வேறு.

அதாவது:- கலியாணபுரத்திலிருந்து நான் பட்டணத்துக்குப் புறப்பட்டு வரும்போது என்னுடைய நடையுடை பாவனைகளிருந்த விதம்வேறு. இப்பொழுது முற்றிலும் மாறிவிட்டன. ஒரு புதிய பிறவி அடைந்தாற்போலக் காணப்படுகிறேன். இன்னுமொரு விஷயம் என் சொந்தவூரிலிருக்கும் பொழுது, புதிய நாகரீகத்திலே ஈடுபட்ட பெண்களைப் பார்ப்பதற்குக்கூட என் மனம் பொறுக்காது. எனக்குச் சிநேகிதன் ஒருவன் உண்டு. அவன் நெருங்கிய பந்துத்துவமும் உள்ளவன் 'கனகு, என்பது அவன் பெயர். அவன் பெரிய வைதீகம். படிப்பிலே அதி நிபுணன். முன்னிருந்த நிலையில் அவனுக்குக்கூட என் தங்கை ராஜம்மாளைக் கொடுப்பதாக எண்ணியிருந்தோம். இப்பொழுது நம்முடைய நிலைக்கு அவனுடைய நினைசு சிறிதும் ஒவ்வாதுஎன்று அந்தத் தீர்மானத்தை மாற்றிவிட்டேன். என் தந்தைக்கும் அதைக் குறித்துக் கடிதம் எழுதினேன். அவரும் அவனுக்குக் கலியாணஞ் செய்விக்கும் விஷயத்தில் ஞாபகம் இருப்பதாகத் தெரிவிக்கக் காணும். அவருக்குச் சொத்து விஷயத்தில் போதாது என்ற எண்ணமாயிருக்கலாம்.

காதலி;- பழைய வைதீகப் பித்துக்களுக்குப் பெண்ணைக் கட்டிக்கொடுத்தால் நமக்கும் சஞ்சலமே. உலகம் நாகரீகமடைந்து வருவதற்கேற்றபடியல்லவா நம்முடைய யோசனைகளும் முன்னேறிக்கொண்டு வரவேண்டும். அதைவிட்டுத் திரும்பத் திரும்பப் பழைய பள்ளத்திலேயே காலை இடுவது அழகாயிருக்குமா? நம்முடைய குஷால்களுக்குத் தகுந்த வேஷாக்குப் பேர்வழியாக அமைந்தால் தானே, மைத்துனனும் மைத்துனனும் உறவு கொண்டாடித் திரிவது ஒற்றுமையாயிருக்கும்? தாங்கள் எண்ணுவது சரியே! ஆனால் உங்கள் தங்கை எப்படிப்பட்டவள்? தங்கள் தங்கை தற்கால நாகரீக நடையுடை பாவனைகள் அறிந்தவள் தானே!

காதலன்.—இதற்குள் அம்மாதிரி நாகரீக முறையில் அவள் திருப்பி விடுவதற்குப் பாதையில்லை. பழைய வழக்க ஒழுக்கங்களில்தான் படிந்திருப்பாள். அவளைப் புதிய மாதி

ரியில் மாற்றுவதும் சற்றுச் சிரமமான காரியம். ஆனாலும் பெண்களை நாலு இடத்திற்குக் கூட்டிக் கொண்டுபோய் உலகம் போகிற போக்கைக் காண்பித்துக்கொடுத்தால் அவர்கள் எளிதில் திரும்பிவிடுவார்கள். மேலும் ஆடவனுடைய நாகரீக வழிகளையும் அம் மாறுதல் பொறுத்திருக்கிறது. அவர்களுடைய சாமர்த்தியத்தால் எளிதில் பெண்களை மாற்றி விடலாம்.

காதலி:—தாங்கள் கூறுவது, அநுபவத்தில் எவ்வளவு உண்மையோ? இருக்கட்டும் பெண்களே எளிதில் ஆண்களை இம்மாதிரி விஷயங்களில் ஏமாற்ற வல்லவர்கள்.

காதலன்:—அது 'இல்லை' என்று நான்மறுக்க வரவில்லை. ஆனல் கர்நாடகப் பெண்கள் அவ்வாறு ஆண்களை மாற்றவல்லவர்கள் அல்லர். கர்நாடக வழியைப்பின்பற்றிய ஆண் மக்களை, நாகரீகப் பெண்மணிகள் எளிதில் மாற்றிவிடுவதே பிரத்தியக்ஷம்.

காதலி:—ஏதேது! நிரம்பக் கைகண்ட அநுபவம் போலிருக்கிறதே! நாகரீகப் பெண்கள் கர்நாடகப் பேர்வழிகளை ஏமாற்றுவது எளிதென்பது தங்கள் அபிப்பிராயமோ?

காதலன்:—ஆமாம்! அதிற்சந்தேகம் என்ன? இதற்கு உதாரணம் வேண்டுமானலும், தேடிப்போக வேண்டியதில்லை. நமக்குள்ளேயே பார்த்துக்கொள்ளலாம்.

காதலி:—ஆஹா! சபாஷ்! அப்படியானல், தாங்கள் கர்நாடகப் பேர்வழியா? நானு தங்களை இம்மாதிரி நாகரீகம் உடையவராக மாற்றினவள்? தாங்கள் கூறுவது பொருத்தமாயில்லை. நான் தங்களைச் சந்தித்து நாட்கள் ஏழுகூட இன்னும் சரியாய் முடியவில்லை. கவர்னர் துரை மாதிரி இருக்கிறீர்கள். பச்சை யூரோபியர்.

காதலன்:—சரி! சரி! அதிகமாகக் கேலிபண்ண வேண்டாம். நீ என்னை இப்படி மாற்றியதாகச் சொல்லவில்லை.

காதலி:—பின் எப்படிச் சொன்னீர்கள்?

காதலன்:—என்னுடைய கர்நாடக முறைகளை மாற்றி இப்படித் துரையாகச் செய்தது, மெட்ராஸ் நாகரீகம். மதராஸ் நாகரிக மாதரை முதன் முதலிற் கண்டதும், நான் அவர்களுடைய கடைக்கண் பார்வையாவது என் மீதில் விழுமே வேண்டுமே யென்று நான் ஒற்றைக்காலில் கொக்குப் போல நின்று தவம்புரிந்தது எனக்கல்லவா தெரியும்?

காதலி:—அப்படியா?. நன்றாயிருக்கிறதே! (தமிழில்)

"ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி இருக்குமாம் கொக்கு"

என்பது போல சரியான

பெரிய மீன் எப்பொழுது நம்வலையிலே அகப்படும் என்று எண்ணி ஏங்கியிருந்தீர்கள். இந்த மீன்தான் கடைசியில் கொக்குக்கு அகப்பட்டது போலிருக்கிறது! அப்படித்தானா?

காதலன்:—எப்படி? உனக்குத் தமிழிலே செய்யுள் கூடவா தெரியும்? ஏதோ பாம்பே சேட்ஜீக்கு மகள் என்றாய். தமிழ், மதராஸில் வந்த சமயங்களில்தான் பழகினேன் என்றாய். நீ சொல்வதெல்லாம் முன்பின் முரணாக இருக்கிறதே.

காதலி:—அதெல்லாம் வேறு விஷயம். தமிழ்ப்பாடல்களின் அருமைகள் என் தகப்பனாருக்குத் தெரியும். ஆதலால் தென்னாட்டுப் புலவரொருவரைக்கொண்டு இளமைப் பருவத்திலிருந்தே எனக்குத்தமிழ்கற்பித்து வந்தார். ஆனால் சுத்தமாகத் தமிழரைப்போல பழக்கமாகவே பேசத்தொடங்கியது, மதராஸில் வைத்துத்தான்.

காதலன்:—மதராஸ் தமிழ், ரொம்பச் சுத்தமான தமிழா! 'இழுத்துக்கொண்டே போனான்' என்பதை "இஸ்துக்கினே போனா" என்று இப்படி லக்ஷணமாய் பேசுவார்கள், திருநெல்வேலிச் செந்தமிழுக்குப் பிறகு தான் மற்றக் கொடுந் தமிழ்களெல்லாம். ஊரிலிருக்கும்பொழுது தமிழில் எனக்கு நல்ல பாண்டித்தியம் இருந்தது. 'கனகு' என்று சொன்

னேனே! அவனுக்குத் தமிழிலே நல்ல ஞானம் உண்டு. அவனுடைய வாசனை வீசிக்கொண்டேயிருந்தது. சென்னைக்குப் புறப்பட்டு வருகையில் அவனுக்கே தமிழ்ப்பாடையை ஒப்பித்துவிட்டேன். இப்பொழுது தமிழிலே பேசுவதென்றாலும் எழுதுவதென்றாலும் நிரம்பக் கஷ்டமாயிருக்கிறது. ஆங்கில வார்த்தைகள் மடமடவென்று தண்ணீர் பட்ட பாடாயிருக்கிறது. இப்பொழுது ஒரு கூட்டத்திலே தமிழில் பேசுவதென்றால் தட்டுத் தடவலாய் விட்டது.

காதலி—ஆங்கிலப் புலமை நிரம்பிவிட்டால், இப்படி ஏற்படுவது சகஜமே எல்லாம் பழக்கந்தான் காரணம்—சரி இருக்கட்டும். எங்கோ பேச்சை இழுத்து விட்டீர்களே! கொக்குப் போல நின்ற தங்களுடைய தவம் எங்ஙனம் பலித்தது?

காதலன்—தவம்! எப்படிப்பட்ட தவம் தெரியுமோ? நாகரீகத் தடபுடலாய்த் திரிவதே என் தவம். விதவா விவாஹ பிரசாரமே என் ஜபம். நூற்றுக்கணக்கான விதவைகளோடு நாடோறும் சம்பாஷிப்பதே என் மந்திர தந்திரங்கள். இப்படி ஐந்து வருஷக் கடுந்தவத்தின் முடிவில் 'கமலாதேவி' பிரசன்னமாயிருக்கிறாள்.

காதலி—கலியாணபுரத்தை நெருங்க நெருங்கத் தமிழ் வாசனை வீசுகிறது போலும்! தமிழிலே தான் இப்படிப் பட்ட உருவகங்கள் சிலேடைகள் உண்டு என்பார்கள்.

இனிமேல் நடக்கும் சம்பாஷணையில் காதலிக்கும் தமிழ்ப் பயிற்சி உண்டு ஆகையால் இருவரும் தமிழின் நயந் தோன்றும்படி தமிழிலும் ஆங்கிலத்திலுமாகப் பேசுகிறார்கள்.

காதலன்—அதிருக்கட்டும் உன்னை ஒரு விஷயம் கேட்க வேண்டியிருக்கிறது. சென்னையிலிருக்குங் காலத்தில் உன்னை விட எவ்வளவோ அழகு அழகான ரம்பைகளோடெல்லாம் சப்பாஷித்திருக்கிறேன். அவர்கள் வலை

யில் எல்லாம் நான் அகப்படாமல் உன்னிடத்திற் சிக்கிக் கொண்டேனே. இதுதான் நான் முன் சிரித்ததற்கும் காரணம்.

காதலி—என்னிடத்தில் என்னை யறியாமலே ஏதோ காந்த சக்தி யிருக்கிறது அது தங்களை ஆகர்ஷித்தது.

காதலன்—காந்த சக்தி கூட இல்லை. ஏதோ மாயப் பொடி போட்டு என்னை மயக்கிவிட்டாய்.

காதலி—மாயப்பொடி என்பது என்ன! மாயப் பொடி யினுல் ஆட்களை வசப்படுத்த முடியுமா?

காதலன்—ஆஹா! வசப்படுத்தலாம் எங்கள் தென் னுட்டில் இந்த மாதிரிப் பிரமை ஜாஸ்தி. பெண்கள் பொடி போட்டு ஆண்களை வசியப்படுத்தலாம். ஆண்களும் அதே மாதிரி பெண்களை வசியஞ் செய்து குறிப்பிட்ட இடத்திற்கு தனித்து வரச் செய்யலாம்.

காதலி—அது எப்படியிருக்கும்? அப்படியானுல் தாங் கள் பலே பேர்வழியாயிருக்கவேண்டும். அம்மாதிரி பொடி யைப் போட்டுத் தான் என்னை மயக்கி இழுத்து வந்திருக் கிறீர்கள். அந்தப் பொடி எங்கே கிடைக்கும்?

காதலன்—'மாயப்பொடி'—எங்கள் ஊரிலே ஒருவர் செய்கிறுர். அவர் பெரிய மாந்திரவாதி எத்தனை பெண்களை வேண்டுமானுலும் நாம் நினைத்த இடத்திற்குத் தாமாகவே வரும்படி செய்ய அவருக்கு முடியும் இன்னும் மந்திர சக்தி யால் அவர் அபார வேலைகள் செய்வாராம்! ஆனுல் மிகவும் அந்தரங்கமாகவே விஷயங்களை நடத்துவார். வெளிக்கு வந் தால் அவருடைய உயிருக்கே ஆபத்தாக முடியுமல்லவா?

காதலி—ஆமாம் சந்தேகமென்ன? பழைய காலத்திலே தான் இத்தகைய மாந்திரவாதிகள் இருந்தார்களென்று கதைகள் கேட்கின்றுேம். இப்பொழுது பிரத்தியட்சமாக அப்படி நடக்கிறதா? அந்த மாந்திரவாதி பெயர் என்ன?

காதலன்—அவருடைய பெயர் நிரம்ப நீளம். மறந்து கூடப் போயிற்று. மாயா விநோத மதன சிங்கார, மனோகர அதியற்புத கோலாகல—மாயாண்டி பிள்ளை, மாந்திரவாதி என்றிப்படி இன்னும் அடைமொழிகள் வரும். அவர் பெயர் 'மாயாண்டி' தான் கேஸ் ஒன்றுக்கு ஆயிரக் கணக்காகக் கேட்பாராம்.

காதலி—இந்த மாதிரி மாந்திரவாதியைக் கொண்டு என்னை வசியஞ் செய்தீர்கள் போலும்?

காதலன்—அப்படி யொன்றும் நம் விஷயத்திற் கிடையாது. நீ தான் என்னை ஒரு விதத்தில் வசியஞ் செய்துவிட்டாய். நீ உபயோகித்த வசிய மந்திரம் எனக்குத் தெரியும்? சொல்லலாமா?

காதலி—எனக்குத் தெரியவில்லையே! தாங்கள் சொல்லுங்கள்.

காதலன்—அதுவா, உன்னையறியாமலே உன்னிடத்தில் அமைந்திருக்கிற ஒரு செய்தி.

ஒரு போட்டோவை எடுத்துக் காண்பிக்கிறான்.

இந்தப் போட்டோவைப் பார்! இது என் தங்கையின் போட்டோ என் தங்கை ராஜம்மாளைப் போலவே எள்ளளவும் வித்தியாசமில்லாமல் நீ காணப்படுகிறாய். அவள் மாதிரி தென்னாட்டுப் பெண்களின் உடையிலே நீ யிருந்தால் உனக்கும் அவளுக்கும் நன்றாய்ப் பழகினவர்களாலும் வேற்றுமை காண இயலாது. அவளுக்கும் வயது உன் அளவே தானாகின்றது.

காதலி—அது உண்மையானால் நானா வசிய மந்திரத்தை உபயோகித்தவள்? பிரம்மதேவனே சிருஷ்டிக்கும்பொழுது ஒரே அச்சில் இரண்டு பிம்பங்களை வார்த்திருக்கிறான். அதற்கு நான் என்ன செய்வேன்? அது என்னுடைய செயலா? நான் உங்கள் தங்கையைப் போலிருக்கிறேன் என்பதை முதல் நாளே என்னிடம் தாங்கள் குறிப்பிட்டீர்

கள். அதிருக்கட்டும் தங்களுடைய தங்கையைப் போல் இருந்தால் தாங்களும் என்னைக் கூடப் பிறந்தவளாகத்தானே கருதவேண்டும்.

காதலன்—நான் அப்படித்தானே எண்ணியிருக்கிறேன்

ராஜலக்ஷ்மி—என்னோடு கூடப் (ஒரு தாய் வயிற்றில்) பிறந்தவள்.

கமலாபாய்—என்னோடு கூடப் (ஒன்று சேர்ந்து இன்பம் அனுபவிக்க) பிறந்தவள்.

தெரிகிறதா?

காதலி—பேஷ்: தாங்கள் பெரிய சிலேடைப் புலி.

காதலன்—நான் ஊரிலிருக்கும் பொழுது இப்படி நவ நவமான சிலேடைகள் அடுக்கடுக்காகக் கனகு சொல்லக் கேட்டிருக்கிறேன். அவனோடு பேசிக்கொண்டிருப்பதில் எனக்கு நேரம் போவது கூடத் தெரியாது. சிலேடைப்புலி பிச்சுவையர் என்றொரு புலவர் இருந்தாராம். அவர் சாகுந் தறுவாயில் அன்னம் ஆகாரம் இறங்காமல் படுத்த படுக்கையாய்க் கிடந்தார் அப்பொழுது அவரது மகள் பாலைத் துணியில் நனைத்து வாயில் ஊற்றிக் கொண்டிருந்தாள். பால உள்ளே இறங்காமல் வாயிலே வழிந்து கொண்டிருந்தது. அப்பொழுது அருமை மகள், 'அப்பா! பால் கசக்கிறதா?' என்றாள். அதற்குச் சிலேடைப் புலி 'அம்மா! பாலும் கசக்கவில்லை, துணியும் கசக்க வில்லை.' என்று கூறினாராம். இப்படி எத்தனை கதைகளோ சொல்வான்.

காதலி—நன்றாயிருக்கிறது. இப்படி அருமையாய்த் தமிழிற் பேசுகிறவர்களும் அருமை. நீங்கள் விஷயத்தை விட்டு என்னை எங்கேயோ இழுத்து விட்டீர்களே!

காதலன்—ஆமாம் கலியாணபுரத்திற்கே உன்னை இழுத்து வந்து விட்டேன்.

ஐயா! சிலேடைச் சிங்கமே! சிலேடையாய்ப் பேசு வதிருக்கட்டும். எனக்கு அவ்வளவு பேசத் தெரியாது என்னைத் தங்கையாய்ப் பாவியுங்கள். நான் மாயாண்டிப் பிள்ளை மந்திர சக்தியால் வேறு யாரையேனும் கணவனைக் தேடிக் கொள்கிறேன். நீங்கள் ஊருக்குப் போனதும் அதைப் பரீக்ஷை பார்த்து வேறு யாரையேனும் தேடிக் கொண்டால் என் பாடு அதோகதியாய்ப் போய்விடும் அல்லவா? அப்புறம் நானென்ன செய்வேன்!

காதலன்—கண்ணே! அப்படியெல்லாம் சொல்ல வேண்டாம் பரீக்ஷை பார்ப்பது என்றால் உன்னை மோசம் பண்ணுவதாக அர்த்தமில்லை. பிள்ளையார் கதை தெரியுமா உனக்கு! அவர் முடுக்கு முடுக்காகவும் ஆற்றங்கரை குளத் தின் கரை தவறாமல் உட்கார்ந்திருப்பது எதற்காக? தன் தாயைப்போல. ஒரு பெண்ணைத் தேடிக்கொண்டு உட்கார்ந் திருக்கிறாராம் தாயைப் போலப் பெண்—என்றால் தாயைப் போலக் கிழவி என்று அர்த்தம்? நல்லது தாயைப் போலத் தங்கையைப் போல்—என்றால் அவர்களைப்போல அன்பு, ஆதரவு, குணம் பொருந்திய மனைவி என்று அர்த்தம். 'அன்னை தயையும்....' என்று ஒரு புலவரும் பாடியுள்ளார்.

காதலி—அர்த்தம் எல்லாம் அநர்த்தமே! தாங்கள் யாரையேனும் திடீரெனக் காதலியாகத் தேடிவிட்டால் உடனே எனக்குத் தகவல் சொல்லுங்கள். உங்களுக்குச் சங்கடம் இல்லாமல் நான் வேறொருவரை நாடிக் கொள் கிறேன்.

இப்படி இவர்கள் வேடிக்கையாய்ச் சம்பாஷித்துக் கொண்டே யிருந்ததனால் விருதுநகர் ஜங்க்ஷனில் வண்டி புறப்பட்டது, இடையில் மற்ற ஸ்டேஷன்கள் ஜங்க்ஷன் களைக் கடந்து வந்தது முதலியவற்றை அதிகம் கவனிக்கா மலே மணி 1க்குக் கலியாணபுரம் வந்து சேர்ந்து விட் டார்கள்.

கலியாணபுரம் ஸ்டேஷன் அவ்வளவு பெரியதன்று. இராத்திரி அகால வேளையில் அந்த ஸ்டேஷனில் போர்ட்டர்

ஜேர்ட்டர், வண்டி முதலியன கிடைப்பது கஷ்டம். நவ நாகரீக ஜோடிகள் இருவரும் ரயிலிலிருந்திறங்கினார்கள். 'போர்ட்டர், போர்ட்டர்' என்று கூவினார் டாக்டர் துரை சாமான்கள் மிகுதியாகக் கொண்டு வந்திருந்தார். அந்த ரயிலில் கலியாணபுரத்தில் இறங்கினவர்கள் விரல் விட்டு எண்ணக் கூடிய ஆட்களே மெயிலாகையினால் 5 நிமிஷத்திற்கு மேல் அந்த ஸ்டேஷனில் நிற்கவுமில்லை. டாக்டர் ஸ்டேஷன் மாஸ்டரை நோக்கி, ஐயா! போர்ட்டர் யாருமில்லையா? என்று ஆங்கிலத்திலே கேட்டார். டாக்டரது தடபுடலைக் கண்டு அவரும் பணிவுடன், இந்த அகால நேரத்தில் போர்ட்டர்கள் சிறிய ஸ்டேஷன்களில் காத்திருப்பது இல்லை எப்படியும் உங்களுக்கு ஒரு ஆள் அனுப்புகிறேன் என்றார் அப்பொழுது அவ்விடத்திலே நின்ற மகம்மதியனொருவன், என்னுங்கோ வேணும்? என்றான் அந்தத் துருக்கன் பரம ஏழையாகத் தோற்றினான். அவனது ஆடைகள் அழுக்குப் படிந்து கிழிந்து கிடந்தன. அவன் டாக்டரை நோக்கி—என்னுங்கோ எஜமா! நான் வேணு மின்னுக்கி இந்த ஜாமான்களை எடுத்துகிட்டி வாறே மாராஜ்! நானு திருநெல்வேலியிலிருந்து இப்போத்தானுங்க வந்திறங்கினே. வூட்டுக்குப் போவுணம் சொல்லுங்க எஜமா! என்று கேட்டான். டாக்டருக்கு மகிழ்ச்சியுண்டாயிற்று 'நல்ல வேளையாய் வந்து உதவினாய் சாமான்களை எடுத்து வெளியே வை அப்புறம் ஊருக்குள்ளே போய் ஒரு வண்டி கொண்டுவா' என்றார் துருக்கன் 'உத்திரவு' ஸலாம் வர்து மாராஜ்! என்று கூறிக் குனிந்து ஒரு பெரிய ஸலாம் வைத்தான். சாமான்களை ஸ்டேஷனுக்கு வெளியே கொண்டு வந்து சேர்ந்தான் பிறகு ஓட்டமும் நடையுமாகச் சென்று ஊருக்குள்ளேயிருந்து ஒரு குதிரை வண்டி கொண்டு வந்தான். வண்டிக்காரனுடனிருந்து சாமான்களை வண்டியிலேற்றினான். பிறகு 'உத்திரவு மாராஜ்! நானு போய் வாரேனுங்கோ என்றான். டாக்டர் துரை 'ஸாஹேப்! வண்டியிலேறி முன்புறத்தில் பெட்டியின் மேல் உட்கார்ந்து கொள்ளும். உம்மால் நமக்கு

அநேக உதவிகள் வேண்டியிருக்கின்றன. இந்நேரத்திலே உதவிக்கு வேறு ஆள் கிடைப்பது கஷ்டம். உமக்கு நிறைய இனும் தருகிறோம். யோசிக்க வேண்டாம் என்றார் மகம்மதியன் அதுக்கென்னுங்கோ! உத்திரவு. என்று கூறிப் பெட்டியிலேறி உட்கார்ந்தான். குதிரை வண்டி சற்று நேரத்திற்குள், ஸ்டேஷனுக்குச் சிறிது தூரத்திலுள்ள 'கணக்குப் பிள்ளை பங்களா' வாசலில் வந்து நின்றது, இந்த பங்களா பணக்காரரொருவருக்குச் சொந்தம் அவர் ஆதியில் கணக்குப் பிள்ளை வேலை பார்த்தவர். இப்பொழுது அவர் காலஞ் சென்று விட்டார். அவருடைய மக்கள் அதீனத்தில் அது இருக்கிறது. சொற்ப வாடகையில் யார் வேண்டுமானாலும் அதில் தங்கியிருக்கலாம். டாக்டர் முதலில் கீழே யிறங்கினார் 'ஹலோ மை டியர் கமலா! இதுதான் நான் உனக்காக அமர்த்தியிருக்கும் பாங்கலோ! உள்ளே ஆள் இருக்கும். போய் சவுகரியமாய் உட்கார்ந்திரு. நான் இதே வண்டியில் வீட்டுக்குப் போய்ப் பத்து நிமிஷத்தில் திரும்பி வருகிறேன். கூடத்துணைக்கு ஸாஹிபுவை இருக்கச் சொல்கிறேன் சாயபு நிரம்ப யோக்கியர் என்று தெரிகிறது. என ஆங்கிலத்திலேயே கூறினார். பிறகு சாயுபுவை நோக்கி 'அம்மாவைக் கூட அழைத்துப்போய் இருவரும் உள்ளே உட்கார்ந்திருங்கள். நான் இதோ வந்து விடுகிறேன்' என்று சொல்லிவிட்டு காற் சட்டையின் இடது புறமாகக் கையை செருகி ஐந்து ரூபாய் நோட்டைச் சாயுபு கையிலே கொடுத்தார். மகம்மதியன் 'எனக்கு எதுக்குங்கோ ரூபா எதோ ஆண்டவன் தந்திருக்கார் தினப்படி உழைத்துச் சம்பாதிக்கிறேன் பெரிய மனுஷாள் தயவுதான் பெரிது பாத்துக்குங்கோ! தங்களுடைய அன்புதான் லக்ஷாதி லக்ஷம் என்றான் கமலாபாயும் ஹிந்துஸ்தானியில் 'ஸாஹேப்! டாக்டர் பெரிய மனிதர் நிரம்பத் தாராளமுள்ளவர் அவர் கையால் கொடுப்பதை மறுக்கக்கூடாது என்று கூறினாள்.

மகம்மதியன் அவளிடம் ஹிந்துஸ்தானியிலேயே என்னவோ பேசினான். கமலாபாய் அதனை ஆங்கிலத்தில்

மொழி பெயர்த்து 'மகம்மதியன் நிரம்ப நாணயமானவன் பெரிய மனிதர்களுக்குச் சேவை செய்வதையே பெரிதாக மதிப்பவன் தங்களுடைய கருணையை இப்பொழுது காட்டாமல், வேறு எப்பொழுதேனும் நல்ல சந்தர்ப்பத்திலே அவனுக்கு உதவி செய்தல் நலமாகும் என டாக்டரிடம் கூறினாள். டாக்டர் ஆச்சரியமடைந்து ஸாஹேப், அச்சா ஸாஹேப் நாங்கள் இந்த ஊரிலிருக்கும் வரை நீரும் நம்முடனேயே இரும். நீர் நம்முடைய சொந்தமான மனுஷன் உமக்குத்தக்க சன்மானங்களைச் செய்யக் காத்திருக்கிறேன். உள்ளே சென்று டாக்டர் 'கன்' அவர்கள் அனுப்பினார்கள் என்று கூறி நடு ஹாலைத் திறந்து அம்மா அவர்களை உட்காரச் செய்து நீரும் அங்கேயே இரும். நான் இதோ வருகிறேன். ஸாஹிப் இந்தப் பெட்டிகளை எடுத்துக்கொண்டு போம், எனக் கம்பீரமாய்க் கூறிவிட்டு தன் காதலிக்கு கை குலுக்கி விட்டு வண்டியிலேறி வீட்டை நோக்கிப் போய் விட்டார்.



## அத்தியாயம் 7

## எங்கள் இரகசியங்களை வெளியிடக்கூடாது

கமலாபாய் சுட்டிக் காட்டிய இரண்டு சிறிய டிரங்குப் பெட்டிகளை எடுத்துக்கொண்டு முகம்மதியன் முன்னே செல்லக் கமலா பின்னே நடந்து சென்றாள். பங்களாவின் வெளித்திண்ணையில் ஒருவன் படுத்திருந்தான் மகம்மதியன் யாரப்பா! படுத்திருக்குது? எழுந்துரு டாக்டர் கன் ஸாஹேபு ஆட்டம்மா வந்துருக்காங்கோ கதவேத் திற அண்ணே! என்று அந்த மனிதனைத் தட்டி எழுப்பினான் படுத்திருந்தவன் 'ஸாஹிபூ! நீர் சாயுபு என்றால் பிள்ளைமாரெல்லாம் சாயுபுவா அடா வாசனை யில்லாத பூவே! என்று கூறிக்கொண்டே எழுந்து மகம்மதியனிடமிருந்த பெட்டிகளை இறக்கிக் கீழே வைத்து விட்டு, நடு ஹாலைத் திறந்து கொடுத்தான். பெட்ரோமாக்ஸ் லைட் ஒன்று தகதகவென்று பிரகாசித்துக் கொண்டிருந்தது. கமலாபாய் உள்ளே போய் உட்கார்ந்தாள். மேஜையின்மேற் கிடந்த ஆங்கிலப் பத்திரிகையாகிய 'ஹிந்து' வை எடுத்தாள். கதவைத் திறந்து போட்டு விட்டுக் காவற்காரன் தூங்கியே போனான் கமலா பாய் சாஹிப்! இப்படி உட்காரும் என்று சொல்லிய வண்ணம் பத்திரிகையில் ஸினிமாப் பக்கங்களைப் புரட்டினாள். இதற்குள் நின்றுகொண்டிருந்த மகம்மதியன் அவள் காட்டிய இடத்திலே தரையில் உட்கார்ந்தான். பிறகு அவ்விருவருக்குள் கீழே காணும் சம்பாஷணை ஹிந்துஸ்தானியிலேயே நடை பெற்றது.

கமலாபாய்—ஸாஹிப்! உமக்குத் தூக்கம் வருகிறதோ தூக்கம் வந்தால் இப்படியே படுத்துக்கொள்ளும் மிகவும் இளைப்பாயிருக்கிறீரே! எனக்கெல்லாம் இராத்திரி தூக்கமே வராது. வந்தாலும் நான்கு மணிக்குமேல் வரும். பகலெல்லாம் தான் கும்பகர்ணன்.

சாயுபு—'அம்மணி! எனக்குப் பகலில் எல்லாம் வீட்டில் உட்கார்ந்து நெய்து கொண்டிருப்பேன் நடுவில் பம்பாய்க்குப் போயிருந்தபடியால், நான் என் குடும்பத்திற்குரிய தொழிலாகிய நெய்தல் தொழிலைக் கை விட்டுவிட்டேன் என் மனைவி கூட நன்றாய் நெய்வாள். இப்பொழுது என் மனைவி வீட்டிலில்லை. தாய் வீடு போயிருக்கிறாள் இராத்திரி சில சமயங்களில் தூக்கம் வரவில்லை யென்றால் காற்று வாங்குவதற்காக இவ்வளவு தூரம் வருவது வழக்கம் பிறகு நன்றாய்த் தூக்கம் வந்த பிறகு தான் தூங்குவேன் இன்று திருநெல்வேலிக் கதர் ஸ்டோர்சுக்குப் போய்க் கதர் ஜவுளி முதலிய சுதேசிச் சரக்குகளுக்கு விலை விசாரித்து வந்தேன். இனிமேல் கதர் நெசவு போடலாமா என்ற யோசனை இந்த ஜில்லாவில் கதராடைகளுக்கு நல்ல விற்பனை யிருந்தாலும் பம்பாய்ப் பிராந்தியங்களிலிருக்கும் மும்மரமான தேசாபிமானமும் கதரபிமானமும் இங்கில்லை கதர் எவ்வளவு நாளைக்கு உழைக்கிறது! சிறிது துவைத்தாலும் எவ்வளவோ வெண்மையாயிருக்கும் எத்தனை ஏழை மக்களை வாழச் செய்கிறது! என்ற அருமை பெருமைகள் பாமர மக்களுக்கு இன்னும் தெரியவில்லை. எனக்கு இப்பொழுது தூக்கம் வராது. நீங்கள் பத்திரிகை படியுங்கள் நான் சும்மா உட்கார்ந்திருக்கிறேன் டாக்டர் ஸாஹிப் வந்த பின் நான் போகிறேன்.

கமலாபாய்—ஸாஹேப்! நீர் பெரிய தேசாபிமானியுமாக இருக்கிறீர்! நல்லது உம்மோடு சம்பாஷித்துக்கொண்டிருப்பதை விட எனக்குப் பத்திரிகையிலே பிரமாத விசேஷ மொன்றுமில்லை நீர் நிரம்பப் புத்திசாலி. சரி இருக்கட்டும் 'டாக்டர் வீட்டம்மா' என்று காவற்காரனிடம் நீர் கூறினீரே. நான் அவர் மனைவிதான் என்பது உமக்கு உறுதியாய்த் தெரியுமா?

மகம்மதியன்—டாக்டர், என்று அவரே கூறினார் அதை வைத்துக்கொண்டுதான் நான் அப்படிச் சொன்னேன் எனக்கு வேறென்ன தெரியும்?

கமலாபாய்—நானிருப்பதும் அநேகமாய்ப் பம்பாயி லேயே நீர் பாம்பேயில் எங்கே குடியிருந்தீர். நான் நள் பஜாரில் பலத்த வியாபாரஞ் செய்து வந்த மேத்தா சேட்ஜீ வீட்டில் வளர்ந்தவள். சென்னைக்கு வந்திருந்த இடத்தில் டாக்டருக்கும் எனக்கும் சிநேகம் ஏற்பட்டது. டாக்டர் என்னைக் கலியாணம் பண்ணிக் கொள்வதாக வாக்களித் திருக்கிறார் அதை நம்பி இங்கு வந்தேன் டாக்டருக்குச் சொந்தவூர் இதுதானே! உமக்கு அவரைத் தெரியாம லிருக்குமா? இவ்வூரில் கீழத்தெரு திருநாவுக்கரசுப் பிள்ளை மகன் அவர். அவருக்கு என்னைப் போலவே ஒரு தமக்கை யும் இருக்கிறதாமே? அவரது உண்மையான பழைய பெயர் மாணிக்கவாசகன் என்பது. புதிய முறையில் அவர் தம் பெரைக் குறுக்கிக் கடைசி அசையை மாத்திரம் நிறுத்தி 'கன்' என்று வைத்துக் கொண்டிருக்கிறார் நான் இவரை முழுதும் நம்பித் தொடர்ந்து வந்துவிட்டேன். இன்னும் சற்று நேரத்தில் அவர் வந்து விடுவார்.

மகம்மதியன்—பம்பாயிலே, இந்த வூரிலிருந்து ஜவுளி வியாபாரம் நடக்கிறது. இவ்வூர் முதலாளி அங்கேயே தங்கியிருந்து வியாபாரம் நடத்தினர். அவரிடத்தில் நான் வேலை பார்த்து வந்தேன், 'கடையுமுண்டு நானுமுண்டு' என்ற ரீதியில், வெளியில் அதிகமான பழக்க மில்லாமல் நான் இருந்தபோதிலும் பெரிய பெரிய ஸேட்டுகள் அடிக் கடி எமது கடைக்கு வந்து போய்க்கொண்டிருந்ததனுல் எனக்கு நன்றாய் ஹிந்துஸ்தானி பேசும் சாமர்த்தியம் வந் தது. சிறு பிள்ளையிலேயே நான் அங்குப் போய்விட்டேன் இப்பொழுது அந்த வியாபாரியும் இறந்து கடையும் நொடித்துப் போயிற்று. ஒரு வருஷ காலமாய் நான் இங்கு வசிக்கும்படி நேர்ந்தது. வேறு அலுவல்கள் பார்க்க மனம் பிடிக்காமல் சொந்தக் கைத்தொழிலில் பழகி வருகிறேன்.

கமலாபாய்—இவ்வூரில் மாயாண்டியா பிள்ளை என்பவர் பெயர் பெற்ற மாந்திரவாதியாமே! அவரைப்பற்றி

உமக்குத் தெரியுமா? அபூர்வமான வேலைகளெல்லாம் அவருக்குத் தெரியுமாமே! நாளை ராத்திரி 11 மணிக்கு நீர் அம்மாந்திரவாதியைக் கூட்டிக் கொண்டு இவ்விடம் வருவீரா?

மகம்மதியன்—ஆஹா! அதற்கென்ன ஆக்ஷேபணை? காசா பணமா இதற்குச் செலவாகப் போகிறது? சென்ற வாரத்தில் இந்த ஊரில் பண்ணையார் சீதாராமையருக்கு 'பார்ஸீ லேடி' ஒருத்தியை வசியஞ் செய்து கொடுத்திருக்கிறார். இங்கிருந்து மாயாண்டியா பிள்ளை செய்த மந்திரத்தில் ரங்கூனிலிருந்து அவள் இவரைத் தேடி வந்திருக்கிறாளாம். ஊரெல்லாம் எங்குப் பார்த்தாலும் சில நாட்களாக, எங்குப்பார்த்தாலும் இதே பேச்சாக இருக்கிறது. நாளைக்கு மாந்திரவாதியைக் கூட்டிக் கொண்டு, கண்டிப்பாய் வந்து சேருகிறேன்.

இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருக்கையில் டக் டக் என்ற பூட்ஸுக் காலின் சத்தம் காதிற் பட்டது. சற்று நேரத்தில் ரயில்வே இன்ஜீன் போலக் குப் குப் பென்று புகையை விட்டுக் கொண்டு டாக்டர் அங்கு வந்து சேர்ந்தார்.

டாக்டர்—என்ன ஸாஹேப்? அச்சா ஸாஹேப்? ரொம்ப நேரம் தாமதிக்க வைத்துவிட்டேன் நீர் போய் வருகிறீரா? சௌகரியப்பட்ட வேளைகளில் பங்களாவுக்கு அடிக்கடி வந்து போய்க்கொண்டிரும். அம்மா அவர்களுக்கு ஏதேனும் உதவி வேண்டியிருந்தாலும் செய்து கொடும். உமக்கு வேண்டியவை என்னவென்றாலும் நான் கொடுக்கத் தயாராய்க் காத்திருக்கிறேன். ஆனால் முக்கியமான விஷயம் ஒன்றை நீர் கவனிக்கவேண்டும். நீர் எங்கட்குச் சொந்தமான ஆளாய் விட்டீர், எங்களைப் பற்றி யாவது எங்களது அந்தரங்கங்களைப்பற்றியாவது நீர் யாருக்குஞ் சொல்லிவிடக் கூடாது. அவ்விஷயத்தில் நீர்

மிருதியும் எச்சரிக்கையாயிருக்க வேண்டும். உஷார் தெரிகிறதா ஸாஹேப்.

மகம்மதியன்—அப்படியே! மஹராஜ் போய்ட்டு வரட்டுங்களா அதெல்லாம் நம்க்கி ரொம்பத் தெரியுங்கோ பெரிய மனிதர் ஸஹவாஸங்கள் ரொம்ப ரொம்ப உண்டுங்கோ ஸலாம்!

எனச் சொல்லிக்கொண்டே மகம்மதியன் வெளியே போய் விட்டான்.



# அத்தியாயம் 8

## காட்டுப்பட்டி

## யூனியன் போர்டு எலக்ஷன்.

கலியாணபுரத்திற்கு வடபுறமாக ஓடும் தாம்பிரபரணியின் அக்கரையிற் 'காட்டுப்பட்டி' என்றொரு சிறு கிராமம் உண்டு. அக்கிராமத்தில் சுமார் 2500 வீடுகளிருக்கின்றன. அவ்வூர் ஒரு சிறு யூனியன். காட்டுப்பட்டிக்கும் கலியாணபுரத்துக்கும் இடையில் ஓடும் தாமிரபாணியாறு சிறிது தூரம் கிழக்கு நோக்கிச் சென்று பின்னர் வடக்கு முகமாகத் திரும்பிக் காட்டுப்பட்டிக்குக் கிழக்கு எல்லையாகவும் செல்லுகின்றது. இருபுறத்திலும் ஆறு சூழப்பெற்ற காட்டுப்பட்டிக் கிராமத்தைச் சுற்றிச் செழிப்பான நன்செய்கள் ஏராளமாய் உண்டு

இந்த விளை நிலங்களுக்குச் சொந்தக்காரரான பண்ணையார்கள் பக்கத்து நகரங்களில் வசிப்பவர்கள் இந்தப் பண்ணையார்கள் அநேகமாய்ப் பிராமணரே யாவர். காட்டுப்பட்டிக் கிராமம் மறவர் பெருத்த இடம் இங்கே சிறந்ததொரு சிவ க்ஷேத்திரமும் உண்டு. அழகான கோவில் அங்கு அமைந்திருக்கிறது. இந்தக் கோவிலுக்கு மறவர்கள் தேடிவைத்த சொத்துக்களுக்குக் கங்கு கரை கிடையாது. காட்டுப்பட்டியில் பாதி மறவர் கால்வாசி வேளாளர் முதலியார் முதலிய ஜாதிக்காரர்களும் இன்னும் எஞ்சிய பாகம் இதரஜாதியினருமாக வசிக்கின்றனர். இவ்வூர் மறவர் கொல்லுக் கொலைகளுக்கு அஞ்சாதவர் ஆங்கிலேயரது ஆட்சியின் துப்பாக்கி முனையிற் கூட இவர்களது கொட்டம் அடங்கியபாடில்லை. இவர்கள் ஒரு காலத்தில் மிகவும் கீர்த்தியுற்று விளங்கினார்கள், தமக்குள் ஒற்றுமையும் ஜாதிக் கட்டுப்பாடும் உடையவர்கள்,

காட்டுப்பட்டியைச் சேர்ந்த நன்செய் நிலங்களை இவ்வூரிலுள்ளவர்கள், பண்ணையார்களிடம் குத்தகைக்கு ஒட்டுக்

கொண்டு அவைகளைப் பயிரிட்டுப் பகுதியைப் பண்ணையார்களுக்குச் செலுத்திவிட்டு எஞ்சியதைக்கொண்டு ஜீவனஞ் செய்பவர்கள். காட்டுப்பட்டி மறவர்க்கு இத்தகைய ஜீவனத்தோடு போதாக்குறைக்குத் தம் பூர்வீகத் தொழிலாகிய திருட்டுத் தொழிலும் கைவந்த பாடமே. இவர்களது திருட்டு உருட்டுக்களைப் பொறுக்க முடியாமல், பண்ணையார்களே அயலூரிலிருந்து வேறு சில ஜாதிக்காரரைக் குடியேறச் செய்திருந்தார்கள். அவர்கள் நாளடைவில் பெருக்கமடைந்து தற்பொழுது காட்டுப்பட்டி ஜனத்தொகையில் பாதியாய் விட்டார்கள். ஆனால் மறவர்கள் தங்கள் குறும்புகளை இவ்விதர ஜாதிக்காரரிடம் காட்டாமலிருப்பதில்லை. காட்டுப்பட்டி வேளாளர்களுக்குள்ளே பார்வதிநாத பிள்ளை ஒரு பெரிய பணக்காரர். லக்ஷக்கணக்கான ஐவேசும் இவரிடமிருந்தது. பிள்ளையவர்கட்குத் தமிழில் நன்றாய் எழுதப் படிக்கத் தெரியும் இங்கிலீஷில் விரல் விட்டு எண்ணத்தகுந்த சிற்சில வார்த்தைகளும் அவருக்குத் தெரியும். போலீஸ் இலாகா உத்தியோகஸ்தரும், ரெவினியூ உத்தியோகஸ்தரும் காட்டுப்பட்டிக்கு எதேச்சையாக வந்துவிட்டால் பார்வதிநாத பிள்ளை வீட்டிலேயே அவர்கள் தங்கிக் கச்சேரி நடத்துவது வழக்கம். அவர்களோடு அவர் சம்பாஷிக்கையில் அவருடைய இங்கிலீஷ் வார்த்தைகளின் அகராதி முழுதும் தீர்ந்துவிடும். பிள்ளைக்குத் தற்கால நாகரீகப் பைத்தியம் சிறிது உண்டு யூனியன் போர்டு மெம்பர் ஸ்தானம், சேர்மன் ஸ்தானம் இவைகளுக்காகக் கண் மூக்குத் தெரியாமல் பணத்தை வாரிச் செலவழித்து வந்தார்.

காட்டுப்பட்டியிற் சிவாலயம் ஒன்று உண்டு என்று முன்பு குறிப்பிட்டது நமது வாசகர்களுக்கு ஞாபக மிருக்கலாம். அந்தக் கோயிலில் அவ்வூர் மறவர்க்கு மிகுந்த பாத்தியதையும் செல்வாக்கும் உண்டு. சிவாலயங்கள் விசேஷமாக உள்ள இடங்களில் தாசிமார் என்று சொல்லப்படும் தேவமாதரது வீடுகள் மிகுதியாக இருப்பது சகஜம்

காட்டுப்பட்டிக் கோவிலில் தீபாராதனைக் காலங்களில் பாட்டுப் பாடவும் நாட்டியம் ஆடவும் சந்ததி பரம்பரையாய் வாழத் தகுந்த ஒரு தேவதாசிக் குடும்பத்தை அவ்வூர் மறவர் நிலையாக அங்கே வாழும்படி ஏற்பாடு செய்திருந்தனர். அந்தக் குடும்பம் தற்சமயம் எழெட்டு வீடுகளாகப் பெருகி வீடு வீடாகப் பெண்கள் நிறைந்திருந்தனர் தாசிமார் வீடுகளிற் பெண்கள் பெருகப் பெருக அவர்களுக்கும் ஊரிலுள்ள ஆடவருக்கும் ஆநந்தம் மிகுதி தாசிகளது வீடுகளில் உள்ள பொக்கிஷங்களில் பணங்களும் குவிந்து கொண்டேயிருக்கும். இந்தத் தாசிப் பெண்களனைவரும் கோயிலுக்குப் பொட்டுக் கட்டிச் சுவாமிக்கு அடிமைப் பட்டவர்கள். இவர்களுக்குச் சர்வமானியமாகக் கோயிலிலிருந்து விடப்பட்ட நிலங்கள் சில உண்டு இவைகளிலிருந்து வரும் வரும்படியைத் தவிர, அவரவர்கள் தம்முடைய சாமர்த்தியம், அழகு முதலியவற்றிற்குத் தக்கவாறு சேர்த்துள்ள சொத்துக்களும் ஏராளம்.

இந்தத் தாசிகளுக்குள் ஏழெட்டுப் பேர் வயது வந்து நல்ல சம்பாத்தியம் செய்யும் திறமையுடையவர்கள். அவர்களில் ஒருத்தி பாக்கியலக்ஷ்மி என்பவள். சதுர்க்கச்சேரியிலே இவளுக்கு இணையற்ற பேரும் புகழும் ஏற்பட்டிருந்தது. இவளுடைய சதுர்க் கச்சேரிக்கு ஒரு நாளைக்கு இருநூறு முந்நூறு கொடுப்பவர்களும் சுற்றியுள்ள நகரங்களில் இருந்தனர். இவளிடம் பேரழகும் தாசித் தொழிலுக்கேற்ற தளுக்குச் சாமர்த்தியங்களும் குடிகொண்டு விளங்கின. சிறிய வயதில் பாக்கியலக்ஷ்மி கோயில் தீபாராதனை சமயத்தில் சதுருக்கு வரும்பொழுது பாவாடை, சட்டை, குட்டை, கீழ்ச்சட்டை, மேற்சட்டை, காற்சட்டை முதலிய ஒவ்வொன்றும் வெவ்வேறு பகட்டான நிறங்களில் அணிந்து காலில் கலீர் கலீரென்று ஒலிக்கும் சதங்கைகள் கட்டி ஆடும்பொழுது சில குறும்புச் சிறுவர்கள் அவளைச் சுற்றி நின்று, "பஞ்சவர்ணக்கிளி யாடுது பார்" என்று கூறிப் பரிகசிப்பது வழக்கம் ஆண்டவன் சந்நிதா

னத்திலே அவளுக்கு இடப்பட்ட அந்த அழகான பட்டப் பெயர் சாசுவதமாகவே நிலைத்து விட்டது. அதனால் அவளுடைய பெயர், "பஞ்சவர்ணக்கிளி பாக்கிய லக்ஷ்மி" என்று சிறப்பாக மாறிற்று.

இப்பொழுது பாக்கியலக்ஷ்மி மடந்தைப் பருவம் எய்தி வேசித் தொழிலிற் காசைப் பறிக்கவும், சதுர்க் கச்சேரியிற் பணம் திரட்டவும் பாட்டுக் கச்சேரியில் நாட்டை விலை பேசவும், ஊர் ஊராக உள்ள பரம்பரைச் சீமான்களை யெல்லாம் நிரந்தரக் கமான்களாக்கவும் தொடங்கி வருஷம் ஒன்றிரண்டாகின்றது. பஞ்சவர்ணக்கிளி பாக்கியலக்ஷ்மியின் பெயர் சுற்றி 25 மைல் தூரம் வரை நன்றாக யாருக்கும் தெரியலாயிற்று. காதவழி பெயரில்லாதவன் கழுதையாகும் அல்லவா? சந்ததி சந்ததியாகத் தம்மை யாதரித்து வரும் காட்டுப்பட்டி மறவர்க்கும், புதியவர்களாக அவ்வூருக்கு வந்துள்ள வேளாளர் முதலியோருக்கும், வேறு கைநிறையப் பணம் வாரிக்கொடுப்பவர் யாவருக்கும் பாக்கியலக்ஷ்மி பொதுமகளாக விளங்கிக் காட்டுப்பட்டிக்குச் சிறந்த அழகை வழங்கினாள்.

நாட்டியம் பாட்டு முதலியவற்றிலே இவளது பிரக்கியாதி வெளியூர்களிற் சிறிது சிறிதாகப் பரவவே, தொலையூர்களிலுள்ள டப்பாச்சாரிகளும் மைனர்களும் பாக்கியலக்ஷ்மியே கதியென்று கருதி அவள் வீட்டைக் காக்கத் தொடங்கினர். வேலையறிந்து வருபவரிடம் ஆசை காட்டி இன்ப மூட்டி காசைப்பறிக்கும் அவ்வேசை 'காற்றுள்ள போதே தூற்றிக்கொள்' என்றபடி வர வர உள்ளூர்க்காரரைப் புறக்கணித்து, வெளியூராரை நேசித்துப் பூசித்து வந்தாள். இதனால் உள்ளூர் மறவர்க்கு இவள்மீது கோபமும் பகையும் மேலிட்டு வந்தன. இதுவன்றி உள்ளூர்ப் பணக்காரரான பார்வதிநாத பிள்ளையிடம் பாக்கியலக்ஷ்மிக்குப் பரம விசுவாசம் ஏற்பட்டதினால் அவரிடம் கொடுக்கல் வாங்கலும் உண்டாயிற்று. பார்வதிநாத பிள்ளை மறவர் கொட்டத்தை யடக்கி இதற்குமுன் அவர்கள் வேளாள

யைத் துன்புறுத்தி வந்தமைக்கெல்லாம் வட்டியும் வாசியுமாகப் பழிக்குப் பழி வாங்க எண்ணியிருந்தனர். நிற்க.

காட்டுப்பட்டியிற் பஞ்சாயத்துப் போர்டு ஒன்று உண்டு. பஞ்சாயத்துப் போர்டு என்பது யூனியன் தான் அந்தக் கிராமம் ஒன்பது வார்டுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. வார்டு ஒன்றுக்கு ஒரு மெம்பர் வீதம் ஒன்பது மெம்பர்களடங்கிய ஒரு சபை அந்த யூனியனாக அமைந்திருந்தது அவ்வொன்பது மெம்பர்களுக்குள் தேர்ந்தெடுக்கப்பெற்ற மெம்பர் ஒருவர் சேர்மனாக இருந்து அதிகாரஞ் செலுத்திவந்தார் காட்டுப்பட்டியில் யூனியன் சேர்மனுக்கு உள்ள மதிப்பும் மரியாதையும் லெஜிஸ்டிவ் அஸெம்பிளி பிரஸிடெண்டுக்குக்கூடக் கிடையாது. ஆகவே அப்படிப்பட்ட யூனியன் சேர்மன் பதவிக்கு எவ்வளவு போட்டியும் முஸ்தீப்பும் இருக்குமென்பது சொல்லித் தெரியவேண்டியதில்லை. யூனியன் தேர்தல் மூன்று வருஷங்களுக்கு ஒரு முறை நடப்பது வழக்கம். இந்த மாதிரி யூனியன் முதலியன ஏற்பட்ட ஆரம்ப காலத்தில் அந்தப் பதவிகளைத் தீண்டுவார் கிடையாது. கிராமாந்தரங்களிற் கல்வியறிவு சிறிது ஏற்பட்டவுடன, இவைகளின் உண்மை மதிப்பை பணக்காரர் சிலர் அறிந்து கொண்டனர். அதனாலேயே இத்தகைய போட்டிகள் நடைபெறலாயின.

மூன்று வருஷங்களுக்கு ஒரு முறை நடைபெறும் யூனியன் தேர்தல் இப்பொழுதும் தொடங்கலாயிற்று. காட்டுப்பட்டிக் கிராமம் இரண்டு பிரிவுகளாக அமைந்துள்ளது. ஆற்றுக்கு அக்கரையில் கிராமத்தைச் சேர்ந்தாற்போல ஆதிதிராவிடர் வாழும் இரண்டு தெருக்கள் உண்டு ஒன்று பள்ளர் சேரி மற்றொன்று பறையர் சேரி. இரண்டுஞ் சேர்ந்து சுமார் நானூறு வீடுகள் வரை உண்டு. இவை இரண்டு தெருக்களும் தனித்தனி இரண்டு வார்டுகள் இந்தப் பிரிவு, காட்டுப்பட்டிக் கீழூர் என்று சொல்லப்படும் காட்டுப்பட்டி மேலூர் சுமார் 2000 வீடுகள் அடங்கியது அவை ஏழு வார்டுகளாகப் பிரிந்திருந்தன. வேளாளர்

கட்சித் தலைவரான பார்வதிநாத பிள்ளையும் மறவர் கட்சித் தலைவரான போத்திலிங்கத் தேவரும் சேர்மன் பதவிக்கு இந்தத் தடவை போட்டியிடத் தொடங்கினார்கள். போத்திலிங்கத் தேவர் மூர்க்கமான சுபாவம் உடையவர் கொலையஞ்சாப் பாதகர். கபடமான குரூரச் செய்கையைத் தமக்கு ஆபரணமாகப் பூண்டவர். இவருக்கு ஒரு சிறு சேனையுண்டு அந்தச் சேனையில் இருபத்தைந்து பேர்கள் பொறுக்கி யெடுத்தாற்போல விளங்கினர் அவர்களில் ஒவ்வொருவருக்கும் ஆள் மட்டத்திற்குச் சரியாய் உயரமுள்ளதும் இருபுறங்களிலும் இரும்புப் பூண்கள் கட்டப்பட்டதுமான தடியும் கறுக்கு அரிவாளும் இன்னும் இவை போன்ற சில ஆயுதங்களும் கொடுக்கப்பட்டிருந்தன. இவர்கள் மாலைப் பொழுதானதும் தம்முடைய ஆயுதங்களைத் தரித்து வெளிக்கிளம்பிச் செல்வது வழக்கம்.

போத்திலிங்கத் தேவர், தாம் சேர்மனாக வேண்டுமென்றெண்ணியவுடனே தம்முடைய சேனையைப் பலப்படுத்தினார் ஒவ்வொருவருக்கும் சரியானபடி நெல்லும்புல்லும் கொடுத்து தயாரிக்கலானார். தினந்தோறும் அவர்கள் ஆசை தீருமளவு குடிப்பதற்கு தகுந்த கள்ளுத்தண்ணீருக்கும் கட்டளை பிறப்பித்து விட்டார். இவர் இப்படி தயாரித்து வருவதையறிந்த பார்வதிநாத பிள்ளை, "நாம் இந்த மறவர்களுக்கு மத்தியில் வெற்றிபெற்று ஒரு நாளாவது சேர்மன் பதவியை அநுபவிக்காவிட்டால் நம்முடைய கியாதி தொலைந்தது. இனி நமக்கு வீட்டைவிட்டு வெளியேவர வெட்கமாய்விடும். ஆதலால் பணம் இன்றைக்கு ஒருவர் கையில்; நாளைக்கு இன்னொருவர் கையில்; எப்படியாவது பத்தாயிரமல்ல இருபதினாயிரமாவது செலவழித்து ஒருகை பார்த்துவிடவேண்டியதுதான்" என்று தீர்மானித்து விட்டார். ரூபாய் பதினாயிரம் எடுத்து வைத்தார். வீட்டுக்கு வரும் உத்தியோகஸ்தர்களுக்கு குறையில்லாமல் உபசரிப்பதற்கேற்றபடி, ஜாகைவசதிகளும், மேஜை நாற்காலி ஜமக்காளங்களும், கலர் சோடா பாட்டில்களும், வேண்டிய மட்டும் ஏற்பாடு செய்திருந்தார். சமையலுக்கும் பிராமணர்களைத் திட்டப்படுத்தினார்.

இவ்வாறாக பிராமணர் வீட்டுக்கல்யாணம் போல எவ்வளவோ பிரமாதமான ஏற்பாடுகள் சட்டங்கட்டி வைத்திருந்தார். அதற்கப்பால் பார்வதிநாத பிள்ளை, தாம் ஒரு வார்டில் அங்கத்தினர் பதவிக்கு நின்றார். மற்ற எட்டு வார்டுகளிலும் தமக்கு வேண்டிய மனிதர்களையே அங்கத்தினர் பதவிக்கு நிறுத்தினார்.

"ஸ்ரீமாந் பார்வதிநாத பிள்ளைக்கே ஓட்டுச்செய்யுங்கள்" என அச்சடிக்கப்பட்ட பெரிய சுவரொட்டிகள் மூந்நூறு தயாரிக்கப்பட்டன. காட்டுப்பட்டிகிராமத்திற் சந்து பொந்துகளும், விடாமல் அவைகள் ஒட்டப்பட்டன. ஆயிரக்கணக்கான சிறு விளம்பரங்களும் தெருத் தெருவாய்ப் பறக்கத் தொடங்கின. சுவரொட்டிகளிலும், சிறு துண்டு விளம்பரங்களிலும், ஸ்ரீமான் பார்வதிநாத பிள்ளையின் வீர தீரச்செயல்களும், குணவிசேஷங்களும் அகலநீளமாக விவரிக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு வார்டிலும், தாம் நிறுத்தியஆட்களுக்கே மெம்பர் ஸ்தானம் கிடைப்பதற்கேற்றபடி வீடு தவறாமல் ஐந்து ரூபாய் முதல் பத்து ரூபாய்கள் வரை கொடுத்துத் தமக்கே சேர்மன் பதவியைப் பதிவு செய்து விட்டதாகப் பகற் கனவு கண்டு கொண்டிருந்தார் பார்வதிநாத பிள்ளை. கிழுரிலும் பள்ளர் சேரி, பறையர் சேரிகளில் தாம் இரண்டு ஆட்களை நிறுத்தி அவர்களுக்கே வோட் செய்யும்படியும் அப்படிச் செய்வதற்காக ஒவ்வொரு வார்டுக்கும் மொத்தமாய் 300 ரூபாய் 'ஊர்ப்பொதுவுக்கு' என்று ஒப்பந்தம் பேசிக் கொடுத்துவிட்டார் ஆதிதிராவிடர்களுக்குள், எக்காலத்திலும் ஒரு அதிசயமான நல்ல குணம் உண்டு அவர்கள் ஒரு தடவை சொன்ன சொல்லைத் தலைபோவதாக இருந்தாலும் மாறுதலாகத் திரும்பச் சொல்லமாட்டார்கள் இங்ஙனம் பிள்ளையவர்கள் பணத்தைப் பணமென்று பாராமல் ஓட்டுச் சல்லியாக எண்ணி வாரி யிறைத்து ஏற்பாடுகள் செய்து கொண்டிருக்கப் போத்திலிங்கத் தேவர் சிறிதும் கவனமில்லாதவர் போல இருந்தார். யூனியன் தேர்தல் நாள் நெருங்கிற்று. தேவரும் தமக்கு வேண்டிய ஆட்களை வார்டு தோறும் அங்கத்தினர் ஸ்தானம் அபேட்சகராக

நிறுத்தினர். கடைசியாகத் தேர்தல் நாளுக்கு மூன்று நாட்களுக்குமுன் போத்திலிங்கத் தேவரது சேனை ஆயுதபாணிகளாக வெளிக்கிளம்பிற்று. இதுவரை இராத்திரி நேரத்தில் மாத்திரம் வெளியே வரும் பட்டாக் கத்திகளும் தடிக்கம்புகளும் இப்பொழுது பட்டப்பகலிலேயே கிளம்பி விட்டன. ஊர் முழுதும் கதி கலங்கிப்போயிற்று. அரிவாள் மறவர்கள் வார்டு தோறும் வீடுவீடாய்ச் சென்று போத்திலிங்கத் தேவருக்கே வோட் செய்வதாய் ஒப்புக்கொள்ளுங்கள். உங்கள் பிள்ளை குட்டிகளின் மேல் கைபோட்டுச் சத்தியஞ் செய்து கொடுங்கள். இல்லை இந்த அரிவாளுக்கே நீங்கள் இரை. உங்கள் வீடுகளும் தீக்கு இரை. பத்திரம்" என்று பயமுறுத்தினர்கள். அப்பொழுது ஊர்க்காரர், "பிள்ளையவாள் ரூபாய் கொடுத்திருக்காங்களே! நாங்கள் என்ன பண்ணுவோம். நீங்கள் முந்து முந்தா நாத்துச் சொல்லியிருக்கப்படாதா? நாங்கள் அந்த பணத்தைக் கை நீட்டி வாங்கியிருக்கமாட்டோமே. பணத்தை வாங்கிக்கொண்டு இப்பொழுது மோசடி செய்தால் நல்லாயிருக்குமா? என முறையிடத்தொடங்கினர்கள் அத்தடி முரடர்கள் கால்களில் விழுந்து வணங்கினர்கள்.

அவர்கள் "இதெல்லாம் பலிக்காது தேவருக்கு வோட்டு போடலேன்னு உங்க உயிர் பிழைக்காது. இது நிச்சயம் தெரியுதா உங்களுக்கு என்று மறுபடி மறுபடி விரட்டினர்கள். 'ஓடுகிறவனைக்கண்டால் விரட்டுகிறவனுக்குத் தொக்கு அல்லவா இப்படி ஊர் எங்கும் அல்லோல கல்லோலம் பட்டுக் கிடந்தது.

பார்த்தார்; பார்வதிநாத பிள்ளை உடனே கலியாணபுரம் சப் இன்ஸ்பெக்டருக்கு ஆள் அனுப்பினர் அனுப்பியது தான் தாமதம் சப் இன்ஸ்பெக்டர் ஹெட்கான்ஸ்டேபில் 10 போலீஸ் வீரர்கள் துப்பாக்கி சகிதம் காட்டுப்பட்டிக்கு வந்து சேர்ந்தார்கள். அன்று முழுதும் அரிவாள் வீரர்கள் வெளிக்கிளம்பவில்லை சப் இன்ஸ்பெக்டர் போத்திலிங்கத்

தேவரைக் கூட்டிக்கொண்டுவரும்படி ஒரு மனிதனை அனுப்பினர். தேவர் நான் பார்வதிநாத பிள்ளை வீட்டுக்கு வர மாட்டேன். ஒரு பொது ஸ்தலத்தில் எஜமானவர்கள் இருந்துகொண்டு என்னை அழைத்து வரச் சொன்னால் நான் அங்கு வருவேன். அதற்குச் சம்மதமில்லாவிட்டால் இன்ஸ்பெக்டர் எஜமான் என் வீட்டுக்கு வரட்டும் என் வீட்டில் அவர்களுக்கு என்ன குறையிருக்கிறது? அவர்களுக்கு வேண்டிய உபசாரங்கள் செய்கிறேன். என்னை எஜமானவர்களே நேரில் விசாரித்து, என்மீது குற்றமிருந்தால் செருப்பாலடித்துக் கழுதை மேலேற்றி ஊரைச் சுற்றி அடித்து விரட்டட்டும்' என அழுத்தந் திருத்தமாகச் சொல்லி அனுப்பிவிட்டார்

அன்றையப் பகல் பூராவும் பார்வதிநாத பிள்ளை வீட்டிலே, எள்விழவும் இடமின்றி ஜனங்கள் குப்பல் கும்பலாய் நின்றுகொண்டிருந்தனர். இராத்திரி விளக்கு ஏற்றும் நேரத்தில் சப்இன்ஸ்பெக்டர் பார்வதிநாத பிள்ளையை நோக்கி நான் வீட்டுக்குப் போய் வருகிறேன் தங்கள் வீட்டைச் சுற்றிலும் போலீஸ் வீரர் காவல் வைத்திருக்கிறேன் தெருத் தெருவாக இரண்டு இரண்டு பேரைக் காவல் நிற்க வைத்திருக்கிறேன். இன்று இராத்திரி ஒரு பயமும் இல்லை எதுவும் நேரிடாது. எனத் தைரியம் சொல்லிவிட்டுப் போனார். போனவர் எங்கே போனாரோ ஒருவருக்கும் தெரியாது.

தாசி, பாக்கியலக்ஷ்மி வீட்டில் அன்று நடு ராத்திரி 12 மணிக்கு நாலா பக்கத்திலிருந்தும் கற்கள் விழுந்தன எந்தத் திசையிலிருந்து கல் வருகிறது என்பது தான் ஒருவராலும் கண்டு பிடிக்க முடியவில்லை சற்று நேரத்தில் கற்கள் பாக்கியலக்ஷ்மி வீட்டிற்குள்ளேயும் விழத்தொடங்கின. அந்தத் தெருக்கோடியிலிருந்த போலீஸ் வீரன் குழல் வைத்து ஊதும் சத்தம் கேட்டது. அதே சமயத்தில் சப் இன்ஸ்பெக்டர் ரிவால்வரை நீட்டிப் பிடித்தவண்ணம் பாக்கியலக்ஷ்மியின் வீட்டு வாசலில் நின்றுகொண்டு மேலே

ஆகாயத்தை நோக்கி வெற்று வேட்டுகளைத் தீர்த்துக்கொண்டிருந்தார் எங்கும் கூ கூ என்று கூக்குரல் கிளம்பிற்று கல்லெறி நின்றது தெருவில் கூட்டம் நிறைந்தது போலீஸ் வீரர்களெல்லோரும் தாசி வீட்டு வாசலில் வந்து கூடினார்கள் பார்வதிநாத பிள்ளையும் அங்கு வந்து சப் இன்ஸ்பெக்டரோடு பேசிக்கொண்டிருந்தார் இன்ஸ்பெக்டர் போலீஸ் வீரரை இவ்விருவராகத் திசை திசையாய்ச் சென்று கல்லெறிந்தவர்களைக் கண்டுபிடிக்கும்படி அனுப்பினார். பார்வதிநாத பிள்ளை, இதுவரை இம்மாதிரி அயோக்கியத்தனம் நடந்ததில்லை எனச் சொல்லி மூக்கின்மேற் சுட்டுவிரலை வைத்து நின்றார். சப் இன்ஸ்பெக்டரோ தமது வீர தீர பிரதாபங்களைக் கூறி அட்டகாசஞ் செய்து கொண்டிருந்தார்.

அதே சமயத்தில் பாக்கியலக்ஷ்மியின் வீட்டுக் கொல்லைபுறத்தில் வேயப் பெற்றிருந்த வைக்கோற்போர் தீப்பற்றி எரிந்தது அப்பொழுது பார்வதிநாத பிள்ளையின் வண்டிக்காரனை கந்தத்தேவன் தடியுங் கையுமாய் நொண்டிக்கொண்டே ஓடிவந்தான். சாமி! எஜமான் வீட்டைச் சுற்றி போலீஸ் பந்தோபஸ்து வைத்துப் பிரயோஜனம் என்ன? கழுகு மலைச் சோடி இரண்டையும் விரட்டிக்கொண்டுநான்கு பேர்கள் வடக்கு வாய்க்கால் தாண்டிப் போய்விட்டார்கள் நான் என் உயிரை வெறுத்துப் பின்னாலேயே விழுந்தடித்துக்கொண்டே ஓடினேன் அவர்களில் யாரோ ஒருவன் ஒரு பெரிய குண்டுக்கல்லை என் காலில் வீசி எறிந்தான். கால் எலும்பு நொறுங்கி விட்டது தப்பிப் பிழைத்தது தம்பிரான் புண்ணியம் என்று ஓடி வந்தேன் சாமி! என்று கூறிக் சதறினான்.

அந்த வேளையில் இரண்டு போலீஸ் வீரர்கள் மேற்குத் திசையிலிருந்தோடி வந்தார்கள் அவர்களில் ஒருவன் அப்பாடா! என் தலையில் நல்ல கல்லெறி என்று அலறினான். இன்னொருவன் என் முதுகெலும்பு முறிந்து போய்விட்டது எனக் கத்தினான் அவர்கள், எஜமானே! இரண்டு மனிதர்கள் பிள்ளையவாள் வீட்டுப் பக்கத்திலிருந்து மேற்கு

நோக்கி ஓடுவதாகத் தெரிந்தது. நாங்கள் அவர்களைத் துரத்திச் சென்றோம். இடைகணவாய் வழியாய்ப் போகையில் நச்சென்று பொடிக்கல் ஒன்று இவருடைய தலையிலே விழுந்தது. அப்பாடா என்றலறிக்கொண்டு அவர் தன் மண்டையைப் பிடித்த வண்ணம் தரையில் உட்கார்ந்தார். அந்நேரத்தில் என் முதுகிலும் யாரோ பெரிய கல் ஒன்றை யெறிந்து விட்டான். நாலா பக்கங்களிலும் ஓடியாடிப் பார்த்தோம் ஒருவரையும் காணக்கூடவில்லை. என்று கூறினார்கள். இப்படியே எல்லாத் திசைகளிலிருந்தும் வந்த போலீஸ்காரர்கள் ஆளுக்கு ஒவ்வொன்று சொல்லிக்கொண்டு நின்றார்கள் சப் இன்ஸ்பெக்டரும் திகைத்து நின்றார் எப்படியும் திருடர்கள் அனைவரும் உள்ளூர்க்காரரே என்று தீர்மானமாயிற்று.

இதற்குள் அங்கு நின்றவர்களும் வேடிக்கை பார்க்க வந்தவர்களுமாகச் சேர்ந்து தீப்பற்றி எரிந்துகொண்டிருந்த வைக்கோற் படப்பைக் குடம் குடமாய்த் தண்ணீர் ஊற்றி தீயை யணைத்துப் பிரித்துத் தள்ளிவிட்டார்கள் சுமார் நூறு ரூபாய் பெறுமான பெரிய படப்பு சேதமடைந்தது பார்வதிநாத பிள்ளை சப்இன்ஸ்பெக்டர் காதில் ஏதோ மந்திரம் போட்டார் உடனே போலீஸ்வீரர் துப்பாக்கி சகிதம் அணிவகுத்து நின்றனர். பார்வதிநாத பிள்ளை தம் வீட்டிற்குச் சென்று கதவைப் பலமாகத் தாளிட்டுப் படுத்துவிட்டார். இரண்டு போலீஸ் வீரர், பார்வதிநாத பிள்ளையின் வீட்டு வாசலில் நின்று பாராக் கொடுத்தனர். மற்றப் போலீஸ் வீரரும் சப்இன்ஸ்பெக்டரும் போத்திலிங்கத் தேவரது வீட்டு வாசலிற் போய் நின்றார்கள். தேவரது வீடு மிகவும் புராதனமான மாதிரியைச் சேர்ந்தது சுவர்கள் உறுதியானவை. மொத்தத்தில் அவ்வீடு அழகானது என்றே கூறலாம் தேவர் அவர்கள் வெற்றிலை பாக்குப் போட்டு புகையிலையையும் வாயில் அடக்கி முற்றத்தில் உட்கார்ந்து உமிழ்ந்து கொண்டிருந்தார். மணி 2க்கு மேலிருக்கும் சப்இன்ஸ்பெக்டரும் போலீஸ் ஜவான்களும் உள்ளே நுழைந்தார்கள் தேவர் எல்லாரையும் உபசாரம் கூறி வரவேற்றார் அங்கே

கிடந்த ஒட்டைப் பெஞ்சிகள் ஒடிந்த நாற்காலிகள் நார்க் கட்டில்கள் முதலிய அனைத்தும் முற்றத்திற் கொணர்ந்து போடப்பட்டன இன்ஸ்பெக்டரும் தேவரும் தனியிடத்திற் குச் சென்று சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தனர் சப் இன்ஸ்பெக்டர் முகத்தில் ஏதோ காரியம் அநுகூலமாய் நிறைவேறியது போல எக்களிப்புத் தோன்றிற்று. போலீஸ் ஜவான்கள் சிறிது நேரத்திற்குள் பார்வதிநாத பிள்ளை வீட்டுப் பங்களாவிலே வந்து படுத்துக் கண்ணயர்ந்தார்கள் சப் இன்ஸ்பெக்டர் பாக்கியலக்ஷ்மி வீட்டுக்குள் சென்றார்

அதிகாலையில் பார்வதிநாத பிள்ளையின் மாட்டுத் தொழுவத்தில் இராத்திரியிலே களவு போன கழுகு மலைச் சோடி கட்டியபடி கட்டியபடி கட்டவிழ்க்காமல் நின்றது. பாக்கியலக்ஷ்மி வீட்டு வைக்கோற் படப்பும் நேற்று இராத் திரி தீப்பிடித்ததென்ற அடையாளம் கூடச் சிறிதும் தெரி யாமல் முதனாட் காலையில் இருந்தபடியே இருந்தது பார்த் தவர் அனைவரும் ஆச்சரியம் ஆச்சரியம் என்று கூறி இமை கொட்டாமற் பார்த்து நின்றார்கள். போலீஸ் வீரர்கள் ஊர் முழுதும் அங்கங்கே ஒன்றியாய் நின்றிருந்தார்கள்.

அன்று காலையில் சேர்மாதேவி டிவிஷன் சப்கலெக்ட ரிடமிருந்து உத்திரவு வந்தது. "காட்டுப்பட்டி ஊருக்குள் யாராவது தடி அரிவாள் முதலிய ஆயுதங்கள்சகிதம் காணப் படலாகாது ஒருவரை யொருவர் வோட்டு விஷயத்தில் வற் புறுத்துதல் ஆகாது தேர்தல் முடியும் வரை இராத்திரி பத்து மணிக்கு மேல் அநாவசியமாக யாரும் தெருவில் நடமாட் டம் செய்யக்கூடாது மூன்று பேர்களுக்கு அதிகமாக கூட் டம் கூடுதல் ஆக்ஷேபகரமானது யூனியன் தேர்தல் முடி யும் வரை காட்டுப்பட்டியில் '**144**' அமுலில் இருக்கும் கலெக்டரவர்களுடைய உத்திரவை மீறினவர்கள் கடுமையான தண்டனைக்குள்ளாவார்கள் என்று நோட்டீஸ் ஒட்டப்பட் டது. அன்று பகல் முழுதும் காட்டுப்பட்டி ஊரில் மனி தர்கள் சுவாசிப்பது கூட மெதுவாகவே ஆய்விட்டது அன்று இராத்திரி ஊரில் போலீஸ் பீட்டு முதலிய தட

புடல்கள் கொஞ்சமும் கிடையாது. விசேடமான சம்பவங்கள் ஒன்றுமே யில்லாமல் யூனியன் தேர்தல் நடைபெற்றது தேர்தல் நடைபெறுமிடத்தில் கலாட்டா வொன்றும் நடக்கவில்லை மறுநாட் காலை வோட்டிங் பெட்டிகள் சப்மேஜிஸ்டிரேட் தாசில்தார் முதலியோர் முன்னிலையில் வைத்து உடைக்கப்பட்டன பார்வதிநாத பிள்ளையும் தேவரும் இரண்டு பேர்களும் அங்கத்தினர்களாகத் தேர்ந்தெடுக்கப் பட்டுவிட்டனர் ஆனால் அவரவர்க்கு அநுகூலமான அங்கத்தினாகள் விஷயத்தில்தான் தகராறு ஏற்பட்டது தேவரது வகை ஆட்கள் மூவர் பிள்ளையவர்களது வகை: ஆட்கள் மூவர் இரண்டு கட்சியிலும் சேராத ஆதிதிராவிடர் ஒருவர் இப்படியாக அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பெற்றனர்

பார்வதிநாத பிள்ளையின் முகத்தில் ஈயாடவில்லை ரூ. 6000 வரை செலவழித்தவனுக்கும் பலனென்றே! ஒன்றுமே பணம் செலவழிக்காமல் சும்மா கலாட்டா செய்து கொண்டிருந்தவனுக்கும் அதே பலன்! நன்றாயிருக்கிறது அரசாங்கத்துப் போலீஸ் இலாகா . வாயிலாகவே எவ்வளவோ ரூபாய்கள் செலவாய் விட்டன பார்வதிநாத பிள்ளையின் ஒரு யூனியன் போர்டு அங்கத்தினர் பதவிக்கு இவ்வளவு செலவா? என்ற கிலி ஏற்பட்டுவிட்டது. இனி இருக்கும் ரூபாயைச் செலவழித்து ஒருகை பார்த்து விடுவது என்ற யோசனை பலமாய் வேரூன்றிற்று.

சேர்மன் பதவியை இவ்விருவரில் எவர் விரும்பினாலும் அவர் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களில் தம் கட்சியில் உள்ள ஆட்களைத் தவிர அதிகமாகப் புது அங்கத்தினர் ஒருவரை எப்படியாவது சரிக்கட்ட வேண்டிய பொறுப்பு ஏற்பட்டது. அந்தப் புது அங்கத்தினர் ஆற்றுக்கு அக்கரையில் கீழூர்ப் பறைச்சேரியைச் சேர்ந்தவர் பறைச்சேரி அங்கத்தினர் யார் பக்கம் வோட்டுச் செய்வாரோ அவரே சேர்மன் பதவியை யடைய முடியும் பார்வதிநாத பிள்ளையும் போத்திலிங்கத் தேவரும் தனித்தனியே தம்கட்சியிலுள்ள மற்ற அங்கத்தினர்களைச் சேர்மன் தேர்தல்

நாளுக்கு நான்கு நாட்களுக்கு முன்னமேயே தத்தம் வீடுகளுக்குக் கூட்டி வந்து அவர்களுக்கு ராஜபோகம் அளித்துப் பராமரித்து வந்தனர். நாளை விடிந்தால் சேர்மன் எலக்ஷன் நடைபெறும். இன்று மாலை நேரமாயிற்று. கல்யாணபுரம் மாந்திரவாதி மாயாண்டியா பிள்ளையும் பார்வதிநாத பிள்ளையும் அவர் வீட்டிற்குள் கடைசி யறையிலிருந்து பேசிக்கொண்டிருக்கிறார்கள். பிள்ளைக்கு வொட்டுச்செய்யும் அங்கத்தினர்கள் மூவரும் அவரது பங்களாவிலேயே சகல சுக போகங்களையும் அனுபவித்துக்கொண்டிருந்தனர் இந்த அங்கத்தினர் ஒவ்வொருவருக்கும் பிள்ளையவர்கள் முன்னமேயே ஒப்புக்கொண்டிருந்தபடி ரூபாய் ஐந்நூறு கொடுக்கப்பட்டது. பார்வதிநாத பிள்ளையின் தம்பியும் மாயாண்டியா பிள்ளையும் ரூபாய் ஆயிரம் எடுத்துக் கொண்டு ஆற்றைக் கடந்து கீழூருக்குப் போயினர். அவ்விருவரும் பறைச்சேரித் தலைமைக்காரன் மாசானஞ்சாம்பானையும், புதிய அங்கத்தினரையும் கண்டு பேசினார்கள். அந்த மெம்பருக்கு 500 ரூபாயும் ஊர்ப்பொதுவுக்கு 500 ரூபாயும் வாங்கிக் கொண்டு பார்வதிநாத பிள்ளைக்கே சேர்மன் பதவி ஓட்டுச் செய்து விடுவதென்று மாசானஞ்சாம்பானிடம் முடிவுசெய்து விட்டுத் திரும்பி வந்தார்கள். அவர்கள் வீடு வந்து சேர மணி எட்டாயிற்று.



## அத்தியாயம் 9

### பாலிய விவாகத்தின் தீமைகள்.

இனி நமது கதாநாயகியின் செய்தியைச் சிறிது கவனிப்போம். கனகசபாபதி 5-மணி ரயிலில் ஊரை அகன்று செல்வதை, அவன கடித மூலமாய் உணர்ந்து ராஜலக்ஷ்மி அதற்குப் பதில் லிகிதமொன்றை எழுதித் தூப்புக்காரி சுப்பம்மாள் வசம் கொடுத்தனுப்பினுளல்லவா? அவள் கடிதத்திற் குறிப்பிட்டிருந்த நாட்கள் கழிந்தன கனகசபாபதியிடமிருந்து யாதொரு தகவலும் கிடைக்கவில்லை அவளுடைய வருத்தம் வளர்ந்தது. இரண்டு மூன்று நாட்களாய்க் காமாட்சியாச்சி இராஜாம்பாளிடம் நெருங்கிப் பழகத் தொடங்கியிருக்கிருள். ஆனல் அவள் அங்ஙனம் பழகுதற்குக் காரணம் யாதாயிருக்கலாம்? எந்தத் தந்திரத்தினுலாவது அவளைத் தன் மகன் ஆறுமுகத்திற்குக் கலியாணம் செய்வித்துவிடவேண்டுமென்பதே காமாட்சியின் எண்ணம் நிற்க.

ஆறுமுகம் பிள்ளை காமாட்சியிடம் அம்மா! இராஜலக்ஷ்மியை எவ்விதத்திலும் எனக்குக் கலியாணஞ் செய்து வைக்கவேண்டியது உன் பொறுப்பு ஊருக்கெல்லாம் எவ்வளவோ உழைக்கிருய்! எனக்கு ஒரு கலியாணத்தைக் காணும். இராஜாம்பாளை எனக்கு மணஞ் செய்விக்கவில்லையானல் நீயுமில்லை நானுமில்லை தெரியுமா என் செய்தி! தனக்காகாத சட்டி இருந்தாலென்ன தகர்ந்தாலென்ன என்று உன்னை ஒரே யடியாய்த் தொலைத்துவிடுவேன். சுந்தரத்துக்கு ராஜம்மாளைக் கலியாணஞ் செய்விக்கவேண்டுமென்று அவள் வீட்டுக்கும் அவன் வீட்டுக்குமாக நடவா நடை நடக்கிருய் பணம் பணமென்று சாகிருய்! என்னைவிடப் பணமே உனக்குப் பெரிதாய்விட்டதோ? சுந்தரம் எத்தனை தாசிகளுக்கோ பணத்தைச் சூறையிட்டு வருகிருன் போதாக்குறைக்கு தலைச்சேரி நாகரத்தினத்தின் மகளோ யாரோ ஒருத்தி அவள் வீட்டில் ருது வாயிருக்கிருளாம்

அவளைச் சடங்கு கழித்து அவளையே கலியாணம் செய்துக் கொள்ளவும் போகிறானும் ஒப்பந்தம் பேசி முடிவு கட்டியிருக்கிறான் அவள் ரூபாய் மூவாயிரம் கேட்கிராளாம். அந்த ரூபாயை தயாரித்துத் தரும்படி என்னிடம் மன்றாடிக் கேட்டுக் கொண்டிருக்கிறான் அவனுக்கு எப்படியும் ரூபாயை தயார் செய்து கொடுப்பதாக வாக்களித்துவிட்டேன் ஏதாவது ச்ாக்குப் போக்குச் சொல்லிக் கணக்கைச் சரிக்கட்டி ரூபாய் கொடுத்துவிடு என்று சுந்தரம் என்னிடத்திற் சொல்லியிருச்கிறான் அப்படியே தயாரித்தும் வைத்திருக்கிறேன். அவன் அந்தப் பெண்ணிற்குச் சாந்தி கழிப்பது நாகரத்தினம் ஒருத்திக்குத்தான் தெரியும். அடுத்த வீட்டுத் தாசிகளுக்குக் கூட கடைசி வரையும் தெரியாதிருக்கும்படி ஏற்பாடு செய்து இருக்கிறான் இராஜலக்ஷ்மி வீட்டுச்கும் தன் பெற்றோர்க்கும் ஓசைப்படாதபடி காரியத்தை முடிக்கப் பார்க்கிறான். அந்தப் பெண்ணைக்குறித்தும் ஓர் புதுமையான ரகசியம் இருப்பதாகத் தோன்றுகிறது அவள் பொது மகள் குலத்திற் பிறந்தவளாகத் தெரியவில்லை மிகுந்த லக்ஷணமுள்ளவள் எனவும் தெரிகிறது அது எப்படி இருந்தாலும் சுந்தரம் அவளைக் கட்டியழுவதில் எனக்கு யாதொரு ஆக்ஷேபணையுமில்லை நீ அந்தப் பெண்ணைப்பற்றிய ரகசியங்களை இன்றைக்குக் கண்டிப்பாய் அறிந்து வந்து என்னிடம் தெரிவிக்கவேண்டும் இராஜம்மாளையும் அப்புறம் எனக்குக் கலியாணஞ் செய்விக்கவேண்டும். இந்த இரண்டு காரியங்களையும் நீ செய்யாவிட்டால் உன் உயிர் பிழைப்பது அரிது என்று பயமுறுத்திவிட்டு வெளியே சென்றான்.

ஆறுமுகம் பிள்ளை கூறிய வார்த்தைகளைக் கேட்ட காமாட்சியாச்சிக்குக் கலக்கம் பெரிதாயிற்று உடனே நாகரத்தினம் வீட்டை நோக்கி புறப்பட்டுச் சென்றாள் 'நாகரத்தினம்' என்பவள் ஒரு பரம்பரைத் தாசி அவளுக்கு வயது அறுபது இருக்கும் பல் போன பிறகும் சொல போகாமல் யாரையும் உபசாரத்தால் மயக்கிப் பணஞ் சேகரிப்பது அவளுக்கு எளிதான காரியம். காமாட்சியின்

(கணவனைப் பெற்ற) மாமன் ஒரு காலத்தில் நாகரத்தினத்திற்குச் செல்லும் செலவிற்கெல்லாம் கொடுத்து வாழச் செய்திருந்தான். ஆதலால் நாகரத்தினத்திற்குக் காமாட்சியை நன்றாய்த் தெரியும் காமாட்சியாச்சிக்கும் அவள் இன்னாரென்ற விஷயம் தெரியாமலில்லை ஆனால் இருவருக்கும் பழக்கம் கிடையாது காமாட்சி வீடேறித் தன்னைத் தேடி வந்தபின் இருவருக்கும் அன்னியோன்னியமான சம்பாஷணை நடக்கத் தொடங்கிற்று நாகரத்தினம் காமாட்சியை நோக்கி என்னம்மா! வாருங்கள் வழிதப்பினாற்போல இவ்வளவு தூரம் என் வீட்டைத் தேடித் தாங்கள் வருவதற்கு என் வீடு என்ன புண்ணியஞ் செய்ததோ? தெறியவில்லை எனக்கூறி அவளை வீட்டிற்குள் அழைத்துச் சென்றாள் கிழத் தெரிவையரிருவரும் அங்கொரு கட்டிலில் அமர்ந்து வெற்றிலை பாக்கு போட்டுக் கொண்டார்கள்.

## சம்பாஷணை.

காமாட்சியாச்சி— உன் மகள் காலஞ்சென்று எத்தனை வருஷம் இருக்கலாம்? அவள் இறந்த பிறகு உனக்குச் சிறிது கஷ்டமாயிருக்குமல்லவா?

நாகரத்தினம்— அவள் காலஞ் சென்று இரண்டு வருடங்களாகின்றன உங்களைப் போலப் பெரிய வீட்டுக்காரர்கள் கருணையிருக்கும்போது எனக்குக் கவலை என்ன? போகிற போக்கில் அவள் எனக்காகப் போதுமான மட்டில் திரவியம் தேடி வைத்துப் போயிருக்கிறாள்.

காமாட்சியாச்சி— அவள் உயிருடன் இருக்கும்பொழுது உனக்கிருந்த சந்தோஷம் இப்பொழுதிருக்குமா?

நாகரத்தினம்—அது இருப்பதெப்படி? மஹாலக்ஷ்மி போன்ற அவள் வீட்டுக்கு அலங்காரமாயிருந்தாள் அவளைப் பறிகொடுத்து விட்டு நானும் கட்டையைச் சுமந்துகொண்டு திரிகிறேன்.

காமாட்சியாச்சி— என்ன செய்வது? அவள் உயிருடன்

இருப்பாளானல், இவ்வழகான வீடு இப்படி ஒட்டடை யடைந்து கிடக்குமா? எவ்வளவோ கியாதி சம்பாதித்திருந் தாள். கியாதியோடு பணமும் மிகுதியாய்ச் சேர்ந்தது. நம் முடைய 'சுந்தரம்' அவள் இறந்ததற்காக மூன்று நாள் பட் டினி இருந்தான் நான் போய் எவ்வளவோ சமாதானஞ் செய்தேன்.

நாகரத்தினம்—என்னவோ? சுந்தரம் பிள்ளையவர்கள் ஏற்றிவைத்த விளக்குத்தான் இப்பொழுதும் வீட்டில் எரி கிறது என்மகள் இறந்த பிறகு இந்த வீட்டு வாசற்படியை அவர்கள் ஏறிட்டுப் பார்ப்பது கூடக் கிடையாது அந்தச் சிதேவி வாழும்பொழுது ஜமீன்தார்கள் மிட்டாதார்கள் இனும்தார்கள், ஜாகிர்தார்கள், மிராசுதார்கள் எல்லாரும் வந்த வண்ணம் இருந்தார்கள். இப்பொழுது இங்கே இய டிக்கக்கூட ஆள் கிடையாது.

காமாட்சியாச்சி— மாடியில் யாரோ பாடுகிற சத்தம் கேட்கிறது யாரது? பாட்டு நன்றாயிருக்கிறது.

நாகரத்தினம் அது ஒரு பெரிய கதை நீங்கள் நம்மு டைய ஆள். உங்களிடத்தில் அதைச் சொல்லுவதில் தோஷ மில்லை. அதோ பாடுகிறாளே அவள் தான் என் மகளுக்குப் பிறகு சிறிது ஆறுதலாக எனக்குச் சந்தோஷம் அளித்துக் கொண்டிருக்கிறாள். என் மகளுக்குத் திருநெல்வேலியில் தோழி யொருத்தி உண்டு அவள் பெரிய பணக்காரி. இந்தப் பெண் அவள் வீட்டிலே குழந்தைப் பருவம் முதல் வளர்ந் தவள். இவளை அவள் வளர்க்கத் தொடங்கியதும் அவளுக் குத் தொடுபிடியாய் மூன்று பெண்கள் பிறந்தன என்மகள் திருநெல்வேலிக்குப் போய்த்திரும்பி வரும்பொழுதெல்லாம் இவளை நம் வீட்டுக்குக் கூட்டிவந்து விடவேண்டுமென்று பிடி வாதஞ் செய்தாள் அவள் யார் என்று எவ்வளவோ கேட் டேன். அவளைப் பற்றிய விஷயங்கள் ஒன்றுமே தெரிவிக்கா மல் ஒரு தடவை அழைத்து வந்து விட்டாள்.

காமாட்சியாச்சி— அந்தப் பெண் யாரென்பது இன் னும் உனக்குத் தெரியாதோ?

நாகரத்தினம்—இப்பொழுது அந்த விஷயம் அநேகமாய்த் தெரியும் என் மகள் இறக்கும்பொழுது அந்தக் கூட்டுகளை உடைத்தாள். அவள் சாகிற வரையிலும் இப் பெண்ணைக் கண்ணுக்குக் கண்ணாய் வளர்த்து வந்தாள். சங்கீதம் படிப்பு முதலியன திறமையாய்க் கற்பித்தாள். ஊரார் பிள்ளைக்கு இவ்வளவு கவனிப்பு ஏன் என்று நானும் அவளிடம் அடிக்கடி சண்டை போட்டு வந்தேன். ஆனால் அவள் அதற்கெல்லாம் காது கொடுக்கவே இல்லை. அவளுக் குக் குறுக்கே பேசுவதும் என்னாலியலாது என்று நானும் சும்மா இருந்து விட்டேன்.

காமாட்சியாச்சி— அந்தப் பெண்ணின் பெயர் என்ன! அவள் பள்ளிக்கூடத்திலே சேர்ந்து படித்திருக்கிறாளா? சங் கீதத்தில் யாரிடத்திலே சிக்ஷை பயின்றவள்? சதுர் கிதுர் பழகியிருக்கிறாளா?

நாகரத்தினம்— அந்தப் பெண்ணின் பெயர் 'லீலா பள்ளிக்கூடத்திற் சேர்ந்து எட்டு வகுப்புக்கள் முடியப் படித்திருக்கிறாள் குடும்பத்திலே வாழ்கிற பெண்களுக்கு எவ்விதத்தில் பயிற்சிகள் வேண்டுமோ அவ்விதத்தில் தான் என் மகள் அவளுக்குப் பயிற்சிகள் அளித்துக் கவனமாய் வளர்த்திருக்கிறாள். சங்கீதம் என் மகளே அவளுக்குச் சொல்லிக்கொடுத்தாள். அந்தப் பெண்ணைத் தேவடியாள் வீட்டுப் பெண் போல அவள் வளர்க்கவில்லை 'சதுர்' முதலிய பணம் சேர்க்கும் தொழிலில் அவளைப் பழக்கவில்லை.

காமாட்சியாச்சி— சரி இவைகள் எல்லாம் இருக்கட்டும் உன் மகளோடு சேர்ந்து பாட்டுக் கச்சேரி முதலியவற்றிற் காவது போய் அந்தப் பெண்ணுக்குப் பழக்கம் உண்டோ?

நாகரத்தினம்—அதெல்லாம் கூடாதென்று அந்தமாதிரி வழக்கங்களிலேயே இவளைத் திருப்பவில்லை. மேலும் லீலா இவ்வீட்டிலே யிருந்து வளர்கிற விஷயம் நாள்தோறும் இங்கே வந்து போய்க்கொண்டிருந்த ஆண்மக்கள் கோடாநு கோடியில் ஒரு கடை கோடிக்கும் தெரியாது அவ்வளவு

அந்தரங்கமாயும் செல்வமாயும் லீலாவை என் மகள் வளர்த்தாள் எனக்கே அவள் இந்தப் பெண் விஷயத்தில் காட்டிவந்த பிரியமும் உண்மையும் விசுவாசமும் இன்றைக்கு நினைத்தாலும் பெரிய ஆச்சரியத்தை விளைக்கின்றது.

காமாட்சியாச்சி—அப்படியா! நிரம்ப ஆச்சரியமாகவேயிருக்கிறது இவ்வளவு ஜாக்கிறதையாய் வளர்த்த பெண்ணை இப்பொழுது உன் மகள் தனியாய் விட்டு இறந்துபோனளே இனி இவளுடைய ஜீவனம் கழிகிறது எப்படி? இவளுடைய வாழ்க்கையைப் பற்றி அவளுக்கு யோசனை என்ன இருந்தது? இப்பொழுது லீலாவுக்கு வயது என்ன இருக்கும்?

நாகரத்தினம்—லீலா சிறு பெண் தான் பக்குவதியாகிச் சில மாதங்கள் தானுகின்றன மற்ற ஜாதிகளிலே நடத்துகிற மாதிரி எங்கேயாவது நல்ல மாப்பிள்ளை ஒருவனைப் பார்த்து அவனுக்கு இவளை மணஞ்செய்து கொடுக்க வேண்டுமென்று என் மகள் எண்ணியிருந்தாள். அப்படியேதான் இறக்கும் போதும் என்னிடம் கண்டிப்பாய்ச் சொல்லியுமிருக்கிருள். இவள் பேருக்கு 3000 ரூபாய் பெருமான சொத்துக்களை ரிஜிஸ்தர் செய்து கொடுத்திருக்கிருள் 3000 ரூபாய் பெறுமான நகைகளும் இவளுக்குப் போட்டிருக்கிருள்.

காமாட்சியாச்சி—அப்படியா சங்கதி இவ்வளவு அபாரமான உரிமையும் ஆசையும் இல்லீலாமீது உன் மகளுக்கு ஏற்படவேண்டிய காரணமென்ன?

நாகரத்தினம்—அம்மா! லீலா ஜாதியிலே பிராமணத்தி மூன்று வயதிலேயே அவளுக்குக் கலியாணமாயிற்றும் மாப்பிள்ளையின் தகப்பனர் ரங்கூனில் ஏதோ உத்தியோகம் பார்த்தாராம் ஐந்து வயது பையனுக்கு 3 வயதுள்ள லீலாவை அவள் தகப்பனர் செல்வக் கலியாணம் செய்வித்தார் கலியாணம் முடிந்து மாப்பிள்ளை வீட்டுக்காரர் ரங்கூனுக்குச் செல்லுகையிற் காற்றிலே கப்பல் கவிழ்ந்து அவர்கள் கடலுக்கு இரையானுர்கள் ஆகவே 3—வயதுப் பெண்ணுகிய லீலா விதவையானுள். செல்வக் கலியாணம் செய்வித்த

ஆடம்பரச் செலவுகளினால் அவளது பெற்றோரும் குடிக்கக் கஞ்சியுமற்ற வறுமை நிலைமை யடைந்தனர். பெற்றோர் போஷணையிலிருந்த லீலா, ஐந்தாறு வயதில் தாயையும் விழுங்கினாள். அதற்குப் பிறகு சிலவருஷங்களில் தகப்பனாரும் காலாவிலே காலகதியாயினார்.

காமாட்சியாச்சி—அடடா? இவ்வளவு யோகம் உடையவளா இந்தப் பெண்?

நாகரத்தினம்—பாவம்! அவள் என்ன செய்வாள். இவளது பெற்றோர் முதலில் பெரிய பணக்காரராயிருந்து பிறகு தரித்திர திசையை யடைந்து விட்டமையால், தமது சொந்த ஊரிலே வாழ்வதற்கு மனமில்லாமல் திருநெல்வேலிக்கு வந்து சேர்ந்தனர் லீலாவின் தகப்பனாருக்கு இயற்கையாக சங்கீதத்திலே சிறந்த தேர்ச்சியுண்டு அதனோடு நட்டுவத் தொழிலிலும் நல்ல சாமர்த்தியம் அவருக்கு அமைந்திருந்தது. அதனால் அவர் திருநெல்வேலியிலிருந்த என்மகளது தோழிக்கு முதன் முதல் சங்கீதம் நாட்டியம் முதலியன கற்பித்தார் அதுபோலவே தாசி வீட்டுப் பெண்கள் சிலருக்கும் கற்பித்துத் தம் வயிற்றுப் பாட்டைக் கழித்து வந்தார் மனைவியை இயமனுக்குப் பறிகொடுத்தபிறகு அந்தப் பிராமணர் தம் ஒரே மகளோடு தாசிகளது வீட்டிலேயே தங்கிவிட்டாராம். முக்கியமாய் அவர் தங்கியிருந்தது என் மகளது தோழி வீட்டிலேயே, என் மகள் சின்னஞ் சிறு வயது முதலே பெரிய யூகசாலி. அவள் திருநெல்வேலியிலிருந்து தன் தோழி கூடவே அந்தப் பிராமணரிடம் சங்கீதமும் பரதநாட்டியமும் பயின்றாள். திருநெல்வேலியில் தற்காலம் சதுர் பாட்டு முதலியவைகளாற் பொருள் திரட்டி வரும் தாசிகளனைவரும் அநேகமாய் அந்த ஐயரவர்களுடைய சிஷ்யைகளேயாவர். என் மகளும் அவள் தோழியும் அவருக்குப் பிரதம மாணவிகள் இந்த லீலாவுக்கு எட்டு ஒன்பது வயதளவில் தான் அவர் இறந்துவிட்டார். அது முதல் லீலா அவள் வீட்டிலேயே தங்கும்படியாயிற்று.

காம்ாட்சியாச்சி—பிராமணப் பெண்ணுக்கு இந்தக் கதியா நேரவேண்டும்? நன்ருயிருக்கிறது பால்குடி மறவாத குழந்தைப் பருவத்திலேயே இந்தப் பார்ப்பார ஜாதியிலே மணம் முடித்து இம்மாதிரிப் பெண்கள் பாவத்தில் அடித்து விழுந்து விடுகிருர்கள். பாலிய விவாகத்தினல் விளையும் தீமைகளைப் பார்த்தாயா? இனி இந்தப் பெண் வாழ்க்கை எம்மாதிரி முடியப் போகிறதோ? 'செல்வக் கலியாணம்' என்னும் இந்த மண்ணுங் கட்டிக் கலியாணம் பணத்தை ஏப்பம் போட்டுத் தெருவில் நிற்க வைத்ததுமில்லாமல், மாப்பிள்ளையையும் கொண்டொழிந்தது. இப்பொழுது இந்த பார்ப்பாரப் பெண் தாசியாகும்படியாய் நேர்ந்தது கதை எவ்வளவு பரிதாபமாக முடிந்தது? லீலாவை இனிமேல் நீ என்ன செய்யப் போகிருய்? உன் மகள் சொல்லியிருக்கிற படி செய்வாயா? அல்லது தாசித் தொழிலிலே புகுத்திக் கோட்டை கோட்டையாய்ப் பணத்தைக் கட்டப் போகிருயா? உன்னுடைய உத்தேசம் என்ன?

நாகரத்தினம்—அது வேண்டாம் என் மகள் கூறிய தற்கு இது முற்றிலும் பாறுதலான விஷயம் மேலும் லீலா அதற்கு இணங்கமாட்டாள் அப்படி ஏதாவது தனக்கு மானக்கேடு நேர்வதாயிருந்தால் தற்கொலை செய்துகொள் வாள் பெண்பாவம் பொல்லாதது. என்னென்ன பாவங்கள் செய்தோ தாசி குலத்தில் பிறந்து விட்டோம். இன்னும் அநியாயப் பாவ மூட்டையைச் சுமக்கவேண்டாம் அந்தப் பெண் என் மகளை விடப் பதின்மடங்காக என்னிடம் பய பக்தியாய் நடந்து கொள்கிருள் என்னையறியாமலே அவளி டத்தில் எனக்கு ஒருவித அச்சமும் அன்பும் ஏற்படுகின்றன ஆதலால் லீலாவின் மனம் நோக நடப்பதற்கு எனக்கு மனம் வரவில்லை.

காமாட்சியாச்சி—பழியென்ன? பாவமென்ன? குடும் பத்திலுள்ள சிறுக்கிகளே வியபிசாரம் செய்து பணம் திரட் டுகிருர்கள் தாசிக்கு என்னஅவமானம் வந்துவிடப்போகிறது

தாசியின் வீட்டில் சிறுவயதுமுதல் வளர்ந்தவள் தாசிதான். முதன் முதலில் சரியான பணக்காரன் ஒருவனைப் பார்த்து சாந்தி கழிக்கும்படி செய்துவிட்டால், பிறகு நாளாவிர்த்தியில் பண ஆசையிற் சிக்கித் தொழில் முறையில் அவளாகவே இறங்கி விடுகிறாள்.

நாகரத்தினம்— எனக்கும் அப்படியே தான் யோசனை முதலில் 3000 ரூபாய் தருகிற ஒருவருக்கு இவளை சாந்தி கழிப்பதற்காக ஏற்பாடு செய்திருக்கிறேன். இந்த விஷயத்தில் நான் மிகவும் தந்திரமாய் நடந்துகொள்ள வேண்டியிருக்கிறது அங்ஙனம் சாந்தி கழிப்பவர் நமக்கு மிகுதியும் உடந்தையான ஆளாக இருக்கவேண்டியது அவசியம் இவளைப் பற்றி இன்னும் அதிக ரகசியமான சங்கதிகளுண்டு அவை எனக்குத் தெரியா. அந்தப் பெண்ணுக்கே தெரியும் அவள் இஷ்டத்துக்கு மாறாக நான் ஒன்றும் செய்ய முடியவில்லை அவள் வேறு ஒருத்தியை இனி மணக்காத ஆடவன் யாராயிருந்தாலும், அவனுக்கே தான் மனைவியாவதாக ஒப்புக்கொள்கிறாள் அவன் எப்பொழுதும் தன்னுடனேயே வாழ வேண்டுமென்பதும் அவளுடைய கோரிக்கை. அவன் பரம ஏழையாயிருந்தாலும் குற்றமில்லை என்பதற்காகவே என் மகள் இந்தப் பெண் பேருக்குச் சொத்து எழுதிக் கொடுத்திருக்கிறாள் சிலவருஷங்கட்கு முன்னெல்லாம் தான் விதவையென்பதை உணர்ந்த இவள் கலியாணமே செய்துகொள்ள மாட்டேன் என்று பிடிவாதம் பண்ணினாள் ஆனால் என்மகள் பாலிய விதவைகளுக்கு நேரிடும் தீங்குகளை எவ்வளவோ எடுத்துச் சொல்லி விதவா விவாஹம் அவசியம் என்பதைத் தெளிவாய் இவளுக்குக் கூறியதின் பேரில் இவள் இந்த மட்டில் ஒப்புக்கொண்டிருக்கிறாள். 3000 ரூபாய் ஒப்பந்தம் பேசியிருக்கிற போவழி . இவளை விவாகம் பண்ணிக்கொண்டது போலவே இவளோடு என்னாளுமே இல்லறத்தில் வாழ்வதாகவும் ஒப்புக்கொண்டிருக்கிறார் ஆனால் அதைப் பற்றி நமக்குக் கவலையில்லை முதலில் சரியான மனிதரோடு இவளைப் பிணைத்துப் போட்டுவிட்டால் நீங்கள் முன்கூறிய

படி பிறகு அவர்கள் இருவரும் எப்படியாவது இழுத்துக் கொண்டு கிடக்கிறார்கள். அப்புறத்திய சமாச்சாரம் அவளை சேர்ந்தது.

காமாட்சியாச்சி—அது சரிதான் "செட்டியார் முறுக்கா சரக்கு முறுக்கா" இவள் சாமர்த்தியமாய் நடந்துகொள்ளுகிற சீரிலே அவன் இவளோடேயே காலந் தள்ளட்டுமே! ஆனால் 3000 தருகிறதாகப் பேசி முடிவு பண்ணியிருக்கிற மாப்பிள்ளை யாரோ?

நாகரத்தினம்— நமக்குத்தான் அன்னியரிடத்தில் இம்மாதிரி விவகாரங்களைக் கூறுவதற்கு நாவில்லையே! ஆதலால் நமது சுந்தரம் பிள்ளையைத்தான் கைக்குள்ளே போட்டுக் காரியத்தை முடிப்பதாக யோசனை. அவர்கள்தான் 3000 கொடுப்பதாக முதலடியில் ஒப்புக்கொண்டார்கள் ஆனால் அவர்கள் இதற்கு ஒப்புக்கொண்டிருப்பது இரண்டாவது மனிதருக்குத் தெரிந்தாலும் மிகவும் மோசமாய் விடும் ஆபத்தாகவும் முடியும் தாங்கள் பெரிய தபவு பண்ணிக் காரியத்தை வெளியிடக்கூடாது. வேறு ஒருத்தியையும் தான் கலியாணஞ் செய்யப் போவதில்லை என்றும் அவர் முடிவு கூறியிருக்கிறார்.

காமாட்சியாச்சி—இதற்கெல்லாம் சுந்தரம் சரியான ஆள் தான் ஆனால் சுந்தரத்துக்குத் தமக்கையின் சக்களத்தி மகள் ராஜலக்ஷ்மி என்றொரு பெண்ணிருக்கிறதே அதையல்லவா அவனுக்குக் கலியாணம் நடத்தப் போவதாக ஊரெல்லாம் பேச்சாய்க் கிடக்கிறது.

நாகரத்தினம்—அது விஷயம் எனக்குத் தெரியாது. ஆனால் அதை முன்னிட்டுத்தான் அவரும் தன் பெயர் இவ்விஷயத்தில் சிறிதும் வெளிக்குத் தெரியவேண்டாம் என்று கூறினார் போலிருக்கிறது. அதைப்பற்றி நமக்கென்ன? நம்முடைய பெட்டிக்கு ரூ. 3000 வந்த பிறகு அவர் எப்படி வேண்டுமானாலும் செய்து கொள்ளட்டும் எனக்குச் சிறிதும் ஆக்ஷேபனை கிடையாது. அதற்குப் பிறகு லீலாதான் எக்கேடு கெட்டால் நமக்கென்ன? தாசி முறையில் பொருளை

விருத்தி செய்துகொண்டு வீட்டிலிருந்தால் இருக்கட்டும். இல்லாவிட்டால் என் மகள் எழுதிக் கொடுத்திருக்கிற சொத்துக்களோடு எங்கே வேண்டுமானாலும் ஒழியட்டும்.

காமாட்சியாச்சி—நான் வந்து மிகுந்த நேரமாயிற்று. இந்தப் பக்கம் ராஜலக்ஷ்மியின் கலியாணத்துக்காகச் சுந்தரம், பாட்டுப் பாடுதற்காக ஒரு நல்ல நபரைத் தெரிந்து வரும்படி கூறியிருந்தான். தெருவழியாய்ச் செல்லுகையில் யாரோ நன்றாய்ப் பாடுகிற சத்தம் கேட்டது. உள்ளே நுழைந்தேன். எவ்வளவு விஷயங்களோ பேசி நேரம் வீணாய்ப் போயிற்று. ஆனால் நாகரத்தினம்! என்னிடத்தில் இந்த விஷயங்கள் கூறிவிட்டதற்காக நீ சிறிதும் அநுதாபம் கொள்ளவேண்டாம் தினம் எவ்வளவோ சாப்பிட்டு ஜீரணமாய்விடுவது போல இவ்விஷயங்களும் என்னிடத்திலே ஜீரணமாய்விடும். அதைக் குறித்து யாதேனும் இடையூறு நேரிடுமோ என்ற திகில் உனக்கு வேண்டியதில்லை. நான் போய்வருகிறேன்.

நாகரத்தினம்—சரிதான் அம்மா! அவ்வளவே நீங்கள் கிருபை செய்யவேண்டும். சுந்தரம் பிள்ளையிடத்திலும் தாங்கள் இதனை அறிந்திருப்பதாகக் காட்டிக் கொள்ளக்கூடாது. சுகமாய்ப் போய் வாருங்கள்.

இப்படி நாகரத்தினத்திடம் விஷயங்களைக் கிரஹித்துக் கொண்டு காமாட்சியாச்சி வீட்டைவிட்டு வெளியேறியதும் தடியூன்றித் தள்ளாடிய நடையுடன் தலைபைக் குனிந்த வண்ணம் பிச்சைக்காரனொருவன் அத்தாசியின் வீட்டு வாசலில் நின்று உரக்கக் கத்தினன். காமாட்சியாச்சி இந்த நாட்டிலே பிச்சைக்காரப் பயல்களது தொல்லே பொறுக்க முடியவில்லை திருட்டுப் பயல்கள் பகல் வேளைகளில் இப்மாதிரி வேஷங்கள் போட்டுக்கொண்டு வந்து வீட்டின் அடையாளம் உளவுகள் முதலியன பார்த்துச் செல்கிறார்களாம் இந்தப் பயலுக்கு இவ்வளவு நேரத்தில் என்ன பிச்சை! மணி 6 ஆகிச் சூரியன் அஸ்தமிக்கப்போகிறது! எங்கேயாவது சத்திரஞ்சாவடிகளிற் போய் முடக்கிக்கிட" என்று கூறிக்கொண்டே நாக

ரத்தினத்தின் வீட்டையகன்றாள். நாகரத்தினமோ உள்ளிருந்தபடியே ஏதேதோ முணுமுணுத்துக்கொண்டே இருந்தாள். பிச்சைக்காரன், மேல்மாடியை நிமிர்ந்து பார்த்துக்கொண்டே நின்றான். மேல்மாடியின் பிராந்தாவில் பளீர் என்று ஒரு மின்னல் தோன்றி மறைந்தது. அங்ஙனம் தோன்றியது ஒரு பெண்ணின் உருவமே என்பதைப் பிச்சைக்காரன் உணர்ந்தான். உடனே அம்மா! அம்மா! ஏழை மீது இரக்கம் இல்லையா என உரக்கக் கத்தினன். மறுபடியும் முன்தோன்றிய இடத்திலேயே அந்த ஜோதி திரும்பவும் தோன்றிற்று. அந்தப் பெண் ஒரு சிறு கவரையும் இரண்டணுப் பொதிந்த துண்டுக் கடுதாசி யொன்றையும் கீழே எறிந்தாள் பிச்சைக்காரன் அண்ணாந்து மேலே நோக்கினன் மேலே நின்ற பெண்பாவை, அவற்றை உடனே எடுத்துக்கொண்டு ஓடும்படி அவனுக்கு ஜாடை காட்டினள் அவளது முகம் மலர்ந்திருந்தது பற்களிற் புன் சிரிப்பு ஒழுகிற்று அவள் சிரிக்கையிற் கன்னங்கள் இரண்டிலும் சிறு உட்குழிவுகள் உண்டாயின. வட்டமான பச்சை நிறமுள்ள இரண்டுமறுவுகள் அக்குழிவுகள் உண்டாகும் இடத்திலே காணப்பட்டன. பிச்சைக்காரன் அதிசயத்துடன் அவற்றைக் கையிலெடுத்து சுற்று முற்றும் பார்த்தவண்ணம் இடுப்பிற் செருகிக்கொண்டான். நாகரத்தினம் வீட்டுக்குள்ளேயிருந்து வெளியே வந்து 'சனியனே இன்னும் நீ ஒழியவில்லையா? என்று கேட்டாள். பிச்சைக்காரன் ஏதேதோ முணுமுணுத்துக் கொண்டே அவ்விடத்தை விட்டு அகன்றான். நாகரத்தினம் 'பிச்சைச் சோற்றுக்கு வழக்கு வேறேயா?' என்று அதட்டினள்.



## அத்தியாயம் 10

### குடுகுடுப்பைக்காரனும் கொள்ளிவாய்ப் பிசாசும்

ஆறுமுகம் பிள்ளையும் காமாட்சியாச்சியும் லீலாவின் ரகசியங்களைக் குறித்துப் பேசிப் பேசி நேரத்தைக் கழித்தார்கள். இனி நடக்க வேண்டிய காரியங்களைப் பற்றித் திட்டங்கள் போட்டார்கள். விடிய விடிய அவர்கள் பேசியும் அவர்களுடைய பேச்சுக்கள் ஓய்ந்தபாடில்லை. பொழுது புலரும் வேளையில் காமாட்சி வீட்டிற்குள்ளே படுத்துக்கொள்ள ஆறுமுகம் வீட்டின் வெளிப்பக்கத்துத் திண்ணையில் படுத்துத் தூங்கினன் விடிந்து மணி எட்டாகியும் ஒருவரும் எழுந்திருப்பதாகக் காணோம். ஒரு குடுகுடுப்பைக்காரன் உடுக்கை மடமடவென்று அடித்துக்கொண்டே "யோகம், யோகம், வருகுது யோகம், சக்கமாதேவி, பத்திரகாளி துணையிருக்கா, நிச்சயமா இன்னும் நாலே நாளில் பெரிய யோகம், வருகுதுங்கோ ஐயாவுக்கு, பெரிய ஐயாவுக்கு,"... என முழங்கிய வண்ணம் காமாட்சியாச்சி வீட்டு வாயிலுக்கு வந்தான், குடுகுடுப்பைக்காரனது சத்தத்தைக்கேட்டுக் காமாட்சியாச்சி கதவைத் திறந்து வெளியே வந்தாள் அவள் கோடாங்கியை நோக்கி அடே! கோடாங்கி நானொரு சேதி நினைச்சிருக்கேன் அது எப்படி முடியுமென்னு குறி சொல்றையா? உன்னாலே சொல்லமுடியுமா? சரியாச் சொல்லிட்டேன்னு பதினறுமுழச் சேலை ஒன்று முழுசாக் கொடுத்துடறேன் என்ருள்

குடுகுடுப்பைக்காரன்— குடு குடு குடு குடு, சக்கமாதேவி, பத்ரகாளி, மகாதேவதே, பாதேவதே; லோகமாதா, பராசக்தி...எல்லோரும் வாருங்கோ நல்ல குறி துலங்க வேணும் கருணை செய்யுங்கோ அம்மா! வருகுது யோகம் உங்க ஐயாவுக்கு—கண்ணளம்! கண்ணு ஆளம்! தீபலக்ஷ்மி வீரலக்ஷ்மி, தனலக்ஷ்மி, தான்யலக்ஷ்மி, பாக்கியலக்ஷ்மி, ராஜ்ய

லக்ஷ்மி, ராஜலக்ஷ்மி. வாராங்கபாரு ஐயாவைப் பார்த்துச் சிரிக்கிறுங்கோ, உறுதி உறுதி, யோகம் பிறக்குது. நலல காலம் வருகுது, அமிர்தயோகம், சித்தயோகம், ஹடயோகம், சகலயோகம், உண்டாகுது சக்கம்மாதேவி பத்ரகாளியம்மா பரதேவதே குடு குடு குடு குடு—.

குடுகுடுப்பைக்காரனது சத்தத்தைக் கேட்டு ராஜலக்ஷ்மியைப் பற்றிக் கனவு கண்டுகொண்டிருந்த ஆறுமுகம் பிள்ளை சடக்கென விழித்தெழுந்தான் உடனே கோடாங்கியைப் பக்கத்திலே கூப்பிட்டு நிற்க வைத்துக்கொண்டே அடே! என்னடா குறி துலங்குது. எப்போடா காரியம் கைகூடும் உறுதியாய்க் கைகூடுமா? ரொம்பக் காசு பணம் செலவாகுமா? உள்ளதேச் சொல்லுடா? உற்சாகமாய்ச் சொல்லு என்றுன். குடுகுடுப்பைக்காரன் நிரம்ப அலக்ஷியமாக 'சாமீ! எஜமாங்க குடு குடு குடு குடு குடு, சக்கம்மாதேவி, பத்ரகாளி, அஷ்டகாளி, ஹம்சாளி, ஹூம்காளி, ஓம்காளி, பரதேவதே உள்ள குறி சொல்லு சின்னச்சின்ன கஷ்டம். பெரிய கஷ்டமில்லே கைமேலே காரியம் கைகூடுது பாருங்கோ கொஞ்சம் பணம் விரையமாவுது; அதெப்பத்தி ஒண்ணுமில்லேங்கோ கஷ்டமில்லாமே உலகத்திலே சுகமே கிடையாது குடு குடு குடு குடு, மாயாண்டி மருந்தே நெனச்சிருக்கீங்கோ அந்த மருந்து பலிக்காது உறுதியாய் பலிக்காது அது உபயோகமில்லே உங்களுக்கு வேணுமின்னு வேறே மருந்து சொல்றேன். ஆதாயம் உண்டு காரியசித்தி நிச்சயம் குடு குடு குடு குடு என்றுன். ஆறுமுகம் பிள்ளை அதுலே பலிக்காதுண்ணு வேறு மருந்துக்கு எங்கே தேடிப் போகிறதுடா? நீதான் வேறு வழி சொல்லணும் ஊக்கமாச் சாமியே வேண்டிச்சொல்லு. வேண்டியமட்டும் உனக்கு இனும் கொடுக்கிறேன் என்றுன். குடுகுடுப்பைக்காரனும் விடாமல் உடுக்கையடித்துக்கொண்டே குடு குடு குடு குடு மந்திரந்தான் தந்திரம், தந்திரந்தான் மந்திரம் உலகமே மாயாமாலம் உலகத்திலே அநேகவித வசியங்களுண்டு வசியம் வசியம் மஹா வசியம் பரம வசியம் மருந்துபோட்டு

வசப்படுத்தவேணும் சாமி ஆதாயம் உடனே ஆதாயம் கை மேலே ஆதாயம் குடு குடு குடு குடு என்று முழங்கினன் இவைகளைக் கேட்டதும் ஆறுமுகம் பிள்ளைக்கு ராஜலக்ஷமி யின்மேற்கொண்ட மையல் தலைக்கு ஏறிவிட்டது உடனே அவன் குடுகுடுப்பைக்காரனைத் தன் வீட்டுக்குள்ளேயழைத் துச்சென்றான். உன்னிடத்தில் ஏதாவது வசிய மருந்து இருக்குதா? உனக்கு நீ கேட்கிற ரூபாய் உடனே தருகி றேன் கொடு என்றான்.

கோடாங்கி 'அதெல்லாம் என்னிட்டே கேக்காதிங்க சாமீ பிறவு சர்க்காரிலே என்னை பிடிச்சுவொங்க குறிகிறி சொல்வதே இந்த காலத்திலே பெரிய ஆபத்துங்க என்று கூறி மிகவும் பயப்படுவதுபோல நடித்தான் ஆறுமுகம் பிள்ளை அதற்கெல்லாம் நானிருக்கிறேன். நீ கொஞ்சமும் பயப்படவேண்டாம். உனக்கு ஒரு ஆபத்தும் வராது உபா யம் சொல்லத் தெரிந்தவன் உபாயத்தினல் காரியத்தை முடிக்கும் வழியையும் தெரிந்தேயிருப்பான் வசிய மருந்தும் உன்னிடம் நிச்சயமாயிருக்கும். ரூபாயைப் பற்றி யோசிக் காதே? அஞ்சாமல் இத்தனை ரூபாய் வேண்டுமென்றுசொல் மருந்தைக் கொடுத்துவிட்டுப்போ என்று இரக்கமாய்க் கெஞ்சிக்கேட்டான். அதற்கு கோடாங்கி, சின்ன குளிகை தானுங்க இதுக்கு 25-ரூபாயா என்று நீங்க நினைப்பீங்க என்று தான் நான் பயப்படுகிறேன் என்றான். ஆறுமுகம் பிள்ளை சிறிதும் யோசனையின்றி அடே இருபத்தஞ்சுஇல்லே முப்பத்தஞ்சு என்றாலும் இதோ வாங்கிக்கொள் என்று மூன்று பத்து ரூபாய் நோட்டுகளை எடுத்துக்கொடுத்தான் கோடாங்கி அலக்ஷியமாய் அந்த ரூபாய்களை வாங்கி மடியிற் போட்டுக்கொண்டு ஒரு சிறு மாத்திரையைக் கொடுத்தான் ஆறுமுகம் அதை வாங்கி ஒரு கடிதத்தில் பொதிந்து அல மாரியில் வைத்தான். கோடாங்கி இந்தக்குளிகை அகத்திய மாமுனிவர் வாகட வைத்திய மாந்திரீக முறைப்படி செய் யப்பட்டது. இதைப் பெண்ணின் வயிற்றுக்குட் போய்ச் சேரும்படி ஏதோடாவது கலந்து ககாடுத்துவிட்டால்

கொடுத்த 24மணி நேரத்திற்குள், அவளை நீங்கள் நினைத்த இடத்திற்கு வலிய வந்து உங்களுக்கு அடிமையாய் விடுவாள்' என்று சொல்லிவிட்டு வெளியே சென்றான். கோடாங்கி சென்ற பிறகு கிழவியும் குமாரனும் இந்த மாத்திரையை ராஜலக்ஷ்மிக்குக் கொடுப்பதெப்படி? என்பதைப்பற்றி ஆலோசனை செய்தார்கள். இறுதியில், மறுநாள் ராத்திரி 10 மணிக்கு, ராஜலக்ஷ்மி மாடியில் படித்துக்கொண்டிருக்கும் பொழுது அவள் தினப்படி இரவிற் சாப்பிடுகிற பாலைத் தானே சிவகாமியிடம் கேட்டு வாங்கிக்கொண்டுபோய்க் காமாட்சியாச்சியே அந்தப் பாலில் மருந்தைக் கலக்கிக் கொடுத்துவிடவேண்டுமென்றும் தீர்மானமாயிற்று.

இனி, மாணிக்கவாசகன் சென்னையிலிருந்து அழைத்து வந்து கலியாணபுரம் கணக்கப்பிள்ளை பங்களாவில் தங்கி இருக்கும்படி அமர்த்திய கமலாபாயின் விஷயத்தைக் கவனிப்போம். கமலாபாய் தங்கிய பங்களாவிற் பகல் பூராவும் மாணிக்கவாசகம் தங்கியிருப்பது வழக்கமாயிற்று. சுந்தரம் மாணிக்கவாசகத்திற்கு உயிர்த்தோழன். இவனுடைய நாகரீக தடபுடல்களுக்கேற்ற சவுடால் பேர்வழி. மேலும் கூடிய சீக்கிரத்தில் தன் தங்கை இராஜம்மாளுக்குக் கணவனாகப் போகிறவன். இப்படியெல்லாம் இருக்கையில் மாணிக்கமும் சுந்தரமும் எவ்வளவு அன்னியோன்னியமாய் இருப்பார்கள் என்பது சொல்லித் தெரியவேண்டியதில்லை ஆனால் இவர்களிருவரும் தனித்தனியே ஒருவருக்கொருவர் தெரியக்கூடாத வண்ணம் ஒவ்வொரு ரகசியத்தை மறைத்து வைத்திருந்தார்கள். சுந்தரம் லீலாவை 3000 ரூபாய் ஒப்பந்தம் பேசிச் சடங்கு கழித்துப் பின் ஆயுள் பரியந்தம் அவளோடு வாழ்வதென்று தீர்மானித்த விஷயத்தை மாணிக்கத்துக்குத் தெரியாமலிருக்கும்படி மறைத்து வைத்திருந்தான்.

அதுபோலவே டாக்டர் மாணிக்கமும், தான் சென்னையிலிருந்து அழைத்து வந்த அழகான உருப்படியைப்பற்றி

சுந்தரத்துக்குப் பிரஸ்தாபித்தால் முதலுக்கே மோசம் வந்து விடுமென்று அந்த விஷயத்தை மறைத்து வைத்திருந்தான் ஆதலால் இவ்விருவரும் இராத்திரி சிறிது நேரம் மாத்திரம் தினசரி ஒன்று சேர்ந்து சம்பாஷிப்பதும், சீட்டு விளையாடு வதும் குடிப்பதும், ஆடுவதும், பாடுவதுமாய்க் காலங்கழித் தார்கள். கமலாபாய்க்கும் டாக்டருக்கும் முதன் முதல் ஸ்டேஷனில் பழக்கமாகி உதவி செய்த மகம்மதியன் தினந் தோறும் இராத்திரியில் தவறாமல் பங்களாவுக்கு வந்து தங்கு வதும், கமலாபாய் இட்ட சில கட்டளைகளைச் செய்து முடிப்பதும் வழக்கமாயிற்று.

ஒருநாள் இராத்திரி மகம்மதியன். கமலாபாய் வேண்டிக் கொண்டவாறே மாந்திரீகன் மாயாண்டியா பிள்ளையை டாக் டரில்லாத சமயம் பார்த்துப் பங்களாவுக்கு அழைத்துவந் தான். கமலாபாய் மாந்திரிகனைப் பங்களாவுக்குட் போகச் சொல்லிவிட்டு ஸாஹேப! டாக்டர் வாசலில் வந்துவிட்டால் நீர் உடனே நீளமான விஸில் அடித்து என்னை எச்சரித்து டாக்டரைப் பங்களாவைச் சுற்றிப் பின் புறமாக உள்ளே அழைத்துவாரும் அவர் இங்கே வரும் வரை இப்படியே வாயிலில் உட்கார்ந்திரும் என ஹிந்துஸ்தானியிற் சொன் னாள். மகம்மதியன் சரி என்று ஒப்பம் போட்டான் மாயா ண்டியா பிள்ளை பங்களாவுக்குள்ளே போய் ஒரு மணி நேரத்திற்கெல்லாம் டாக்டர் மாணிக்கம் அங்கு வந்து சேர்ந் தான் வாசலில் உட்கார்ந்திருந்த மகம்மதியன் 'ஸலாம். மஹராஜ்? அம்மா தூங்குறுங்சோ எஜமான் நிக்கிறுங்கோ என்று பைத்தியக்காரப்பாட்டு ஒன்றை மாறிமாறிப் பாடி நீண்ட விஸில் அடித்தான். டாக்டர் குலுங்கக் குலுங்க நகைத்துத் தானும் வாயை மடித்து வாயில் விரலை மடக்கி வைத்துச் சீழ்க்கை யடித்தான் பிறகு மாணிக்கம் என்ன ஸாஹேப்! நீர் பெரிய கிறுக்குப் போலிருக்கிறீரே என்றான் மகம்மதியன் அப்படித்தான் மஹராஜ் சில சமயங்களில் எனக்குக் களக்காடு இளகிவிடும் இதோ பாருங்கள் பலே தமாஷ் பலே தமாஷ் எனக் கையை தரையில் ஊன்றி பலே

குட்டிக்கரணம் போட்டான். டாக்டருக்குச் சிறிதும் சந்தேகம் ஏற்படாதபடி 'வாங்க மஹராஜ்! இப்படி வாங்க என அவரை அழைத்துக்கொண்டு பின்புற வாயில் வழியாய்ப் பங்களாவுக்குள் அழைத்துச் சென்றான்.

மாணிக்கம் சிரித்துக்கொண்டே மகம்மதியன் காட்டிய வழியைத் தொடர்ந்து சென்று, பங்களாவிற்குள் நுழைந்தான் இதற்குள் மாயாண்டியா பிள்ளை அங்கிருந்து மாயமாய் மறைந்து நிமிஷங்கள் ஐந்து ஆயின. கமலாபாய் படுக்கையிற் படுத்தபடியே 'மை டியர் கன்' என்று வாய் புலம்புபவள் போலப் பாசாங்கு செய்து உருண்டு புரண்டு கொண்டிருந்தாள். மகம்மதியன் டாக்டரை நோக்கிப் 'போயிட்டு வரட்டுங்களா' எனச் சொல்லிச் சலாம் போட்டான். மாணிக்கம் சிரித்தவாறே தலையை அசைத்துவிட்டு உள்ளே சென்றான். கமலாபாய் நன்றாய்த் தூங்குபவள் போலக் குறட்டையிட்டாள். மாணிக்கம் அவளது காலடியில் உட்கார்ந்து கால் வருடினான். தூக்கத்திலும் தன்னையே தியானஞ் செய்யும் கமலாபாயின் உண்மைக் காதற் பெருக்கத்தையுணர்ந்து எண்ணியெண்ணி அவனது மனம் உருகி ஆறாய் ஓடிற்று. தூங்குபவள் போல விழித்திருக்கும் மங்கையை; மாணிக்கம் தன் மடியிலே வாரிப்போட்டு அவளுடைய கருணைப் பார்வையைத் தன்மீது செலுத்தச் செய்வதற்குள் நாழிகை இரண்டும் கழிந்தது மூன்றும் ஆயிற்று அப்பால் நாகரீகக் காதலிருவரும் வேண்டிய மட்டில் சீமைப் பானங்களை உள்ளே தள்ளிச் சீட்டாட்டம் ஆடிப் பாட்டுக்கள் பாடிக் கூட்டங்கள் கூடி முடிவதற்குள் கோழிகள் கூவி விட்டன. அதற்குப் பிறகு டாக்டர் காதலியால் பிரியா விடை பெற்றுச் சென்று சுந்தரம் வீட்டையடைந்து அங்கே ஆளோடு ஆளாய் ஒன்றுமறியாதவன் போற்படுத்து தூங்கினான்.

மறுநாள் இரவும் மகம்மதியன் பங்களாவுக்குப்போய்ச் சேர்ந்தான். 'மாயாண்டியா பிள்ளையிடம் சென்று தான் கூறியுள்ள காரியம் என்ன விதத்திலிருக்கிறது' என அவ

ரிடம் கேட்டுத் தெரிந்து வருமாறு கமலாபாய், மகம்மதி யனை மாந்திரவாதி வீட்டுக்கு அனுப்பினாள். மகம்மதியன் மந்திரவாதி வீடுபோய்ச் சேர்ந்தான். மாந்திரவாதி ஸாயுபூ அம்மா அவர்கள் கட்டளைப்படியே காரியங்களை முடித்துக் கொண்டிருக்கிறேன் நாளை ராத்திரி காரியம் முற்றிலும் கைக்கு வந்துவிடும் அப்புறம் அவர்கள் பாடு ஜயம் தான் சரி நீர மஹா யோக்கியர், நமக்கு நீர் ஓர் உதவி செய்ய வேண்டியிருக்கிறது. அதுவும் அம்மா அவர்களது காரிய சம்பந்தமாகத்தான் அதாவது மாந்திரீகத்தில் அபூர்வமான ஒரு விஷயம் இன்றைக்குக் காட்டுப்பட்டி மயானத்திற்குச் சென்று சில பூஜைகள் போட்டுப் பச்சிலைகள் கொஞ்சம் பிடுங்கி வரவேண்டியிருக்கிறது. அவைகள் வந்த பிறகு தான் அம்மா அவர்கள் விஷயத்திற்குப் பாக்கிக் காரியங்கள் நடைபெறவேண்டும் துணைக்கு என் கூடவர ஆள் ஒன்று வேண்டியதிருக்கிறது. அதற்காக, அம்மா அவர்களிடம் நேற்றே தெரிவித்தேன் அவர்களும்' நீர்தான் சரியான ஆசாமி தனக்கும் பெரிய அந்தரங்கமுள்ளவர் உம்மையே அழைத்துச் செல்லலாம்' என்று நேற்றே உத்திரவு கொடுத் தார்கள். அதற்காகத்தான் இப்பொழுதும் உம்மை இங்கே அனுப்பியிருக்கிறார்கள். நீர்தான் நவாப் ஆயிற்றே உமக்குச் சுடுகாட்டைப் பற்றிய பயமே இருக்காது, அப்படி இருந் தாலும் உலகத்திலேயுள்ள பேய் பிசாசுகளை யெல்லாம் ராஜய பரிபாலனம் பண்ணுகிற நானிருக்கும்பொழுது உமக் குப் பயமென்ன? கூட வருகிறீரா என்று கூறினான்.

மாயாண்டியா பிள்ளை கூறியவற்றை யெல்லாம் கேட் டிருந்த மகம்மதியன், 'ஐயா! அப்படியே செய்வோம் எனக் குப் பேய், பிசாசு, பூதம்; கறுப்பன், சங்கிலி, பாவாடை, சுடலை என்ற பயமே கிடையாது எந்த அர்த்த ராத்திரியி லும் எவ்விடத்தில் வேண்டுமானாலும் நான் பயமில்லாமற் சுற்றுவேன். அம்மா அவாகள் காரியம் என்று சொல்லும் பொழுது நான் குறுக்கே தடுத்துப் பேச முடியுமா? என்ன வேண்டுமானாலும் செய்யக் காத்திருக்கிறேன். மலையைக்

கூடப்பிடுங்கித் தலைகீழாய் நாட்டுகிறேன். ஆனால் இரண்டு நாட்களுக்கு முன் இவ்வூருக்குப் புதிதாய் வந்துள்ள இந்த அம்மாவுக்கு அப்படிப் பிரமாதமான காரியம் என்னவென்று தான் எனக்கு விளங்க வில்லை என்று அழுத்தந் திருத்தமாகச் சுத்தத் தமிழிற் பேசி முடித்தான். அதற்கு மாந்திரவாதி, அதெல்லாம் பெரிய இடத்துப் பெண்டுகள் விஷயம் உனக்கு அதைப்பற்றிக் கவலை என்ன? எச்சிலையை எடுக்கும் வேலையாளுக்கு எத்தனை பேர் சாப்பிட்டார்கள் என்று கணக்குப் பார்க்கவேண்டிய அவசியமென்ன? ஒன்றும் பேசாமற் கூடவா 'அப்பாவி' மாதிரி சொன்ன வேலையைச் செய்துகொண்டு ஒரு புறத்தில் உட்கார்ந்திரு அம்மா அவர்களிடம் சொல்லி உனக்குச் சுமையான பணம் வாங்கி தந்து விடுகிறேன், என்று சொல்லி பெரியதொரு ஊளங் காரஞ் செய்து, கொட்டாவி விட்டான்.

அவனது பயங்கரமான தொனியைக் கேட்டு மகம்மதியனுக்குஞ் சிறிது புல்லரித்துப் போயிற்று அப்பால் அவர்களிருவரும் தாமிரபரணியாற்றைக் கடந்து குறுக்குப்பாதையாய் மூன்றுமைல் நடந்து சரியாய் மணி 12க்குக் காட்டுப்பட்டி மயானக்கரை போய்ச் சேர்ந்தார்கள். அம்மயானம் காட்டுப்பட்டி ஊருக்குள்ளேயிருந்து சுமார் அரைமைல் தூரத்திற் கிழக்குத் திசையில் உள்ளது. ஆற்றின் மேல் கரையில் அகன்ற விசாலமான ஒரு மேட்டுப் பாங்கில் அது அமைந்திருந்தது. ஜாம்பவான் போலப் பல நூற்றாண்டுகள் கண்ட ஆலமரங்கள் பத்துப் பதினைந்து இம்மயானத்திற்குச் சிறந்த அழகை யளித்து விளங்கின காட்டுப்பட்டியைச் சேர்ந்த கீழூராகிய பள்ளர் பறைச் சேரிகள் ஆற்றுக்கு அக்கரையில் மயானத்திற்கு தென்கிழக்காக அமைந்திருந்தன. அவைகளுக்குச் செல்லும் பாதை மயானத்தை யடுத்துச் செல்கிறது. அந்தப் பாதையில் பகற் காலத்திலேயே பேய் பிசாசு நம்பிக்கையுள்ளவர்களுக்குப் பெரிய அச்சத்தை யுண்டுபண்ணும். அப்படி யிருக்க இராத்திரி நேரத்தில் அங்கு வருவதென்றால் வைர

மனதுள்ளவர்களும் நடுநடுங்கிப் போவார்கள் என்பதற்கு ஐயமுண்டோ!

அன்று மாலையில் தான், மறு நாள் நடக்கப் போகிற சேர்மன் தேர்தலுக்காகப் பறையர்சேரி மெம்பரது வோட்டைப் பார்வதிநாத பிள்ளைக்கு அளிக்க வேண்டுமென்பதாக ஒப்பந்தம் பேசி ஆயிரம் ரூபாயைக் கொண்டு போய்க் கொடுத்துவிட்டுப் பார்வதிநாத பிள்ளை தம்பியும் மாயாண்டியா பிள்ளையும் வந்திருக்கிறார்கள். தேவரது கட்சிக்கும் அந்த வோட்டை அவசியமாகச் சம்பாதிக்க வேண்டியதாய் இருக்கிறது. அந்த வோட்டு கிடைத்தால் தான் போத்திலிங்கத் தேவர் எடுத்த கட்சி நிறைவேறும். ஆனால் அவரிடம் மூடிச்சு அவிழ்ப்பதற்குப் பணமும் கிடையாது மனமும் கிடையாது என்றாலும் தன் அரிவாள் முனையிலே காரியத்தைச் சாதித்து விடலாமென்பது அவருடைய பூரணமான நம்பிக்கை அப்படி நிற்க.

மயானக் கரையை யடைந்த மாந்திரவாதியும் மகம்மதியனும் ஆற்றிலே முழுகினார்கள் மாந்திரீகன், மேலெல்லாம் சாம்பலைக் குழைத்துப் பட்டை போட்டான். மயானத்திற் போய் மண்டலம் போட்டு உட்கார்ந்தான் அவன் பக்கத்தில் இரண்டு புதுப்பானைகள் கிடந்தன. அந்தப் பானைகள் தேவேந்திரன் உடம்பு போல ஆயிரம் கண்கள் பெற்றிருந்தன மாந்திரீகன் சிறிய மண்ணெண்ணெய் விளக்கு ஒன்றைக் கொளுத்தி அதனை அங்கொரு சிறு கல் தூணில் உட்குடைவாகத் தோண்டியிருந்தகுழியிலே வைத்தான். பிறகு அவன் தரையிலே மண்ணைக் குவித்து வட்டமாகச் செய்து மகம்மதியனை ஆற்றிலிருந்து தண்ணீர் கொண்டு வரச்சொல்லி அந்தத் தண்ணீரை ஊற்றி மண்ணை இறுகச் செய்து அதனை ஒரு சிறு மேடை போல ஆக்கினான். பின் சிறு காகிதங்களில் மடித்துக் கொணர்ந்திருந்த மாப்பொடி, மஞ்சள்பொடி, மரப்பொடி, கரிப்பொடி, செங்கல்பொடி சுண்ணாம்புபொடி முதலிய பல நிறப்பொடிகளை அந்த மண் மேடையில் ஒன்றின்மேல் ஒன்றாய்த் தூவிப் பலவித

கோலங்களைக் குறுக்கும் நெடுக்குமாக அவன் இழுத்தான். சில சிறு கலசங்களில் தண்ணீரை நிரப்பி அவற்றில் நூல் களைச் சுற்றி மாங்குழைகளையும் செருகி வரிசையாக வைத்தான். அப்புறம் கால்களை மடக்கி ஒரு மணி நேரம் நிமிர்ந்து உட்கார்ந்திருந்தான் ஏதேதோ ஜெபஞ் செய்வதாகப் பாவனை காட்டினான். பிறகு மகம்மதியனை அருகில் அழைத்து உட்காரச் செய்து அவனுக்கு உபதேசிக்கிறான்.

ஸாஹேப்! நம்முடைய காரியம் இனிமேல் ஜயம். உனக்கு இப்பொழுது சிலரகசியங்கள் சொல்லப்போகிறேன் நீ பயப்படாமலிருக்க வேண்டுமென்பதற்காகவே உன்னிடம் உண்மையைச் சொல்லுகிறேன். மயானங்களுக்குக் காவல் தெய்வம் சுடலைமாடன். அவனுக்கு மனைவிமார் இருவர். ஒருத்தி இசக்கியம்மன். மற்றொருத்தி வனப்பேய்ச்சி இசக்கி, பேய்ச்சி ஆகிய இருவருக்கும் குடியிருப்பு மலை அவ்விருவரும் இராக்காலங்களில் மலையிலிருந்திறங்கி சுடலை மாடனைத்தேடி மசானத்துக்கு வருவது வழக்கம். அவர்கள் வரும் நேரத்தை யறிந்து நாம் முன்கூட்டியே இங்கு வந்து மந்திரத்தை ஜெபித்து சுடலை மாடனைக் கட்டி இக் கலசங்களில் அடைத்து வைத்துவிட்டால் அவர்களிருவரும் தங்கள் கணவனைத் தேடி மிகுந்த உக்கிராவேசத்துடன் ஆர்பாட்டஞ் செய்து இந்த மசானமுழுதும் அலைவார்கள். அவர்கள் அப்படித் திரிவது சாதாரண மனிதர் கண்ணுக்குத் தெரியாது. மாந்திரவாதிகள் கண்ணுக்குத் துலம்பரமாய்த் தெரியும். இது தெரியாத மனிதர்கள் அந்நேரத்தில் இங்குவந்து அகப்பட்டுக்கொண்டால் இந்த இரண்டு பெண் பேய்களும் அவர்களது எலும்பை முறித்துச் சதையைத் தின்று இரத்தத்தைக்குடித்துக் குடலையை மாலையாக அணிந்துகொள்ளும். ஆகையால் அவைகளுடைய குணத்தையறிந்து நாம் சாவதானமாக அவைகளுக்குப் பூஜை போடவேண்டும். ஆயிரம் கால் தீபத்தை ஏற்றித் தீபாராதனை செய்யவேண்டும். இப்படியாக அவைகளுடைய கோபத்தை நாம் தணித்துவிட்டால் அவைகள் கோபமாறி

நாம் சுடலைமாடனைத் தேடியலைவதைவிட அவரே நம்மைத் தேடி வரட்டுமே! என இறுமாப்புடன் ஒருபக்கத்தில் உட்கார்ந்துவிடும்.

அப்பொழுது நாம் அவைகளுக்கு அருகிற் சென்று வணங்கினால் நம்முடைய காரியம் வெற்றியடையும். உங்கள் கணவனை நான் மந்திரத்தினாற் கட்டிவிட்டேன் என் கோரிக்கையை நீங்கள் நிறைவேற்றினால் உங்களிஷ்டப்படி அவரை அவிழ்த்து விடுவேன், என்று நாம் அவைகளிடம் சொல்லிப் பின் வாங்காமல் அவைகளோடு வாதம் பண்ணினால் நம்முடைய காரியத்தை அவை உறுதியாய் முடித்துக் கொடுத்துவிடும். நாம் குறிப்பிடும் பெண் எந்த மேல் மாடியிற் படுத்திருந்தாலும் நாம் நினைத்த இடத்திற்கு அவைகள் சென்று அவளை உடனே அழைத்துவந்து விடும், என்றான் மாந்திரவாதி.

பிறகு அவன் இரண்டு பந்தங்களில் நிரம்ப எண்ணெயை ஊற்றிக் கொளுத்தினான். மகம்மதியன் கையிலே ஒரு ஓட்டைப் பானையையும் தன் கையில் ஒரு ஓட்டைப் பானையையும் வைத்துக்கொண்டான். பின் அவ்விருவரும் தீப் பந்தங்களை அந்தப் பானைகளின் உட்புறமாகப் பிடித்தனர். எத்தனையோ தீபங்கள் ஏற்றி வைத்தாற்போலப் பிரகாசம் தெரிந்தது.

இருவரும் அவ்வாறே பானைகளைக் கையிலேந்தி அவற்றின் உள்ளே பந்தங்களையும் ஏற்றி வைத்துக்கொண்டு மயானக்கரை முழுதும் சுற்றினார்கள் ஆற்றங்கரை முழுதும் அங்குமிங்கும் அலைந்தார்கள். பிறகு மகம்மதியனைக்கொண்டு சில ஆலமரங்களின் மீதும் ஏறிநின்று ஆயிரங்கால் தீபாராதனை நடைபெற்றது. இப்படி ஒரு மணி நேரம் தீபாராதனை நடைபெற்ற பிறகு மாந்திரவாதி மகம்மதியனைப் பார்த்து ஸாஹிப் நீர் மௌனமாகச் சென்று அதோ தெரிகிற ஆலமரத்தினடியில் முளைத்திருக்கும் சில அபூர்வமான பச்சிலைகளைக் கையினால் தடவிப் பிடுங்கிக்கொண்டு வாரும்

அவைகளை வைத்துத்தான் ஷடி காரியங்கள் நடைபெற வேண்டும் என்றான். மகம்மதியன் அப்படியே போய்ச் சில செடிகளைப் பிடுங்கிக் கொணர்ந்தான் மாந்திரவாதி அவற்றை ஒரு துணியிலே முடிந்து பத்திரப்படுத்தினான். பிறகு கண்ணை மூடிச் சிறிது நேரம் தியானித்தபடி உட்கார்ந்திருந்தான்.

அதற்கப்பால் மாந்திரவாதி மகம்மதியனை யழைத்துக் கொண்டு காட்டுப் பட்டிக் கிராமத்துக்குள் நுழைந்தான் காட்டுப்பட்டியில் அகலமான தேரோடும் வீதிகள் உண்டு. அவற்றில் கீழரதவீதியில், ரதம் நிற்கும் இடத்திற்கருகில் சந்துக்குள்ளே இருக்கிறது போத்திலிங்கத் தேவர் வீடு கொஞ்ச தூரத்தில் ஒரு சிறு பாலம் இருக்கிறது மாயாண்டியும் மகம்மதியனும் அந்த இடத்தைக் கடந்தே செல்ல வேண்டியிருந்தது. ஆனால் பாலத்தில் யாரோ இருவர் இந்நேரத்தில் பேசிக்கொண்டிருப்பதைக்கண்டு சற்றுத் தூரத்திலேயே அவர்கள் நின்றுவிட்டார்கள் பேசிக்கொண்டிருப்பவர்களில் ஒருவன் ஆற்றுக்குப் பக்கத்திலே வரை போயும் அக்கரைக்குப் போக முடியாமலாய்விட்டதே தேவரு என்ன சொல்வாரோ தெரியல்லே நம்ம கையில் அரிவாள் தடியெல்லாம் இருந்தும் பிரயோஜனம் என்ன? என்றான் அதற்கு மற்றவன் ஆமாம் அண்ணே! கொள்ளிப் பிசாசு தான் குதித்துக் குதித்து ஆற்றங்கரை முழுதும் ஆடிக்கிண்டிருந்திச்சே தேவரு பேச்சைக் கேட்டு, பிசாசின் கையிலே அறைபட்டுச் சாகணும். நல்லாருக்கு நீ சொல்றது. தேவர் சொல்றதுதான் பொருத்தமாயிருக்கா? எப்படியாவது தனக்குச் சேர்மன் பதவிக்கு வோட்டும் போடச் சம்மதிக்க வைக்கணும் பறைச்சேரி மெம்பரை இல்லெண்ணாக்கி, அந்தப் பயலே ஒரே வெட்டா வெட்டணு மெங்கிறா. சரி இவ்வளவு துணிச்சல் எப்படித்தான் இவருக்கு இந்த வெள்ளக்காரன் ராஜ்யத்தில் ஏற்பட்டதோ தெரியவில்லை எல்லாத் துணிச்சலும் தம்பி சிவகங்கு தேவனை வைத்து அவனை எப்படியாவது பிடிச்சுத்தாரேண்ணு

போலீசாரை ஏய்க்கிறான் இந்த விஷயம் சிவகங்குக்குத் தெரிந்தாலோ இவரு தலையை ராமபாணம் போல கொண்டு போயிடுவான். தினந்தோறும் அவன் இங்கு வாராமலிருக்க வா செய்கிறான். ஆனாலும் துணிஞ்சு பிடிச்சுக் கொடுக்கவும் பயமாயிருக்கு தேவருக்கு. சரி போலீசுக்காரனும் இவரு பேச்சை நம்பித் தலையாட்டிக்கொண்டிருக்கிறான். என்னை க்கு வந்து எல்லாத்தையும் ஒரே அமுக்காய் அமுக்கிப் பிடிச்சுச் செயிலுக்குக் கொண்டு போறானோ தெரியலே' என்றான். அதற்கு முதல் மனிதன் 'இப்போ தேவரு கிட்டப் போய் நாம் என்னெத்தெச் சொல்லித் தப்புறது, என்றான். அதைக் கேட்டு மற்றவன் 'பேய் பிசாசு என்னுத் தேவரு நம்பமாட்டாரு. வெள்ளாளன் வெள்ளா ளன் தான். எப்படியோ சாயங்காலமே போயி ஆயிரம் ரூபாயை எறிந்து சம்மதிக்கச் செய்திட்டு வந்திருக்கான் இது விஷயம் தேவருக்கு பதினொரு மணிக்கு மேலேதான் தெரிஞ்சுருக்கு இப்பொழுது நாம் போய் எப்படிச் சொன் னாலும் நம்பமாட்டாரு அவருக்கு இப்பொழுது சேர்மன் பதவிதான் குறி. ஆகையால் அப்படலே சரிப்படுத்திவிட் டோம் உயிருக்குப் பயந்து அவன் ஒப்புக்கொண்டான் என்று ஒரு பொய் சொல்லவேண்டியதுதான் அண்ணே! என்று பேசிக்கொண்டே தூரத்தில் இருவர் வருவதை கவனித்து அடேய் நில்லுங்கடா யாருடா அது! என்று அதட்டினார்கள், மாந்திரவாதியின் உடம்பு சில்லென்று குளிர்ந்தது. வியர்வை அருவியாய் ஒழுகிற்று கிடுகிடுவென்று நடுங்கித் தேர் முட்டிக்குள் ஒளிந்து கொண்டான். மகம் மதியன் மாத்திரம் சிறிதும் பயப்படாமல் விறைப்பாய் நின் றான். என்னண்ணே தெரியலியா உங்களுக்கு எனக்கு மேலப்பாளய மில்லையா மானுபர நல்லூர் மருதலிங்கத் தேவரு வீட்டிலே தான் இருக்கேன் அவருதான் இப்போ இந்தப் பாதையிலே அனுப்பினாரு அவரு மகளெத்தானே சிவகங்கு மச்சானுக்கு கேட்டிருக்காங் கோ நீங்கே ாரு இந்த ஊ ரு அண்ணமாருகளா

ஆளுக் கிளுப் பார்த்து அதட்டாண்டாமா? ரவ்வோட ரா வாப் பாவநாசத்துக்குப் போயி சிவகங்கு மச்சானிட்ட ஒரு சேதி சொல்லிட்டு வரணுமின்னு என்னெ அனுப்பிச் சாரு. கூடத் துணைக்கு இந்தப் பயங்கொள்ளி மட்டையை அனுப்பிச்சாரு அது உங்கள் அதாடியில் பதுங்கிக்கிட்டுது அவரும் நமக்குச் சொந்தந்தான், நான் சாயுபுப் பிள்ளெ என்னாலும் என்னெப்பத்தித்தான் நீங்க கேள்விப்பட்டிருப் பீங்களே நானு எப்போதும் நம்ம அண்ணமாரு கூடத்தான் பழக்கம்.. போத்திலிங்க மாமன் ஊரிலே யிருக்காரா? அவ ரேக்கூட வரும்போது பாத்துச்கிடலாமின்னு அவசரமாப் போறேனுங்க என மடமடவென்று பேசினான்.

அசந்து நின்ற இருவரும் மகம்மதியனுக்கருகில் வந்து ஓஹோ டில்லிப் பாக்ஷாவா? நல்லாருக்கே உங்களெ நாங்க இதுவரை கேள்விப்பட்டிருக்கோமே தவிர நேரிலெ பாத்த தில்லே ரொம்ப சூரர் என்று கேள்விப் பட்டிருக்கோமே குழந்தே குட்டிகளெல்லாம் க்ஷேமமா? என க்ஷேமம் விசா ரிக்கத் தொடங்கிவிட்டனர். இதற்குள் மாயாண்டி மாந்திர வாதி, மேலே போட்டிருந்த சாப்பற் குறிகளை யெல்லாம் அழித்துத் தலையில் முக்காடு போட்டுக்கொண்டு முன்னே வந்து நின்றான். அப்பொழுது உள்ளூர் அண்ணன்மார் களில் ஒருவன், அம்மாந்திரீகனை முதுகில் தட்டிக்கொடுத்து 'என்னண்ணே! இப்படி வாரும் பைத்தியக்காரப் பிள்ளையா இருக்கிறே. மறப்பிள்ளை மாதிரித் தோணலையே பாத்தியாச் சாயபு எவ்வளவு வீரமா நிண்ணு விசயங்களைச் சொல்லிட்டு நிக்காரு. நீரு மறச் சாதியாயிருந்தும் இப்படிப் பயப்படுறே பயப்படாதேண்ணே! என்று கூறினான் பிறகு அவ்விரு வரும், உங்களுக்கு நேரமாவுது நீங்க போங்க நாங்க தேவ ருகிட்டே சொல்லிக்கிடுறோம் என்று சொல்லிப் போய் விட்டார்கள்.

மாந்திரவாதி நல்ல வேளையாய்ச் சாயபுவின் துணை கிடைத்தது என்று அவன் முதுகிலே தட்டிக் கொடுத்துப் பார்வதிநாத பிள்ளை வீடு போய்ச் சேர்ந்தான். பார்வதிநாத

பிள்ளையை எழுப்பி, அவன் அவரோடு ஏதோ குசு குசு வென்று காதைக் கடித்துவிட்டுப் பிறகு இருவரும் பங்களா விற்குள்ளே போய்ப் படுத்துக்கொண்டார்கள் மகம்மதியன் பங்களாவின் வெளித் திண்ணையில் படுத்திருந்தான் மாயாண் டியா பிள்ளை தன் மாந்திரீக பலத்தினால் கொள்ளிப்பிசாசை எழுப்பிவிட்டு 9வது வார்டு பறையர் சேரிக்குப் போய்க் கொண்டிருந்த இரண்டு மறவரைப் பயமுறுத்தி விரட்டிய சங்கதியைப் பிரமாதப்படுத்திக் கூறி நீளமாகக் கயிறு திரித்தான்

மறுநாள் இராத்திரி, தன் வீட்டுக்குப் பார்வதிநாத பிள்ளை வசமுள்ள மறவரில் நால்வரை அனுப்பும்படி மா யாண்டி, பிள்ளையவர்களிடம் தெரிவித்தான். பார்வதிநாத பிள்ளை தான் நாளைக்கு சேர்மனாகப்போகிற உற்சாகத்தில்' இது ஒரு பெரிய காரியமா? 4 அல்ல 40 ஆனாலும் ஒரே நொடியில் அனுப்பிவைக்கிறேன். 10,000 செலவழித்து எங்கே வீண் போய்விடுமோ என்று கவலைப் பட்டுக்கொண் டிருந்தேன் இன்று 11 மணி சுமாருக்குப் பறைச்சேரிக்குத் தேவர் ஆள் அனுப்பி, அந்த மெம்பரைக் கட்டி இழுத்து வரப்போகிறார் என்று கேள்விப்பட்டேன் அது முதல் என் உயிர் என் கையிலில்லை. கடைசியில் தங்களாலல்லவா சேர் மன் பதவி எனக்குக் கிட்டவேண்டியதிருக்கிறது. தாங்கள் இந்நேரத்தில் இந்தத் தந்திரம் செய்யாவிட்டால் இதற்குள் அந்தப் பறைச்சேரி மெம்பாது முதுகுத்தோல் உரிபட்டுப் போயிருக்கும். நாளைக்கு அவன் தேவருக்கே வோட்டுப் போட்டு விடுவான். நம்முடைய ஆயிரமும் தெருவிலே போயிருக்கும் தங்களுடைய புத்தியே புத்தி. என்று மாந்தி ரீகனைப் புகழ்ந்து கொண்டாடினார் அதற்கு மாயாண்டி அப்படி யெல்லாமில்லை சேர்மன்வாள்! உங்கள் கிருபையை வைத்து நடக்கக்கூடிய விஷயந்தானே என்றான். பிள்ளையவர் கள் 'அதற்குள்ளேயே சேர்மன் பட்டம்? நாளை மத்தியானம் பார்ப்போம் என்றார். இப்படியாக இருவரும் பேசி இரவை கழித்தார்கள்.

மகம்மதியன், நாளை இப்படிப்பாவி நாலு மறவரை வைத்துக்கொண்டு என்ன செய்யப் போகிறான்? என யோசித்தவாறே சம்பாஷணையைக் கேட்ட வண்ணம் படுத்திருந்தான். பொழுது விடிய இரண்டு நாழிகை யளவில் மாந்திரவாதி மகம்மதியனை அழைத்துக்கொண்டு ஊர் போய்ச் சேர்ந்தான் மாந்திரவாதி வீட்டுக்கு வந்ததும் 'ஸாஹேப்! உமக்கு ஏதேனும் படிப்புக் கிடிப்புத் தெரியுமா?' என்று கேட்டான் மகம்மதியன், 'இல்லேங்க ஐயா, கிறல் பேர்வழி. ஹிந்துஸ்தானியிற் கொஞ்சம் எழுதப் படிக்கத் தெரியும் நானிருப்பது பாம்பே பக்கம் ஒரு அலுவல் நிமித்தம் இந்த வூருக்கு வந்து நாலஞ்சி மாசமாச்சுங்க' என்றான். மாந்திரவாதி ஆச்சரியமடைந்து பலே சாயபு, படே சாயபு! படிப்பு ஒண்ணு இருந்துட்டா நீ ஊரெ வச்சுப் பார்க்கமாட்டாய் என்றான் அதற்கு மகம்மதியன் என்ன வோய்யா! கேலி பண்ணுதீங்க. அம்மாவுக்கு ஏதாவது சமாச்சாரம் உண்டானாச் சொல்லுங்க எனக்கு நேரமாவுது போகணும், என்றான். பிறகு மாந்திரீகன், சிறு துண்டுக் கடிதம் ஒன்றில் ஏதோ எழுதிக் கமலாபாயிடம் கொடுத்து விடும்படி கூறியனுப்பினான். மகம்மதியன் தலைமறவான ஓரிடத்தில் போய் அதைப் படித்துப் பார்த்தான்.

"காட்டுப்பட்டிக்கு மனமோசனை 5000 ரூபாயுடன் அனுப்பவும் உருப்படியுடன் செல்லவும்"—"பாக்கியலக்ஷ்மி" வீடு என்று விசாரிக்கவும்....*....*

என அக்கடிதத்தில் எழுதியிருந்தது.

கடிதம், கமலாபாயிடம் போய்ச் சேர்ந்தது மகம்மதியன், கமலாபாயுடன் வேற்று மனிதன் 'பம்பாய் ஸேட்' போன்ற உடைகள் தரித்துப் பேசிக்கொண்டிருக்கக் கண்டான்....



# அத்தியாயம் 11

## காதலரைக் காணுமல் தவிக்கும் மங்கையரிருவர்

கதா நாயகியாகிய இராஜலக்ஷ்மியம்மாள் தனது உள்ளத்தைக் கொள்ளை கொண்டு அள்ளியுண்ணும் கள்ளனுகிய காதலன் கனகசபாபதியையும், அவனது அன்பையும், அவனுடன் அளவளாவி யிருப்பதில் தனக்கு ஏற்படும் இன்பத்தையும் அவனைக் காணுது அவள் தற்பொழுது அடையும் துன்பத்தையும், யாவற்றையும் சிறிதும் பொருட்படுத்தாமல் அவன் அயலூர் சென்றதையும், அவனுக்குத் தான் கண்டிப்பாய்க் கடிதத்தில் தெரிவித்தபடி நாட்கள் கடந்தும் யாதொரு பதிலும் காணுததையும், அவள் எண்ணியெண்ணி நெருப்பிலிட்ட வெண்ணெய் போல உறுகினுள். ஒருவருக்கொருவர் சிறிதும் பொருத்தமில்லாத பெண்ணையும் ஆணையும் மாடுகளை ஏறிற் பூட்டுவது போலக் கட்டாயப் படுத்தி இல்லறத்தில் மாட்டிவைக்கும் பெற்ருேரது மூடச்செய்கையை நினைக்க நினைக்க அவளுக்கு வருத்தம் கடல் போலப் பெருகிற்று. இளமை முதற் பழகித் தனக்கு முன்பு எந்நேரமும் அன்புருவாய் நின்று காட்சியளிக்கும் காதலனைக் கூட்டுவிக்கும்படி தெய்வத்தைச் சிந்தித்தாள். "என்றினிக் காண்பேன் எந்தன் சாமியை" என்றேக்கங்கொண்டு அவள் படுக்கையிற் சாய்ந்தாள். தமையனுகிய டாக்டர் மாணிக்கமோ, அவள் கருத்துக்கு இசைவதாகத் தோற்றவில்லை அன்றிராத்திரி அதாவது மறுநாள் விடிய 4-மணி வண்டிக்கு கொழும்பிலிருந்து தூத்துக்குடி மார்க்கமாய் வந்து சேரும் தகப்பனுரோ, தமது அருமைப் புதல்வன் பேச்சையே முக்கியமாகக் கேட்பவர். மேலும் தம் இளைய மனைவியின் மீது கரை கடந்த காதல் அவருக்குண்டு. ஆதலால் அவரும் தம் ஆசை மனைவியின் தம்பிக்கே அருமை மகளை மணஞ்செய்விப்பதற்கு ஒப்பம் போடுவாரென்பதில் ஆட்சேஷபனையில்லை. கணக்கன் ஆறுமுகம பிள்ளை எவ்விதத்திலும் சமயம் பார்த்து ராஜலக்ஷ்மியின் கற்பைக் கவர

எண்ணியிருக்கிறான். அவனுடைய கருத்துக்கு இசைந்து அவன் தாயார் காமாட்சியாச்சி என்னென்ன வேலைகள் செய்ய எண்ணியிருக்கிறாளோ? தெரியவில்லை அவள் இரண்டு நாட்களாக ராஜலக்ஷ்மியின்மீது அத்தியந்தப் பிரியம் உள்ள வளைப்போல நடித்து வருகிறாள். ராஜம்மாள் மேடையில் படித்துக் கொண்டிருந்தால் 7 மணிக்கு முன்பே சாப்பிடும் படி அழைத்துச் செல்கிறாள். 9-மணிக்கே பாலைக் கொண்டு வந்து வைத்துச் சாப்பிடச் சொல்கிறாள். வேளாவேளையில் தூங்கவேண்டும். இராத்திரி மிகுந்த நேரம் கண்விழிக்கக் கூடாது என்று ராஜம்மாளுக்கு அவள் புத்திமதி கூறுகிறாள் இவள் எதற்காக இப்படிக் குழையடிக்கிறாள். என்பது ராஜ லக்ஷமிக்குத் தெரியவில்லை. ஒரு வேளை தன் மகனுக்கு அவளைக் கலியாணஞ் செய்விக்கும் யோசனையா யிருக்கலாம் என்று அவள் புத்தியிற்படவில்லை. ஆனாலும் காமாட்சி யாச்சி இரண்டு நாட்களுக்கு முன்னே ராஜலக்ஷ்மியிடம், குருவி குளம் ஜமீன்தார் மகனைப் பற்றிப் பிரஸ்தாபித்திருக் கிறாள். ஜமீன்தாரே அவளது தந்தை கொழும்பிலிருந்து வந்ததும் நேரில் வந்து பெண் கேட்கப் போவதாகவும் அவளிடம் தெரிவித்துள்ளாள் ஆகையால் ஜமீன்தாரிடம் ஆயிரக் கணக்கில் கைக்கூலி வாங்கிக்கொண்டு காமாட்சி யாச்சி அவர் மகனுக்குத் தன்னை கலியாணஞ் செய்விக்கப் பார்ப்பாள் என்று அவள் புத்தியிற் பட்டது ஆறுமுகம் பிள்ளைக்கும் காமாட்சிக்கும் அவ்வளவு உண்மையான பிடித் தம் கிடையாதென்பதும். அவன் அவளுக்குப் பிறந்த மகன் இல்லையென்பதும் ராஜலக்ஷ்மிக்குத் தெரியும். 'துரியோத னன் வீட்டிற்கு சகுனி வந்தாற்போல் காமாட்சி வீட்டில் வளரும் ஆறுமுகம், பெரிய குடிகாரன், மூர்க்கன் துர்த்தன் அவன் மூகத்தில் விழித்தாலும் குடிக்கத் தண்ணீரும் கிடை யாதே. என்றெண்ணி ஏங்கியிருந்த ராஜலக்ஷ்மிக்கு வீராவே சம் பொங்கிற்று. அடே என் கற்பைச் சீர் குலைக்கவந்த பிசாசே, உனக்கு ஒரு கொள்ளைத் தமிழ் பாடுகிறேன் நான் உண்மைக் கற்புடைய உத்தமியானால், இக்கொள்ளைத் தமிழ்

இன்னும் சில நாட்களில் உன் உயிரைப் போக்கி விடுவது நிச்சயம். பத்தினி வாக்கு பொய்க்காது. கண்ணகி, பாண்டியனையும் பாண்டியனது மதுரைப் பட்டணத்தையும் அழித்தாள். தமயந்தி வேடனை எரித்தாள். சாவித்திரி எமனிடம் வாதாடித் தன் கணவனை மீட்டாள். அக்கதைகளெல்லாம் பொய்யா ஒருக்காலும் பொய்யன்று அடே ஆறுமுகம் நீ செத்தாய் குலமங்கையரது கற்பைக் கெடுக்க வந்த கொள்ளிக் கட்டையே!

## கொள்ளைத் தமிழ்

சீவனுள் ளளவுமே நட்டுவக் காலியும்
தேளும் சினந்து கொட்டத்
திறுதிறெனு ழுண்டை விழியிற் குளவி கொட்டச்
செங்குறுதி யாறு கொட்டப்

பாவிமக னேயுனது வாசலிற் சாம்பிணப்
பறைகள்மிக வந்து கொட்டப்
பந்தரடி மாரடித் துறவினர்கள் வாய்க்கரிசி
படிநெற் கொணர்ந்து கொட்ட

ஆவலொடு கால்மாட்டில் உனதுபெண் டாட்டிகண்
அருவிஒரு கோட்டை கொட்ட
ஐயையோ என்செய்வே னென்றுமகனீர் மாலை
அதனைக் கொணர்ந்து கொட்ட

சாவடியி லறுதலிகள் கூடியழ நீவந்து
சப்பாணி கொட்டி யருளே!
சண்டிக் குலாமகனே அறுமுகப் பிண்டமே
சப்பாணி கொட்டி யருளே!

சரி இக்கொள்ளைத் தமிழ் ஒரு புறம் இருக்கட்டும். இனி என் உயிர் வைத்திருப்பதில் யாதொரு சிலாக்கியமும் கிடை

யாது என் காதலரோ என்னை அறவேமறந்தார் என் கோரிக்கையோ நிறைவேறவில்லை எனக்கு ஆபத்தோ இன்னநேரமென்றில்லை ஆதலால் ஏதேனும் ஒரு மாயத்தால் என் உயிரைப் போக்கிக்கொள்வதே நன்று என்தந்தையார் வந்து அவருடைய எண்ணமும் மாறுபட்டிருந்து வேறு யாறுக்கேனும் மணம் புரிவிப்பதைவிட என் பிணத்தையே அவர் கண்டு, கலியாணப் பேச்சையே எடுக்காமல் அவர் இருக்கலாமல்லவா? நான் தற்கொலை பண்ணுவதினால் ஒருவருக்கும் கஷ்டம் நேரிடவேண்டாம் என் தந்தைக்கும் அரசாங்கத்தாரால் துன்பம் நேரிடலாகாது ஆகலால் ஒருவர் பேரிலும் குரோதமின்றியே நானாக என் வெறுப்பின் நிமித்தம், உலகத்தில் வாழ்வதற்கு மனமின்றித் தற்கொலை செய்துகொண்டேன், என ஒரு கடிதம் எழுதி வைத்து விடுகிறேன், என அவள் எண்ணித் தற்கொலையைக்குறித்து விபரமாக ஒரு கடிதம் எழுதி உறையிலிட்டுத் தந்தையாரின் விலாசத்தை அதன்மேலெழுதி மேஜையின் மேலிருந்த ஒரு புஸ்தகத்திற்குள் வைத்தாள். பிறகு தன் காதலனை முன்னிலைப்படுத்தி என் ஆசைக் கண்ணாளா! தங்கட்கு என் அன்பான வந்தனம் உரித்தாகுக நான் உலகத்தில் பிறந்தமையால் ஒருவருக்கும் சுகம் கிடையாது. எனக்கும் சுகமில்லை என்னை நம்பியிருந்த தங்கட்கும் என்னால் இன்பம் எய்துவிக்க இயலவில்லை. ஆதலால் நான் தங்களிடம் விடைபெற்று வேற்றுலகம் செல்லுகிறேன் தாங்கள் இந்த ஏழையைக் குறித்துச் சிறிதும் சிந்தனையின்றி என்னிடம் நேரிற் குறிப்பிட்டுள்ளபடியே தங்கள் கருத்திற்கிசைந்த ஒரு மங்கையை மணந்து மகிழ்ச்சியுடன் வாழ்வீர்களாக,! என்று கண்ணீரொழுகக் கூறினாள். பின்னர் எங்ஙனம் தன் உயிரை மாய்த்துக்கொள்ளலாம் என எண்ணியவண்ணம், தன் தமையன் மருந்துகள் வைத்திருக்கும் கண்ணாடிப்பீரோவை உற்று நோக்கினாள். 'விஷம்' என்ற லேபிள் ஒட்டிய சீசா அவள் கண்களிற் சட்டெனப் புலப்பட்டது அந்தப் பீரோவை உடனே திறந்தாள். சீசாவை எடுத்தாள் அதில்

வெள்ளை நிறமாகச் சீனி போன்றதொரு பொடியிருந்தது. அதிற் கொஞ்சம் எடுத்து ஒரு காகிதத்தில் வைத்தாள். தற்கொலை பண்ணிக்கொண்டவர்கள் அடுத்த பிறவியில் பிசாசாய்ப் பிறப்பார்கள் எனப் பழங் கிழடுகள் கூறும் வாக்கியம் அவள் ஞாபகத்திற் பட்டது. ஐயோ! அது உண்மையாயிருக்குமோ? எனச் சிறிது கலக்கம் அடைந்து வேறொரு புஸ்தகத்தை மேஜையின் மேலிருந்து எடுத்தாள் அதற்குள்ளே யிருந்து தொப்பென்று கடிதம் ஒன்று விழுந்தது. அது கனகசபாபதியின் கையெழுத்துப் போலப் புலப்பட்டது ஒரு சமயம் நம்முடைய எண்ணமே இப்படி மாயக்காட்சியைக் காண்பிக்கிறதோ! எனச் சற்று நிதானமாக அக் கடிதத்தைப் பார்த்தாள், உண்மையிலேயே அது கனகசபாபதி எழுதிய கடிதம்! இராஜலக்ஷ்மி பதட்டத்துடன் கடிதத்தைப் படித்துப் பார்த்தாள் இக்கடிதத்தில் ராஜலக்ஷ்மியை இராத்திரி 10 மணிக்குப் பூந்தோட்டத்துக்கு வந்து தன்னைக் காணும்படி எழுதியிருந்தது. உடனே அவளுக்குத் தூக்கி வாரிப் போட்டு விட்டது. கதவுகள் திறந்து கிடந்தபடியே போட்டு விட்டு ராஜலக்ஷ்மி பூந்தோட்டத்துச்குப் போய்ச் சேர்ந்தாள். அப்பொழுது மணி 11 ஆயிற்று ஆனல் கனகசபாபதி அங்குக் காணப்படவில்லை. எப்படியும் சற்று முன்பின்னுக வரக்கூடும் என்றெண்ணிய வண்ணம் உலாவிக் கொண்டிருந்தாள், நிற்க.

தாசி நாகரத்தினத்தின் வளர்ப்பு மகளும், அவளது அருமை மகளால் கண்ணும் உயிரும் போலக் காப்பாற்றப் பட்டு வந்தவளுமாகிய லீலாவுக்கு, 3000 ரூபாய் ஒப்பந்தம் பேசிச் சுந்தரமே அன்றிராத்திரி சாந்தி கழிப்பதாக நிச்சயமாயிருந்தது. லீலாவின் சாந்தி முகூர்த்தத்தைக் குறித்து, அன்றைத் தினத்தில் நாகரத்தினத்தின் வீட்டிற்கு உள்ளூரிலிருந்தும் அயலூரிலிருந்தும் பரத்தை மாதர் பலர் வந்து குழுமினர். நாகரத்தினம் அம்மாதரிடம் மதுரையிலிருந்து ஸேட் ஒருவர் 10000 ரூபாய் ஒப்பந்தம் பேசி லீலாவுக்குச் சாந்தி கழிக்கப் போவதாகவும் அவர் அன்று

இராத்திரி 1-மணி வண்டியில் தான் வரப்போவதாகவும், அவர் மிகவும் சங்கோஜமுடைய வாலிபராகையால் ருது சாந்திச் சடங்குகள் அனைத்தும் 10-மணிக்குள்ளேயே முடித்துப் பெண்ணைப் பள்ளியறைக்கு அனுப்பிவிடவேண்டு மென்றும், வீட்டில் தன்னைத்தவிர வேறு யாரும் இருக்க லாகாது என்றும் கூறி, தன் வீட்டுக்குப் புதிதாய் வந்தவர்கள் அனைவருக்கும் அடுத்த வீடுகளில் சௌகரியமாகப் படுக்கவும் இருக்கவும் வசதிகள் செய்வித்திருந்தாள்.

உண்மையில் 1-மணிக்குச் சுந்தரமே அங்கு வரவேண்டியவன். ஆனால் அவனுடைய கண்டிப்பான உத்திரவுகளுக்குப் பயந்து, விஷயங்களை அந்தரங்கமாக வைத்திருப்பதற்காக நாகரத்தினம் இத்தகைய கதையைச் சிருஷ்டித்தாள். மணி 10 அடித்தது லீலாவுக்குத் தேவதாசிகள் சாதிக்கட்டுக்குச் செய்யவேண்டிய முறைப்படி ருதுசாந்திச் சடங்குகள் நிறைவேறின. நாகரத்தினத்தின் மகளுக்குத் தோழியாகிய திருநெல்வேலித் தாசியே மாப்பிள்ளை வேஷந்தரித்து லீலாவுக்கு அருகில் அமர்ந்திருந்தாள். சாதாரணமாய்க் குடும்பங்களில் நடைபெறும் கலியாணம் போலவே அந்தப் போலி மாப்பிள்ளைக்கும் லீலாவுக்கும் திருமணம் நிறைவேறியது. ஊஞ்சல், நலுங்கு, பாட்டு கும்மி, முதலியன தடபுடலாக நடந்தன. சதுர்க் கச்சேரியும் நடந்தது. இரவு 7 மணிக்கே பூப்பல்லக்கில் பட்டணப் பிரவேசமும் நடைபெற்றது. எல்லா ஆர்பாட்டங்களும் 10 மணி அளவில் ஓய்ந்து விட்டன தாசிகள் அனைவரும் அண்டையயல் வீடுகளிற் போய்ப் படுத்துக் கொண்டனர். லீலாவுக்குச் சாந்தி கழிக்கும் கணவன் யார்? என்பதைத் தெரிந்து கொள்வதில் அவர்களுக்கு இருந்த ஆசை அளவு கடந்தது. ஆயினும் நாளைக் காலையில் எவ்விதத்திலும் அவன் இன்னார் என்பதைக் கண்டு கொள்ளலாம். என்ற மனவமைதியுடன் படுத்து உறங்கினவர் அவர்களிற் சிலர். பத்தாயிரம் ரூபாய் ஒரே மொத்தமாய்க் கொடுக்கிறவன் பெரிய ஸேட் போலும் பெருத்த வியாபாரியுமாயிருப்பான். யாராயிருந்தாலும் தேவ

யாருக்கும் பணம் தானே குறி.

அன்னையே அனைய தோழி அறம்தனை வளர்க்கும் மாதே!
உன்னைஓர் உண்மை கேட்பேன் உரைதெரிந் துரைத்தல் வேண்டும்
என்னையே புணருவோர்கள் எனக்குமோர் இன்பம் நல்கிப்
பொன்னையும் கொடுத்துப் பாதப் போதினில் வீழ்வ தேனோ?

பொம்மெனப் பணைத்து விம்மிப் போர்மதன் மயங்கி வீழும்
கொம்மைசேர் முலையி னாளே! கூறுவேன் ஒன்று கேண்மோ
செம்மையில் அறஞ்செய் யாதார் திரவியம் சிதற வேண்டி
நம்மையும் கள்ளும் சூதும் நான்முகன் படைத்த வாறே!

என வம்பளந்தனர் சிலர் சில குறும்புக்காரிகளான பரத்தையர், 'யாரடா! அது பெரிய முட்டாள், 10000 ஒரே முட்டாய் முடிச்சவிழ்க்கிறவன். நமக்கும் அவ்வாசாமி இன்னாரென்பது தெரிந்தால் நாமும் காசு பறிக்கச் சௌகரியமாயிருக்குமே! எனத் தூங்காமல் விழித்திருந்து பக்கத்து வீடுகளில் உட்கார்ந்து கொண்டு தெருவுக்கு வருவதும் போவதுமாக இருந்தனர்

இங்ஙனம் இவர்கள் இருக்க இரவு 10 மணிக்கு அனைவரும் வீட்டை விட்டு வெளியேறிய பின், நாகரத்தினம் லீலாவைத் தன் அருகில் அமர்த்திவைத்து 'என் கண்ணே அருமை லீலா! நீ என்னுடைய சொந்த மகளினும் பதின்மடங்கு அன்பாக என்னிடம் நடந்துவருகிறாய் நானும் அவ்விதமே உன்னை என் உயிருக்குயிராய் எண்ணியிருக்கிறேன் பிராமணர் வீட்டிற் பிறந்த நீ என்ன பாவத்தினாலோ தாசிகள் வீட்டில் வளரும்படியாயிற்று. உன் பெற்றோர்கள் மாத்திரம் இதுகாறும் உயிருடனிருந்தால் 3 வயதிலேயே நீ விதவையாய் விட்டபடியால் இத்தனை நாட்களுக்குள் உன் தலையை மொட்டையடித்து முக்காடிட்டு வெள்ளைச் சேலை உடுத்தி நித்தமும் ஏகாதசி விரதமநுஷ்டிக்கச் செய்து மூலையிற் கிடத்தியிருப்பார்கள் இவ்வுலகத்திற் பெண்ணாய்ப் பிறந்தவர்கள் அநுபவிக்கவேண்டிய இன்ப சுகத்தை ஒரு க்ஷண நேரமும் எய்தப் பெறாமல் காலங் கழித்து உயிர் துறக்க வேண்டியது நேரிடும், ஊரிலுள்ள

வாலிபர்களோ, நீ எவ்வளவு சுத்தமாக நடந்து வந்தாலும் உன்மீது பொய்ப்பழி சுமத்தி விபசாரிப் பட்டம் கட்டித் தூற்றுவதும் தப்பாது. அப்படிப்பட்ட கொடுமைகள் இது வரை உன்னை அணுகாதிருந்தது தெய்வ சங்கற்பமே. உனக்கு மூன்று வயதில் தாலி கட்டிய கணவன் கப்பல் கவிழ்ந்து இறந்து போனதாகத் தெரிந்தாலும், உன் தந்தை யார் ஜோஸியம் பார்த்ததில் அவன் உயிருடனேயே தேசாந் திரங்களில் வசிப்பதாகவும் உனக்குப் பதினாறு வயதாவதற் குள் உன்னை வந்து அவன் காண்பான் என்றும் என் மக ளிடம் உன் தகப்பனார் தெரிவித்தாராம். ஆனால் உனக்குப் பதினாறு வயது இன்னும் கழியாமலில்லை. 'ஜோஸியம்' எப்பொழுதும் பலிக்கும் என்ற நிச்சயம் இல்லை. ஜோஸியர் பெண் தாலி அறுப்பதும் வைத்தியன் பெண்டாட்டி சாவ தும் தினந்தோறும் உலகத்திற் காண்கிறோம். வசிஷ்டர் மஹாஞானி சகல சாஸ்திரங்களிலும் வல்லவர் அவர்தானே இராமரது பட்டாபிஷேகத்திற்கு நாளும் லக்கினமும் குறிப் பிட்டார். அவர், இராமன் அரசாளக்கூடாது காட்டிற்குப் போகவேணும் என்ற துர் எண்ணத்தோடு தினம் குறிப்பிட் டிருப்பாரா? அந்தத்தினத்தில் அவர் நினைத்தபடி பட்டாபி ஷேகம் நிறைவேறிற்று? அதே நேரத்தில் இராமன் காட்டிற் குச் சென்றான். தசரதன் இறந்தான். சந்தோஷ சாகரத் தில் மூழ்கிக் கிடக்கவேண்டிய அயோத்திமா நகரம் துயரக் கடலில் ஆழ்ந்தது. நகரம் நரகமாய் மாறிற்று. புண்ணி யாத்துமாக்கள் வசித்த அந்த யுகத்திலேயே ஜோஸியம் பலிக்கவில்லை கலியுகத்தில் ஜோசியம் பலிக்கும் என்பது எப்படி நம்புவது? ஜோஸீயமா, கீஸீயமா எல்லாம் சுத்தப் புளுகு, ஆதலால் என் அன்புள்ள லீலா உன் நன்மையைக் கோரி நான் கூறப்போகும் சில வார்த்தைகளைக் கேள்.

இப்பொழுது உனக்கு ருதுசாந்தி நடத்தப்போகிற வாலிபன் பரம்பரையாய்ப் பெரிய பணக்காரன் மஹா தர் மிஷ்டன். நாகரீக உலகத்தில் நன்றாய்ப் பழகியவன் பெருங் குடும்பத்திலே பிறந்தவன். அவன் பந்துக்களுக்குள்ளேயே

அவனுக்கு வலிய வந்து பெண் கொடுக்க, எத்தனையோ பேர் காத்திருக்கிறார்கள். ஒரு பெண் தயாராய் நிச்சயப் படுத்தியும் வைத்திருக்கிறது. அவளோ நிரம்ப அழகுடையவள்; அவளுடைய அழகைப் பார்க்கப் பதினாயிரம் கண் வேண்டும். படிப்பும் அவளுக்கு நன்றாய்த் தெரியும். அவளைக்கூட அவன் திரஸ்கரித்து, உன்னை வைத்து ஆயுள் பரியந்தம் வாழ்வதாகச் சத்தியம் செய்து கொடுத்திருக்கிறான். அவன் வேற்று மாதரை நோக்காமற் செய்ய வேண்டியது உன் பொறுப்பு. அநேகமாய் இப்பொழுது அவனோடு உன்னைப் பிணைப்பது உண்மையில் ஒரு விவாக சம்பந்தம் போலவே தான். வேறு வித்தியாசமாக நீ எண்ணுவதற்கு இடமில்லை. விதவா விவாகம் இக்காலத்தில் எங்கெங்கும் பிரபலமாய் நடைபெறுகின்றது. ஆதலால் நீ உன் கணவனோடு மலரும் மணமும் போல, நகமும் சதையும் போல நீடூழி வாழ்வாயாக, அவனுக்குப் பிரியமிருந்தால் நீ அவனை யழைத்துக்கொண்டு வேற்றூர் சென்று வாழ்வதிலும் எனக்கு ஆட்சேபனை இல்லை.

உனக்காக என் மகள் சொத்தும் எழுதி வைத்துவிட்டாள் இந்த நோக்கம் உனக்கு ஏற்படலாம என்ற எண்ணத்துடனேயே அவள் அங்ஙனம் எழுதி வைத்தாள். மணி 11க்கு அவன் வந்து விடுவான் இன்னும் ஐந்து நிமிஷம் தானிருக்கிறது. ஆதலால், பெண்ணே, அவனுடைய அன்பையும் ஆதரவையும் கவர்வது உன் கடமை அவனுடைய குறிப்பறிந்து பக்ஷமாக நடந்துகொள். அவனுக்கு மனம் கோணும்படி சிறிதும் நடவாதே. மேடையிலே பள்ளியறை இந்திரனது சயந்த மாளிகை போல் அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. சென்று படுத்திரு. சற்று முன் பின்னாக அவன் வந்தாலும் கூடும் சரி போய்வா என உபதேசங்கள் புரிந்து லீலாவிற்கு நெற்றியிலே திலகம் அணிவித்து மேடைக்கு அனுப்பி விட்டாள்.

இவளுடைய வார்த்தை ஒவ்வொன்றும் நஞ்சு கலந்த வஞ்சகமாகவே மிளிர்ந்தது. தேவடியாளுக்குரிய தளுக்குப்

பிலுக்குகளுடன் கண்களை சிமிட்டிச் சிமிட்டி அவள் பேசினாள். லீலா ஒன்றுமறியாத பேதை போல மௌனமாக நின்றாள். அவள் கண்களில் கண்ணீர் ததும்பிற்று அவள் அதனைச் சிறிதும் வெளிக்குக் காட்டாமல் மச்சுப் படிகளில் ஏறினாள். நாகரத்தினம் மச்சு வாயிலைப் பூட்டிவிட்டாள். லீலா தன் சயன கிரகத்தில் நுழைந்தாள். அவள் கண்களிலிருந்து பெருகிய நீர் அவளுடைய கால்களைக் கழுவிற்று. அவள் தன் உயிர்க்குயிராய்க் காப்பாற்றிவந்த சிறிய பெட்டியொன்றைத் திறந்து அதனுள்ளிருந்த அழகிய போட்டோ ஒன்றைக் கையில் எடுத்து வைத்து அதனைப் பார்த்த வண்ணம் அழுது கொண்டிருந்தாள். அந்த போட்டோவில் லீலாவுக்கு 3 வயதில் தாலிகட்டிய 7 வயது சிறுவனது அழகிய உருவம் காணப்பட்டது. அதனைப் பார்த்த வண்ணமே, என் ஆசைக் கண்ணாளா! தாங்கள் இச்சமயம் எங்கிருக்கிறீரோ! அல்லது உயிர் துறந்தீரோ அறிகிலேன்! என் பிதா தெரிவித்தபடி ஜோஸியம் பொய்க்காது என்றெண்ணி யான் இதுவரையிலும் நரகத்துக்குச் சமமாகிய இவ்விடத்தில் என் கற்புக்கு பங்கமேற்படாவண்ணம் சதா தங்களையே தியானித்துக் கொண்டிருக்கிறேன் அதைப் போல் தாங்கள் என்றைக்கு வந்து என்னையடையப்போகிறீர்கள்? எனச் சிந்தித்தவாறே அப்போட்டோவை பார்த்துக் கொண்டிருந்தாள், நிற்க



## அத்தியாயம் 12

## குடிவெறியாற் கொலையுண்டவன்

அன்று இராத்திரி மணி 10க்குக் கலியாணபுரத்தின் ஆற்றங் கரையிலே இருவர் உலாவிக் கொண்டிருந்தனர். இருவரும் ஏதோ ரூபாய் விஷயமாய் தமக்குள் சச்சரவிடு வதாகப் புலப்படுகிறது.

ஒருவன்—அடேய்! ரூபாயைக் கொடு. மணி 11-க்கு நான் அந்த இடத்திற்கு ரூபாயுடன் வருவதாக ஏற்பாடு செய்து விட்டேன். உன்னிடத்திலும் எத்தனை நாட்களுக்கு முன்னமேயே அந்தரங்கத்தைச் சொல்லியிருக்கிறேன். நீ, அப்படி யிருந்தும் காலதாமதம் செய்வது அழகாயில்லை. என் வீட்டு ரூபாயை எனக்குக் கொடுப்பதில் உனக்கு என் இவ்வளவு யோசனை?

மற்றவன்—உன் வீட்டு ரூபாயானால், நீயே பெட்டி யைத் திறந்து எடுத்துக்கொள்ளலாமே. அதற்கு நான் என்ன சிபார்சியா? உன் வீட்டு ரூபாய் என்னிடத்திற் செப்பாலடித்த காசு ஒன்று கூடக் கிடையாது.

முதல் மனிதன்—ஆறுமுகம்! இது நன்றாயிருக்கிறதா நீ இப்படி விளையாடுவது அழகில்லை. உன்னிடத்தில்தான் உண்மையைச் சொன்னேன். என் பிராண ஸ்நேகிதன் மாணிக்கத்துக்குக்கூட விஷயத்தை மறைத்து வைத்தேன். என் பேச்சை நம்பி நாகரத்தினம் ரூபாய் ஆயிரம் வரை செலவழித்துப் போடு போடு என்று லீலாவுக்குச் சடங்கு கழித்திருக்கிறாள். நாம் இரண்டு பேரும் வரும்பொழுது தானே பூப்பல்லக்கு பட்டணப் பிரவேசம் தெருவழியாய்ப் போயிற்று. பெண், எவ்வளவு லக்ஷணமாயிருக்கிறாள் பார்த்தாயா! அவள் உண்மையில் தாசி கூட இல்லை. அவள் பார்ப்பாரச் சாதி. லீலாவை நாகரத்தினம் வெளிக்குத் தெரியாமல் வளர்த்து வந்தாள். இப்பொழுது சில மாதங்களாய் சத்தான் அண்டையயல் வீட்டுக்குக்கூட லீலா ஒருத்தி

இருக்கிற விஷயம் தெரியும். தன்னுடைய சித்தியின் பேத்தி என்று வெளிக்குக் கூறியிருக்கிறாள். லீலாவின் உண்மையான குட்டு என் ஒருவனுக்குத்தான் தெரியும். இப்படியெல்லாம் இருக்க; ஆறுமுகம்! நான் நாகரத்தினத்தை ஏமாற்றுவது நன்றாயிருக்குமா? இப்பொழுது நீ 3000 ரூ. உண்மையில் வைத்திருக்கிறாயா, இல்லையா? நீ இச்சமயத்தில் எப்படியும் ரூபாயைக் கொடுத்து என்னைக் காப்பாற்று உன் நன்றியை நான் ஒரு பொழுதும் மறக்கமாட்டேன். என் உயிரைக் கேட்டாலும் நாளைக்கு நான் கொடுத்துவிடுகிறேன். இன்னும் என் பெற்றோர் இறந்த பிறகு என் சொத்துகளிற் பாதி உனக்கு எழுதித் தருகிறேன். இப்பொழுது ரூபாயைக் கொடுத்து என் மானத்தைக் காப்பாற்று. (காலில் விழுந்து கும்பிடுகிறான்.)

ஆறுமுகம்—சுந்தரம்! இப்படி நீ என்னைக் கும்பிடுவது அழகா? உன்னிடத்தில் மாசம் 15 ரூபாய்க்கு வேலைபார்க்கிறவன் என்பதை மறந்துவிட்டாயா? என்ன இருந்தாலும் முதலாளியல்லவா? கள்ளக் கணக்கு எழுதி என்னை ரூபாய் தயாரிக்கும்படி நீ சொல்லியிருந்தாய். அப்படிச் செய்ய என் வீட்டு எச்சில் இலையை நக்கும் நாய்க்குக் கூடப் புத்தி வராது. இன்று உனக்காக என் தாயார் அடகு பிடித்து வைத்திருந்த 5000 ரூபாய் பெறுமானமுள்ள நகைகளை பண்ணை சீதாராமய்யரிடம் கொதுவை வைத்து 3000வாங்கி வந்தேன். இப்பொழுது நான் அதை உனக்குத் தருவதில் தடைகிடையாது. ஆனால் எனக்கு நீ ஒரு பிராமிசரிநோட்டு எழுதிக் கொடு. ரூபாய் தருகிறேன். நோட்டுத் தயாராய் எழுதி ஸ்டாம்பு ஒட்டிவைத்திருக்கிறேன். கையெழுத்துப் போட்டுக் கொடுத்து விட்டு, இந்த இடத்திலேயே ரூபாயை வாங்கிக்கொள்.

(சுந்தரம், ஷோக்கான சட்டை மாட்டி உருமாலணிந்து பெரிய மைனராகத் தாசிக்கு முதல் சடங்கு கழிக்கும் மாப்பிள்ளையாய் நிற்கிறான். டார்ச்சு லைட்டை அடித்து, ஊற்றுப்

பேனாவைச் சட்டையினின்று எடுத்து நோட்டில் கையெழுத்துப் போட்டான்.)

சுந்தரம்—இன்னும் ரூபாய்க்குத் தாமதமென்ன? நேரமாகிறது போகவேண்டும்.

ஆறுமுகம்—என்ன சுந்தரம்! நம்முடைய தினசரி மாமூலைகளை மறக்கலாமா? கொஞ்சம் பட்டை போட்டு விட்டுப் போகலாம். இனிமேல் உன் ரூபாயை நாயா கொண்டு போகிறது? பயப்படாமே நீ லீலாவுடன் பள்ளியறையில் பலகாரங்கள் சாப்பிடுவாய். எனக்கு என்ன கிடைக்கப் போகிறது? கொட்டாவிதான். கொஞ்சம் கள்ளுத் தண்ணீருக்கு உத்தரவு பண்ணு. தாகமாயிருக்கிறது; உனக்கும் நேரமாயிற்று. எனக்கும் நேரமாகிறது.

சுந்தரம்—நீ பெரிய அநியாயம் பண்ணுகிறாய் புதிதாய் கலியாணம் பண்ணினது போல நான் புதுப் பெண்ணிடம் கள்ளுக் குடித்து விட்டுப் போகிறது நன்றாயிருக்காது நீ வேண்டுமானால் குடி. இந்நேரத்தில் இங்கே யார் கள்ளு ஊற்றக் காத்திருக்கிறான்?

ஆறுமுகம்— அதற்கெல்லாம் யோசிக்கவேண்டாம். தயாராய் பனையேறி ஒருவனை இங்கே வைத்திருக்கிறேன். யாரடா, அடேய் கறுப்பா! இப்படிக் கள்ளுக் குடுவையைத் தூக்கிக்கிட்டுவாடா.

சுந்தரம்—நீ பலே ஆசாமிடா இவனை இந்நேரத்துக்கு எப்படி இங்கு வரச் சொல்லி விட்டாய்? இவனுக்கு இந்த ஆரு மாதிரி தெரியலையே!

ஆறுமுகம்—இவனா! நம்முடைய வழக்கமான பனையேறி சுப்பன் இருக்கிறானே! அவனுக்கு மைத்துனன் இவன், கொழும்பிலே வியாபாரம் பண்ணிக் கெட்டுப் போனானாம். ஆற்றுப் பாலத்திற்கு அடியில் சாயுங்காலம் கண்டேன். குந்திக்கொண்டிருந்தான். இப்பொழுது தன் கை வீட்டோடு வந்திருக்கிறானாம். எந்த நேரத்தில் எவ்வளவு

வேண்டுமானாலும் நாம் சொன்ன இடத்திற்குக் கள்ளு கொண்டுவருகிறதாகச் சொன்னான் 'சரிதான்' என்று 5 ரூ. நோட்டு அட்வான்ஸ் கொடுத்து இரண்டு பெரிய குடுவை நிறையக் கொண்டுவரச் சொல்லியிருந்தேன். இப்பொழுது தான் இந்தப் பக்கத்தில் வந்தான். நீ பார்க்கவில்லையா?

ஆறுமுகம்—நீ ஆள் மகா சமர்த்தன். சரி சரி குடித் துத் தொலை எனக்கும் நாக்கு வறள்கிறது நானும் கொஞ் சம் தண்ணீர் போடுகிறேன்.

ஆறுமுகம்—ஊத்துடா கறுப்பா! என்ன? உனக்குக் கூட இவ்வளவு போசனை. எனடா விழிக்கிறே?

பனையேறி—இல்லேங்க, சாமி. யாருக்கு முதல்லே ஊத்துரது என்னாட்டு முளிக்கேன், அவுகளப் பாத்தா மைசூர் மவராசா, கண்ணாள மாப்பிளை போலிருக்காங்க. நீங்க ரூபா கொடுத்தாருக்கீங்க; நானு என்ன செய்யட்டு மின்னுதான் முளிக்கிறேன்.

ஆறுமுகம்—கறுப்பா! நீ தான் சொல்லணும். அவுக ளெப்பாத்தா எப்படிக்கிறுக்கு மைசூர் மவராசா பெஷ் பெஷ் கல்லாண மாப்பிள்ளை பலே பேஷ் அவுக முதலாளி அடா! நான் வேலைக்காரப் பயல். அவுகளுக்குத் தான் முதல்லே ஊத்து.

(பனையேறி தன் மூக்கைப் பிடித்துக்கொண்டே சுந்தரத் துக்கு முதலில் ஓலைப்பட்டையில் ஊற்றிக்கொண்டிருக்கிறான்

சுந்தரம்—அடே கருப்பா! என்னடா ரொம்ப புளிப் பாயிருக்கு.

கறுப்பன்—எஜமாங்க, அப்படி இல்லேங்க. இந்தப் பொட்டலத்திலே நல்ல காரமான பூந்தி இருக்கூங்க, நீங்க இப்படிச் சொல்லுவீங்க இன்னுட்டுத்தான் சாமி வீரமணி அய்யர் ஓட்டலிலேருந்து வாங்கிக்கிட்டு வந்தேன் நானு.

சுந்தரம்—ஆறுமுகம் நீ சரியான ஆளைப் பிடிச்சிருக்

கேடா. அடே! இவன் மூக்கைப் பிடிச்சுக்கிட்டே ஊத்துறன். செத்துக் கித்துப் போயிடாதே. அத்தானக் காட்டிலே நாங்கத்தான் கொண்ணுப்புட்டோண்ணு கேஸூ கீஸூ வந்திரப் போதுடா பாவிப் பயலே!

(இதற்குள் சுந்தரத்தின் வயிறு குளமாய்ப் பெருகி விட்டது. தலை சுழல்கிறது. வாய் குழறுகிறது.)

பண்ணையெறி—இல்லேங்க, சாமி! இதுவரைக்கி கள்ளுக் கிட்டப் போயிப் பழக்கம் நமக்கிக் கிடையாதுங்க. கொளும்புலே அரிசி ராவாரம் பண்ணிக்கிட்டிருந்தேனுங்க நெல்லுவிலே இறங்கி ராவாரம் படுத்துக்கிச்சி. என்னுங்க செய்றது சாமி பாழும் வயிறு இருக்கே!

(வயிற்றிலடித்துக்கொள்கிறன்)

ஆறுமுகம்—அடே கறுப்பா! எஜமானுக்கு அஞ்சு பீப்பாய் வேணும்டோ! நிறுத்து. நமக்கு ஊத்துடா.

(பிறகு எஞ்சியிருந்த பாதிக் குடிவையை ஆறுமுகம் குடிக்கிறன்)

பண்ணையெறி—சாமீங்க, நானு போயிட்டு வாறேனுங்க உத்தரவா?

ஆறுமுகம்—எஜமான் கிட்டே பிரசண்டு கேளடா, மூடா! இன்னிக்கி எஜமானுக்குக் கண்ணாலம் தாண்டா நீ சொன்ன மாருதி. கேளடா பாவிப் பயலே! நீ கொழும்புல இருந்து இங்கு வந்து சாம்பாத்தியம் பண்ணிப் பாட்டெத் தொலச்ச, எஜமான் பாப்பாத்தியைக் கண்ணாலம் பண்ணுறடா. கல்லாணப் பொண்ணு பள்ளியறையிலே படுத்திருக்குது மாப்பிளே மவுராசா ஆத்தங்கரையிலே பட்டை போடுறாறு ஹஹ்ஹெ ஹஹ்ஹெ.

(வயிறு குலுங்கக் குலுங்கச் சிரிக்கிறன்)

சுந்தரத்துக்குக் கோபம் மூக்கு முனையில் வந்து விடுகிறது. ஆறுமுகம் முதுகிலே ஒரு குத்துக் குத்திக் கழுத்தை நெறிக்கப் போகிறான். அதற்குள் ஆறுமுகத்துக்குக் கோபம் பொங்கிப் பொட்டென்று சுந்தரத்தின் முகத்தில் அறைந்து, மூக்கைப் பிடித்து அமுத்திவிட்டான். சுந்தரம் கொத கொதவென்று கக்கிக் கொண்டே கீழே விழுந்தான்.

மூக்கை ஆறுமுகம் பலமாய் அமுத்திவிட்ட படியால், சுந்தரத்துக்கு மூச்சுத் திணறிற்று. சற்று நேரத்தில் பிராணனும் போயிற்று. ஆறுமுகம் சுந்தரத்தை இப்படியும் அப்படியும் புரட்டிப் புரட்டிப் பார்த்தான். ஆள் போயே விட்டான்.

அடே கறுப்பா! ஆற்றிலே யிருந்து கொஞ்சம் தண்ணீர் கொண்டுவா என்று சொல்லி அவனை அனுப்பிய பிறகு, ஐயோ! கஷ்ட காலமே! உனக்கு இப்படியா சாக்காலம் வந்தது என்று கூறிக்கொண்டே, கக்கி அலங்கோலமாய்க் கிடந்த மேற்சட்டை வேட்டி முதலியவற்றை உரிந்து தூர எறிந்தான். பிறகு அவனை வேறிடத்துக்கு இழுத்துச் சென்று அவன் உள்ளே மாட்டி யிருந்த பட்டுச் சட்டை கள்ளுக் குடிப்பதற்கு முன்னமேயேபக்கத்தில் கழற்றி வைத்திருந்த 150 ரூபாய் பெறுமான ஜரிகை அங்க வஸ்திரம், சுந்தரம் அணிந்திருந்த வைரக் கடுக்கன், கைச்சங்கிலி, கழுத்துச் சிறு சங்கிலி, மோதிரங்கள், கைக் கடியாரம் முதலிய எல்லாவற்றையும் ஒன்று விடாமல் கழற்றி ஒரு துண்டிலே கட்டி வைத்து விட்டான்.

இதற்குள் பணியேறியும் தண்ணீர் கொண்டுவந்தான். இருவருமாகக் கால் மணி நேரம் சுந்தரத்திற்கு எவ்வளவோ சிகிச்சைகள் செய்தனர். சுந்தரத்திற்கு மூச்சு வெளிப்படுவெதாயும் உயிர் திருப்புவதாயும் தோன்றவில்லை. ஆறுமுகம் சுமார் 100 ரூபாய் பெறுமான, சுந்தரத்தின் பெயர் பதித்த மோதிரத்தைப் பணியேறியின் கையிலே கொடுத்து, அடே கறுப்பா! நீ இன்றைக்கு நரி முகத்திலே விழித்திருக்கிறாய். சங்கதியை யாரிடத்திலும் சொல்லிவிடாதே. ஏதோ வந்தான்

குடி வெறியில் விழுந்து செத்தான் என்று போய்விடும். ஒருவர் மேலும் பழி ஏற்படாது. இனிமேல் நாம் இங்கே தாமதிக்கக்கூடாது. 'தப்பினோம் பிழைத்தோம்' என்று ஓடிவிடு என்றான். பனையேறியும் மறைந்து போனான். ஆறுமுகம் சுந்தரத்தைப் புரட்டி ஒரு பெரிய கல்லின்மேல் அவன் முகத்தை வைத்து, அவனைக் குப்புறப் போட்டான். 'குடி வெறியில் மூஞ்சி குப்புற விழுந்து, கல்லில் அடிபட்டுச் செத்தது போலப் போகட்டும்' என்பதே அப்படி அவன் செய்ததற்குக்காரணம். அப்பால் ஆறுமுகம் ஓட்டமும் நடையுமாகத் தன் வீடு போய்ச் சேர்ந்தான். அப்பொழுது மணி 11 இருக்கலாம்.

அன்று இரவு 9 மணிக்கு ஆறுமுகம் மாணிக்கத்தைக் கண்டு, அவன் தந்தை தூத்துக்குடியிலிருந்து அனுப்பிய தந்தி ஒன்றைக் கொடுத்தான். அதற்கப்புறம் தான் ஆறுமுகமும் சுந்தரமும் ஆற்றங்கரைக்குச் சென்றார்கள். அந்தத் தந்தியில் 'மாணிக்கத்தை 9-30 மணிக்குக் கிழக்கே வரும் வண்டியிலேறி 10-30 மணிக்குத் திருநெல்வேலிக்கு வந்து சேரும்படியும் அங்ஙனம் வருவதைப் பற்றி அந்தரங்கமான வரிடத்திலும் தெரிவிக்கக் கூடாதென்றும் கண்டிப்பாயெழுதியிருந்தது.' மாணிக்கம் மிகுதியும் ஆலோசனை செய்தான் எப்படியும் இப்பொழுது மணி 9 ஆய்விட்டது நாம் திருநெல்வேலிக்கு இந்த வண்டியில் போகாமலும் முடியாது.

வேறு ஆளை அனுப்புவதும் கூடாது போனால் தந்தையாரோடு காலை 4 மணி வண்டியில் தான் கலியாணபுரத்திற்கு திரும்பிவரமுடியும். ஆனால் கமலாபாய், அவசரமாக இன்றிரவு 1 மணி வண்டியில் திருவனந்தபுரம் செல்ல வேண்டுமென்று இன்று 7 மணிக்கு தெரிவித்தாள் நாம் என்ன செய்யலாம். அவள் திருவனந்தபுரத்துக்குப் போகும் போது நானும் கூட வருவதாகச் சொல்லியிருந்தேனே என்றெண்ணிய வண்ணம் 9 மணிக்குக் கணக்கப்பிள்ளை பங்களா போய்ச்சேர்ந்தான் அங்குக் கமலாபாயும் இல்லை

மகம்மதியையும் காணக்கூடவில்லை. பங்களாவின் காவற்காரன் உட்கார்ந்திருந்தான் ஆகலால் மாணிக்கம், அவனிடம் தனக்கு மிகவும் முக்கியமான அவசர வேலைகளிருப்பதின் நிமித்தம் தன் வீட்டின் மாடியை விட்டுக்கூட இறங்க முடியாதென்றும், ஆகவே 1 மணிக்குத் திருவனந்தபுரத்துக்குச் செல்வதாகச் சொல்லியிருந்த கமலாபாய் மகம்மதியை யழைத்துக்கொண்டு செல்லலாமென்றும், தான் மறுநாள் திருவநந்தபுரம் போய் அவர்களைக் கண்டு கொள்வதாகவும் விபரமாகக் கடிதம் எழுதி அவனிடம் கொடுத்து அவளிடம் கொடுக்கச் சொல்லிவிட்டு 9 மணி வண்டியில் திருநெல்வேலியை நோக்கிப் போய் விட்டான் அவன் அங்ஙனம் போன செய்தி ஒருவருக்கும் தெரியாது.



## அத்தியாயம் 13

### தாயைக் கொன்ற தனயன்.

சுந்தரத்திற்குச் சுவர்க்கத்திற்குச் சீட்டுக்கிழித்துக் கொடுத்துவிட்டு கணக்கன் தன் வீடு போய்ச் சேர்ந்தான். அவன் வீட்டுக்கு வந்ததும் தன்னிடமிருந்த மற்றொரு சாவியினுல் பூட்டியிருந்த கதவைத் திறந்தான். அன்றிராத்திரி காமாட்சியிடம் இராஜலக்ஷ்மிக்கு வசிய மருந்தைக் கலந்து கொடுப்பதற்காக ஏற்பாடு செய்திருந்தானுதலால், அலமாரியைத் திறந்து வசிய மருந்தை எடுத்துக்கொண்டு அவள் வெளியே போயிருக்கிருளா என்று கவனித்தான்.

கோடாங்கியிடம் தான் வாங்கிய வசிய மாத்திரைப் பொட்டலம் அப்படியே வைத்த இடத்தில் இருக்க அவன் கண்டான் உடனே அவனுக்கு அளவுமிஞ்சிய கோபம் உண்டாயிற்று காமாட்சி எப்பொழுது வீட்டுக்கு வருவாளென்றெதிர்பார்த்திருந்தான். இராஜலக்ஷ்மியின் வீட்டுக்குச் சென்றிருந்த காமாட்சி, சரியாய் 12 மணிக்குத் தன் வீடு வந்து சேர்ந்தாள் ஆறுமுகம், முதலில் தன் கோபத்தையெல்லாம் அடக்கிக்கொண்டு அவளை நோக்கி அம்மா! இவ்வளவு நேரம் எங்கே போயிருந்தாய்! என்று அன்பாய்க் கேட்டான். அவள் எல்லாம் உன் காரியமாய்த்தான் போயிருந்தேன் 12 மணி வரையில் காத்திருந்தேன் இராஜலக்ஷ்மி மாடியிலிருந்து இறங்கி வரவில்லை சிவகாமியைச் சரிப்படுத்திப் பாலை இராஜாம்பாளிடம் நானே மாடியிலேறிக் கொடுத்துவிட்டு வருவதாகச் சொல்லிப் பாலை வாங்கிக்கொண்டு போனேன் மாடியிலேறும் பொழுதே மருந்தை அதிற் கலக்கி, படிகளில் நின்றவாறே மாடியினுள் கதவின் பக்கத்தில், அம்மா இவ்வளவு நேரம் தூங்காமல் என்ன செய்கிருய்? என்று கேட்டுக்கொண்டே நாற்காலியில் அந்தப் பக்கமாகத் திரும்பி உட்கார்ந்திருந்த ராஜம்மாளைப் பாலைக் குடித்துவிட்டுப் படுத்துக்கொள்ளும்படி, மாடி வாயிலில்

நின்றே சொல்லிவிட்டுக் கீழே இறங்கினேன். கீழே இறங்கும்பொழுது ஒரு வேளை மருந்துக் கொடுமையால், இராஜம்மாள் ஏதேனும் சத்தம் போட்டுக்கொண்டு கீழேயிறங்கி வந்து விடக்கூடும் என்று சந்தேகித்து திறந்திருந்த வாசற் கதவை மில்லர் பூட்டுப்போட்டு பூட்டி உள்ளிருந்து பூட்டின பாவனையாய் அளிக்கதவின் உட்புறத்தில் தள்ளி விட்டுக் கூட வந்து விட்டேன். இவ்வளவும் ஓசை படாமற் செய்து முடித்துச் சாவகாசமாய் வந்து சேர இந்நேரமாயிற்று என்று சொல்லி முடித்தாள்.

ஆறுமுகம் பிள்ளைக்குக் கோபம் அதிகரித்தது உனக்கு என்னிடத்திலுமா பொய்' என்று கோபத்தோடு கேட்டான். காமாட்சியாச்சி அதைக் கேட்டுத் திகிலடைந்து இல்லையப்பா! உண்மையாய் மருந்தைப் போட்டுக் கொடுத்து விட்டேன். நான் சொன்னதில் இம்மியும் பொய் கிடையாது என்றுள் காமாட்சியின் பேச்சைக் கேட்கக் கேட்க ஆறுமுகம் பிள்ளைக்குக் கோபம் வளர்ந்துகொண்டே போயிற்று.

அவன் "நீ குருவிகுளம் ஜமீன்தாரிடம் இன்று 5000 ரூபாய் கைக்கூலி வாங்கி வந்திருக்கிருய் இராஜலக்ஷ்மியை அவர் மகனுக்கு முடித்து விடுவதாக வாக்களித்து வந்திருக்கிருய். அதற்காகவே இராஜாம்மாளை நீ நினைந்தோறும் குழையடித்து வருகிருய் என்பது எனக்கு தெரியாதென்று நினைத்தாயோ? உனக்குப்பணமே பெரிதாகப் போயிற்று. என்னைப் பற்றி உனக்கு எள்ளளவும நல்ல சித்தம் கிடையாது வாஸ்தவந்தான். நீ பெற்ற பிள்ளையா கெட்டுப் போகிருன். நான் உனக்கு சுவீகாரப் பையன். ஆனல் இதுவரை நீ என் விஷயத்தில் விபரீதமாக நடக்கவில்லை. ஆனல் முக்கியமான காரியம் இப்பொழுதுதானே வந்து சேர்ந்திருக்கிறது. இனி நான் எக்கேடு கெட்டாலும் உனக்கு ஆகவேண்டியதென்ன? நான் தொலைந்து போனல் நீ வேருெரு கழுதையைச் சுவீகாரம் செய்து கொள்கிருய். அவனுக்கு ஊரை வஞ்சகம் பண்ணிச்

சேர்த்த உன் சொத்துக்களைக்கொடுப்பாய். பணத்தின் மேல் கண்ணுயிருக்கும் உனக்கு என் மீது எப்படிப்பிரியம் உண்டாகும்? சரி. நான் உன்வீட்டைவிட்டு இப்பொழுதே போய் விடுகிறேன். நாளைக்கே உன்உயிரை முடித்துப்போடுகிறேன். வேறொருவன் வந்து இந்தச்சொத்துக்களை ஆளும்படிவிட்டுக் கொடுக்க மாட்டேன். அது நிச்சயம்'' எனக்கோபத்துடன் மொழிந்து வீட்டு வாயிற்படியிலிறங்கினன்.

காமாட்சியாச்சிக்குப்பயம் அதிகரித்து கோபமும் பிறந்தது. அவள் "ஆடே ஆறுமுகம் நான் சொல்வதை நிதானமாய்க்கேள். 'பதறுதே'. பதறின காரியம் சிதறிப்போம். நீ கூறியது வாஸ்தவமே. ஜமீன்தாரிடம் வாங்கிய ரூ 5000 இதோ என் கைப்பெட்டியில் தானிருக்கிறது. ஆனாலும் உனக்குப்பயந்து உண்மையில்மருந்தைப்போட்டு ராஜலக்ஷ்மிக்குக் கொடுத்தாய் விட்டது. அவள் இனி உனக்கே தான் மனைவி. நான் இன்றைக்கு இராத்திரியே எங்கேயாவது ஓடிவிடுகிறேன். நாளைக்கு ஜமீன்கார் வீட்டிலிருந்து ஆட்கள் தேடிவந்தால் நான் அயலூர்சென்றிருப்பதாக சாக்குப்போக்குச்சொல்லிச் சமாளித்து உன் காரியத்தை முடித்துவிடு. அயலூர் சென்று நான் கடிதம் எழுதி உன்னையும் ராஜம் மாளையும் அவ்விடத்திற்கு வரவழைத்துக் கொள்கிறேன். இது சத்தியம் என்ருள் ஆறுமுகத்திற்குத் சமுசயமும் கோபமும் மேலிட்டன. வீட்டின் வெளிக்கதவை உட்புறம் தாளிட்டுவிட்டு, அவளையழைத்துக் கொண்டு அலமாரியினருகிற் போனன். கதவைத்திறந்து, கோடாங்கி அளித்த வசிய மருந்து அப்படியே யிருப்பதை அவளுக்கு நேரிற்காட்டி "இப்பொழுதென்ன சொல்கிருய்; நீ சொன்னது பொய் தானே" என்றுகூறி அரிவாளைத் தூக்கினன். அப்பொழுது காமாக்ஷி நடுங்கிக்கொண்டே "அப்பா ஆறுமுகம், நீ மேல் தட்டில் வைத்திருக்கிற இந்த மருந்துப்பொட்டலத்தை நான் பார்க்கவில்லை. கீழ்த்தட்டில் இந்த ஓரமாக வைத்திருந்த சிவப்புக் காகிதச்சுருள் தான் கோடாங்கி தந்த மருந்தென்று எண்ணி அதையே எடுத்துக்கொண்டு போனேன். அதில்

வெள்ளை நிறமாகச் சீனி போன்ற ஒரு பொடியிருந்தது. அதைப்பாலில் கலந்து வைத்துவிட்டு வந்திருக்கிறேன்". என்று கூறினாள். இங்ஙனம் அவள் சொல்லிமுடிப்பதற்குள் "அடீ சொலைகார முண்டை! அது சுந்தரத்தைக்கொல்வதற்காக, மாணிக்கத்தினிடம் கேட்டுத்தந்திரமாய் வாங்கி வந்த விஷமல்லவா? விஷத்தைக்குடித்து, என்கண்மணி ராஜம்மாள் இந்நேரத்தில் இறந்து போயிருப்பாளே! இராஜம்மாளைக் கொன்ற நீயும், செத்துப்போய்விடு" என்றுகூறிக்கொண்டே அரிவாளை ஓங்கி, ஆட்டை வெட்டினாற்போலக் காமாட்சியை வெட்டிக் கீழே சாய்த்து விட்டான் அவள் ஒவென்றலறிக் கீழேவிழுந்து இறந்தாள். இதுநடந்த இடம் வீட்டிற்குள்ளே ஒரு அறையாதலால், அவள் அலறிய சத்தம் வெளிக்குக் கேட்டிராது. ஆறுமுகம் கொலையஞ்சாப் பாதகன். அவன் மனம் சிறிதும் துடிக்கவில்லை. கதவைச் சாத்திவிட்டுவெளித் திண்ணையில் வந்து படுத்தான். தூக்கம் வரவில்லை. மடியில் ரூ. 3000 இருக்கிறது. பெட்டிக்குள் 5000 இருக்கிறது. "என்ன செய்யலாம் இனிமேல்" என் ஆலோசித்தான். பளிச்சென்று அவனுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. காமாக்ஷியின் கொலையை மறைக்க ஒரு ஆலோசனை உண்டாயிற்று. என் தாயார் வாயுக்குத்தி இறந்து போனாள்" என்று வெளிக்குச் சொல்லிக்கொண்டு இரண்டாவது ஆளுக்குத்தெரியாமல், பொழுது விடியும் தருணத்தில் அவளை அடக்கம் செய்து விடவேண்டும். இப்பொழுது சுந்தரமோ! மீளாத உலகத்திற்குப் போய்விட்டான். அவனுக்காக "லீலா" பள்ளியறையிற் காத்திருப்பாள். ராஜலக்ஷ்மியைப்போல இனி நமக்குப் பெண் கிடைக்குமா? என்ற கவலை வேண்டியதில்லை. ராஜலக்ஷ்மி இறந்து இதற்குள் ஒரு சாமமாயிருக்கும். (இப்பொழுது மணி என்னவென்று சுந்தரத்தின் கைக்கடியாரத்தை எடுத்துப் பார்த்தான். மணி 1-15 ஆயிற்று.) சரி இக்கொலைக்காரக் கிழவி நம்மிடத்திற் சொல்லியபடி சுந்தரம் உண்மையில் 1 மணிக்குத்தானே நாகரத்தினம் வீட்டுக்கு இன்று சாந்தி கழிக்கச் செல்வதாய்ச் சொல்லியிருக்கிறான், ஆனால் லீலாவும் சிறந்த அழகுள்ள பெண்ணல்லவா? ஆகை த

யால் ராஜலக்ஷ்மிக்குப் பதில் நாமே சென்று லீலாவை மணந்து கொள்வோம் நம்மிடத்திலோ இப்பொழுது ஒரு பாய்க்கு குறைவில்லை ஆஹா இப்பொழுதே புறப்பட்டுப் போய்விடவேண்டியதுதான் என்று அவன் நினைத்துக் கொண்டான் உடனே தன்னிடத்திலிருக்கிற விலையுயர்ந்த ஆடைகளை யுடுத்தினன் போதாக்குறைக்குச் சுந்தரம் அணிந்திருந்த கடுக்கன் முதலியவைகளையும் அடுக்கடுக்காய் மாட்டிக்கொண்டான் நிலைக் கண்ணாடியின் அருகிற் சென்று தன்னுடைய பேரழகைப் பார்த்தான். சுந்தரம் மைசூர் மகாராஜா போல இருந்தால், நாம் என்ன தாழ்ச்சியா!

ஆஹா! மண்டலேசுவரனாகிய இராவணேஸ்வரன் சீதையை வசப்படுத்த அசோக வனத்திற்குச் செல்வது போல இருக்கிறது நம்முடைய பேரழகு! என எண்ணிய வண்ணம் கதவை யிழுத்து நன்றாய்ப் பூட்டிக்கொண்டு வெளியே கிளம்பினன். தெருவாயிலில் போலீஸ் உடையில் உட்கார்ந்திருந்த ஜவானொருவன், இவனைக்கண்டதும் எழுந்து நின்று ஐயா ஆறுமுகம் பிள்ளையவாள், என்று கூப்பிட்டான். வெள்ளிப்பூண் கட்டிய பொடிப் பிரம்பு ஒன்று கையிற் சுழல, காலிலே மெல்லிய ரப்பர் பூட்ஸ் துலங்க, அழகான பட்டுச் சரிகை வேட்டி அரையில் இலங்க. உட் சட்டைகள், மேற் சட்டைகள், காலர் டைகள் மாட்டி, காதில் இருளின் ஒளியைச் சீக்கும் வைரக்கடுக்கன்கள் பளீர் பளீரென்று டால் வீசப் பத்து விரல்களிலும் மோதிரங்கள் விதம விதமாக ஜொலிக்கத் தலையில் ஜரிகைத் தலைப்பாகையும் நெற்றியில் ஜவ்வாதுத் திலகமும் திகழக் கம்பீரமாய்க் காளை போல உல்லாசமாய் நடந்து செல்லும் மண்டலேசுவரர் கணக்கனர் ஆறுமுகம் பிள்ளைக்கு, ஜவான் கூப்பிட்ட சத்தம் காதில் விழுந்ததும் மனம் 'நறுக்' கென்றது.

ஆறுமுகம் பிள்ளை! தாங்கள் இந்நேரத்தில் எங்கே புறப்பட்டீர்கள். ஓஹோ! லீலாவின் சாந்தி கலியாணத்திற்காகவா? தாங்கள்தான் சாந்தி கழிக்கும் மாப்பிள்ளையோ! நீர் பெரிய டம்பாச்சாரி போலிருக்கிறீரே காலையில் கணக்கு

புஸ்தகத்தை இடுக்கிக்கொண்டு நிலுவை பிரிக்கக் கடைத் தெருவிலே சுற்றும் ஆறுமுகம் பிள்ளையா நீர்? பேஷ் லீலாவுக்கு எவ்வளவு ரூபாய் ஒப்பந்தம் பேசி யிருக்கிறீர். 10000 என்றும் யாரோ சேட் என்றும் அல்லவா சொன்னார்கள்? சரி! சரி! சரக்கு உள்ளூரில்தானா விலை மேவுகிறது? உமக்கு ஏது அவ்வளவு ரூபாய்' என்று எல்லாம் தெரிந்தவன்போல ஜவான் கேட்கத் தொடங்கினான்.

ஆறுமுகம் பிள்ளை புன் சிரிப்புக் காட்டி மீசையை முறுக்கி வாருங்கள், இப்படி உட்காருங்கள், வெற்றிலை பாக்குப் போடுங்கள் என்று தெருத் திண்ணையின் ஒரு மறைவான இடத்தைக் காட்டித் தானே முதலில் உட்கார்ந்தான். இருவரும் சற்று உட்கார்ந்து வெற்றிலை பாக்கு மென்றனர். ஆறுமுகம் பிள்ளை, இருட்டிலேயே நன்றாய் மணி பார்க்கத் தகுந்த அக்கைக்கடிகாரத்தில் மணியைப் பார்ப்பதற்காக அடிக்கடி டார்ச்சு லைட்டை அடித்தான், இடையில், 'ஐயா போலீஸ் வீரரே! பகலிலே நான் கணக்கன். இரவில் நான் மகராஜன் எனக்கு இருக்கிற சொத்து உண்மையாய் இந்த ஊரில் பெரிய பண்ணையாருக்குக் கூடக் கிடையாது, ஆனால் எல்லாம் என் தாயார் இறந்த பிறகுதான் என் ஆதீனத்துக்கு வரும். அவளுடைய மணியம் இன்றைக்கோ நாளைக்கோ அவளுக்கு வாயு உபத்திரவம் எப்பொழுதுமே உண்டு திடீரென்று அவள் வாயைப் பிளந்து விட்டால், எல்லாம் நம்முடைய ராஜ்யம்தான் என்றான்.

போலீஸ் ஜவான், 'ஐயா! ஒரு விஷயம் கேட்பதற்காகக் கோபிக்கக்கூடாது. கோபித்தாலும் எனக்கு நஷ்டம் ஒன்றுமில்லை. நீங்கள் வீட்டை விட்டு வெளியே வருவதற்கு சற்று முன்பு 'நீ செத்துப் போ' என்ற தங்களுடைய குரலையும் உடனே தங்கள் தாயார் 'ஓ' வென்றலறிக் கீழே விழும் சத்தத்தையும் நான் காதாரக் கேட்டேன் உண்மையாய்ச் சொல்லுங்கள். இல்லாவிட்டால் இப்பொழுதே ஸ்டேஷனுக்குச் சென்று தெரியப்படுத்தித் தங்கள் வீட்டைச் சோதனை போட ஏற்பாடு செய்வேன் என்றான். அதற்கு

ஆறுமுகம் பிள்ளை அதுவா! வேறொன்றுமில்லை என் தாயார் வாயு உபத்திரவத்தால் துடித்துக் கொண்டிருந்தாள். நான் ருது சாந்தி வேளை தப்பிப் போகிறதே என்று அவளை உதறி விட்டுக் குஷாலாய்க் கிளப்பினேன் அவள் வயிறெரிந்து என்னைத் திட்டினாள். நான் கோபத்துடன் அப்படிச் சொல்லி என் தாயாரை வைதுவிட்டு அவசரமாக வெளியே வந்து விட்டேன். இதுதான் உண்மையாய் நடந்த சமாச்சாரம். தாங்கள் பயமுறுத்தியபடி ஏதேனும் தடபுடலாய்ச் செய்து விடாதீர்கள். இப்படி நடந்தது என்று சமாசாரத்தையும் வெளியிடவேண்டாம். தங்களுக்கு இதோ ஓராயிரம் ரூபாய் தருகிறேன் பத்திரமாய்த் தங்கட்கு வைத்துக் கொள்ளுங்கள். நேரமாகிறது பெண் தூங்கி விடுவாள். நான் போகலாமா? என்று செல்வு பெற்றுக்கொண்டே 10 நூறு ரூபாய் நோட்டுக்களைப் போலீஸ் ஜவானிடம் நீட்டினான்

போலீஸ்காரன், ஐயா, இது என்னமோ மோசடியாயிருக்கிறது சரி இந்த ரூ நோட்டுக்களை இப்படியே ஜேபியில் போட்டு வைத்திருந்தால் அடுத்த தெருவில் பீட்டுக்கொடுக்கும் நம்முடைய சிநேகிதன் நம்மைக் கண்டதும், அண்ணே வெற்றிலை பாக்கு இருக்குதா, என்று என் ஜேபியைத் தடவு கையில் அவன் கையிற் சிக்கிவிடும். ஆதலால் ஒரு கழிவு காகிதம் தங்கள் ஜேபியிலிருந்தால் கொடுங்கள் என்று சொல்லிக்கொண்டே, போலீஸ்காரன் ஆறுமுகம் பிள்ளையின் சட்டைப் பைக்குள் கையை நுழைத்து ஒரு காகிதத்தை எடுத்து அதில் ரூபாய் நோட்டுகளைப் பொதிந்து டைரிப்புஸ்தகத்துக்குள் பத்திரமாக வைத்துக் கயிற்றோடு சேர்த்துக்கட்டிக் கொண்டான். சட்டைப்பைக்குள்ளிருந்து போலீஸ் வீரன் எடுத்த கழிவு காகிதம், ஆறுமுகம் பிள்ளை சுந்தரத்தினிடம் எழுதி வாங்கிய பிராமிசரி நோட்டு. இருந்தாலும் அவன், அதுவும் தான் தப்பித்துக்கொள்வதற்கு சாதகமே என மனதைத் தைரியப்படுத்திக்கொண்டு 'ஐயா! போலீஸ்காரரே நீர் இந்த ஊருக்கு இப்பொழுதுதான் புதிதாய் வந்திருக்கிறீரோ இவ்வளவு சிவப்பு நிறமாக இந்தவூர்

போலீஸ் ஸ்டேஷனில் ஒரு காகம் கூடக் கிடையாதே! என்று கேட்டான். போலீஸ் வீரன் சிரித்துக்கொண்டு ஐயா காகம் சிவப்பாயிருக்காது. ரோஜாப்பூ நிறத்தில் அல்லவா இருக்கும் நீர் புதிதாய்ச் சொல்கிறீர். சரி இருக்கட்டும். நான் அடுத்த ஊர் ஸ்டேஷனில் உள்ளவன். இப்பொழுது சில நாட்களாக இந்த வூர் பிட்டுக்காக வந்திருக்கிறேன். என்று கூறி விடை பெற்றுச் சென்றான்.

ஆறுமுகம் பிள்ளை, போலீஸ் வீரனிடம் தப்பிப் பிழைத்தோமே, என்ற ஆறுதலோடு விரைவாக நாகரத்தினம் வீட்டை நோக்கிச் சிங்கார நடை நடந்து போய்க்கொண்டிருந்தான். நிற்க

நாம் 9-வது அத்தியாயத்திற் கூறியிருக்கிறபடி தாசி நாகரத்தினமும், காமாட்சியாச்சியும் லீலாவின் ரகசியங்களை பேசிவிட்டு காமாட்சியாச்சி வீட்டுக்குச் செல்லும்பொழுது ஓர் பிச்சைக்காரன் பிச்சை கேட்டதும் அவள் அவனை வைதுவிட்டுச் சென்றதும், பின்னர் லீலா மேடையின்மீது தோன்றி ஒரு கவரில் இரண்டு அணா போநிந்து அப்பிச்சைக்காரனிடம் எறிந்ததும் நமது வாசகர்களுக்கு ஞாபகமிருக்கலாம். பிச்சைக்காரன் லீலா கொடுத்த கவரைவாங்கி தலைமறைவாக சென்று அதிலிருக்கும் ஓர் போட்டோவை பார்த்தவுடன் பலவித எண்ணங்கள் அவன் மனதிலுதித்தன அப்பொழுது அவன் அத்தெருவழியாப் போய்க்கொண்டிருக்கையில் தன்னெதிரே பம்பாய் ஸேட் போன்ற உடை தரித்து ஒரு கனவான் வந்துகொண்டிருந்ததை தற்செயலாய் சந்தித்து உடனே தன்னிடமிருந்த போட்டோவைப் பார்த்து சமுசயந் தெளிந்து அப்போட்டோவை அவரிடம் கொடுத்து சில ரகசியங்களை அவரிடம் சொல்லிவிட்டு அவருடைய பதிலை எதிர்பாராமலே தான் வந்தவழியே சென்று மறைந்தான்.



## அத்தியாயம் 14

### தாசியின் மோசம்.

தாசி நாகரத்தினம் லீலாவைப் பள்ளியறைக்கு அனுப்பிய பிறகு கதவைத்தாளிட்டு விட்டு உள்ளே படுத்தாள். மணி சரியாய் 11-ஆயிற்று. வாயிலில் ஒரு குதிரை வண்டி வந்து நின்ற சத்தம் அவள் காதிற்பட்டது. பிறகு டக் டக் என்ற 'பூட்ஸ்' கால்களின் ஓசையும் கேட்டது. யாரோ ஒருவர் வந்து வீட்டு வாசலில் நின்றுகொண்டு கதவைப் பலமாய் தட்டுவதும் அவளுக்குக் கேட்டது. நாகரத்தினத்திற்கு யோசனை பலமாயிற்று இருந்தாலும், அவள் "இது சுந்தரமாயிருக்காது வேறு யாரோ கதவைத் தட்டுகிறார்கள்"

என எண்ணிக்கொண்டே தைரியமாய்க் கதவைத்திறந்தாள் கதவைத்திறந்ததும் அவளுக்கு ஏற்பட்ட ஆச்சரியத்திற்கு அளவேயில்லை. தான் விளையாட்டாகக் கூறிய விஷயம் எப்படியோ உண்மையாய்ப் பலித்துவிட்டதே என்று, அவள் தான் காண்பது கனவோ, நனவோ எனவும் பிரமித்துக் கண்களைத் துடைத்துக்கொண்டு நின்றாள். அவளுக்கு முன் கெட்டையான, தடித்துக்கொழுத்த மனிதன் ஒருவன் நின்றிருந்தான். அவன் வெள்ளை நிறமான காற்சட்டையும், கூரான உயர்ந்த குஞ்சம் வைத்த குல்லாவும் அணிந்து கால்களில் உயரமான பூட்ஸ்களும் மாட்டியிருந்தான். நாகரத்தினம் அச்சமடைந்து ஒதுங்கி நின்றாள். "யாரையா? தாங்கள்"

என்று கேட்டாள். அதற்கு அம்மனிதன் "நான் ஒரு ஸேட் எனக்கு இருப்பிடம் பாம்பே" இந்த ஊருக்கு வியாபார நிமித்தம் இன்று காலையில் தான் நான் வந்தேன். சாயுங் கால வேளையில் யாரோ ஒருவர் என்னிடம் வந்து, "ஐயா, தாங்களா இன்றைக்கு இராத்திரி நாரத்தினம் மகள் லீலாவுக்குச் சடங்கு கழிக்கப் போகிறீர்கள்" என்று கேட்டார் நான் திகிலடைந்து, 'ஆமாம்' என்று ஒப்பம் போட்டுவிட்

டேன். பிறகு நம்மைத்தெரியாமலே நம்முடைய பெயரை யாரோ கட்டிவிட்டிருக்கிறார்களே என ஆச்சரியமடைந்து முகூர்த்த வேளையையும், தங்கள் வீட்டையும் விசாரித்து, இப்பொழுது இங்கு வந்து சேர்ந்தேன்" என்று கூறினன்.

பார்த்தாள் நாகரத்தினம் அவள் மனதில் பல யோசனைகள் படிப்படியாய்த் தோன்றின எப்படியும் சுந்தரம் ஒரு மணிக்கு, வந்து சேருவான் அதற்குள் இந்த ஸேட் லீலாவோடு இன்பம் அனுபவித்து வெளியே சென்றுவிட்டால் இவரிடமும் பணத்தை ப்பறித்துச் கொள்ளலாம் அவனும் நம்மிடம் சொன்னபடி பணத்தைக் கொடுத்து விடுவான்.

ஆனல் லீலா இதற்குச்சம்மதிக்க வேண்டுமே அவள் வேசி வீட்டில் வளர்ந்துவிட்டு வேசியாகாமல் வேறு பதி விரதையாக முடியுமா? கடவுளே அதற்குச் சம்மதிக்கவில்லை என்று தெரிகிறதல்லவா என தன்னைத்தானே தேற்றிக் கொண்டாள். பிறகு ஸேட்டை நோக்கி நாகரத்தினம் ஐயா தாங்கள் பெரிய பணக்காரராயிருப்பீர்களென்பதில் சந்தேகமில்லை லீலாவுக்குச் சடங்கு சழிப்பதாக உண்மையில் ஒப்புக்கொண்டிருப்பவர் வேறொருவர் ஆயினும் அவர் இங்கே வருவது ஒரு மணிக்குத்தான் அதுவரையிலும் தாங்கள் லீலாவோடு இருக்கலாம் பன்னிரண்டரை மணிக்கெல்லாம் தாங்கள் வெளியே போய்விட வேண்டியது இருக்கும் என்று தனக்குரிய தளுக்குக்களுடன் சிறிதும் சங்கோஜமின்றிப் பேசினுள் ஸேட் முகமலர்ச்சியடைந்து தாங்கள் எப்பொழுது போகச்சொன்னலும் வெளியே போய் விடுவதில் ஆக்ஷேபணையில்லை பூப்பல்லக்குப் பட்டணப்பிரவேசம் வரும் பொழுது லீலாவை நான் கண்ணுரப்பார்த்தேன் மனமார அவளை நான் அநுபவிக்க வேண்டுமென்பதே எனது ஆசை தாங்கள் எவ்வளவு ரூபாய் அதற்காக என்னிடம் அபேட்சித்தாலும் நான் அதனை அழகிலே சிறந்த அவ்வருமை லீலாவுக்குக் கொடுக்க என் மனம் பின்வாங்காது என்ருன் நாகரத்தினம் மனம் மிகுதியும் பூரிப்பு அடைந்தது இனி

வருபவர் 3000 கூறினார் தாங்கள் அதற்கு அதிகமாகக் கொடுக்க வேண்டும் அதாவது 4000 அதனோடு இன்றைய ரது சாந்திக்கலியாணச்செலவு ஆயிரமும் தாங்களே தான் பொறுத்துக்கொள்ள வேண்டும் ஆகவே ரூபாய் ஐயாயிரம் கொடுங்கள் என்று வாய்கூசாமல் அளந்து விட்டாள். சேட்டும் ஆஹா அப்படியே தந்துவிடுகிறேன் ஆனால் இதை நான் லீலாவின் கையிலேயே கொடுத்து விடுகிறேன் என்றான் நாகரத்தினம், எல்லாம் அவளுக்காகத்தானே அதைப்பற்றி எனக்கு ஆக்ஷேபனை என்ன? என்று கூறி மிகுந்த உபசாரங்கள் செய்து சேட்ஜீயைப் பள்ளியறைக்கு அனுப்பிவிட்டாள் பிறகு நாகரத்தினம் மனோராஜ்யம் பண்ணத்தொடங்கினாள். "லீலா, மிக்க யோகமுள்ளவளாயிருக்க வேண்டும் முதல் நாளிலேயே இப்படி பணத்திற்கு மேற் பணம் குவிகிறதைப் பார்த்தால் கொஞ்சநாளையில் இவளுக்குக் கிடைக்கக்கூடிய பணத்திற்கு இந்த வீட்டில் இடம் போதாது இந்தப்பணத்தை வைத்துக்கொண்டு எந்த ஜமீனை விலைக்கு வாங்கலாம்? என்ற ஆலோசனையிலேயே படுத்திருந்தாள். மணி பன்னிரண்டரை ஆகியும் அவளுடைய மனோராஜ்யம் முடிந்தபாடில்லை ஆனால் சேட்ஜீயும், லீலாவும் இந்திரனும் இந்திராணியும் போல மேடையிலிருந்து இறங்கி வந்தார்கள்.

சேட், "லீலா! நான் போய் வருகிறேன் எனக்கு $1\frac{1}{2}$ மணி வண்டியில் திருவனந்தபுரம் போகவேண்டுமாதலால் விடை பெற்றுக்கொள்கிறேன். அடுத்தமாதம் மறுபடி வருகிறேன்" என்றான். லீலாவும் புன்சிரிப்புடன் தலைகுனிந்து நின்றாள் நாகரத்தினம், "அம்மா லீலா, சேட் அவர்கள் ரூபாய் கொடுத்தார்களா?' என்று மெதுவாய் அவள் அருகிற்போய் காதுக்குள்ளே கேட்டாள். அதற்கு அவளும், ஆமாம் அம்மா! நீங்கள் தூங்கிவிட்டீர்களோ என்று சந்தேகப்பட்டு மாடியிலேயே அலமாரியில் வைத்துப் பூட்டியிருக்கிறேன். 5000 தானே. சரி சேட்ஜீக்கு உத்திரவு கொடுத்தனுப்புங்கள் 1-மணிக்கு சுந்தரம் வருவாரல்லவா? நேரமாகிறதே என்று சந்தோஷமாகவே கேட்டாள் நாகரத்தினம்

லீலாவின் செய்கைக்கு ஆச்சரியமடைந்து, 'அது உனக்கு எப்படித் தெரியும்? என்று கேட்டாள். அதற்கு லீலா எல்லாம் ஸேட்டுத்தான் என்னிடம் சொன்னார்கள். மேலும் இவையெல்லாம் தாசிகளுக்கு சகஜமே'' என்றும் தேறுதல் கூறினார்கள் என்றாள். பிறகு ஸேட் வெளியே போய்விட்டார். நாகரத்தினம், லீலாவை அருகிலிருத்தி ஆடையணிகளைத் திருத்தித் திரும்பவும் அழகாக அலங்கரித்து பள்ளியறைக்கு அனுப்பினாள்.

சரியாய் 1-30 மணியாயிற்று. சுந்தரம் வரவில்லையே என்ற கிலேசத்தில் நாகரத்தினம் தூக்கம் பிடிக்காமல் உட்கார்ந்திருந்தாள்.

ஆனால் சிறிது நேரத்திற்கெல்லாம் யாரோ கதவை பிடிக்கிற சத்தம் கேட்டு நாகரத்தினம் ஆவலோடு கதவைத் திறந்தாள். மண்டலேசுவரன் போலக் குஷாலாய் நின்று கொண்டிருக்கும் ஆறுமுகம் பிள்ளையைக் கண்ட கிழத்தாசி கணக்கப் பிள்ளை ஐயா! முதலாளி எங்கே? இந்நேரம் கழித்துத் தாங்கள் வந்திருக்கிறீர்கள்' என்று கேட்டாள் அதற்கு ஆழ்ந்த யோசனையோடு ஆறுமுகம் பிள்ளை பதிற் சொல்லுகிறான் —முதலாளி, சுந்தரம் பிள்ளையவாளுக்குத் தமக்கைப் புதல்வி ராஜலக்ஷ்மியை மணம் புரிவிப்பதாகத் தீர்மானித்திருக்கிறார்கள். கொழும்புப் பிள்ளை (இராஜம்மாளின் தகப்பனார்) தமது மகன் மாணிக்கம் பிள்ளையையும், மருமகனாக வரப்போகிற சுந்தரம் பிள்ளையவர்களையும் தூத்துக்குடிக்கு வரச்சொல்லி இன்றிரவு 9 மணிக்குத்தான் தந்தி வந்தது. அதனால் இருவரும் 9-30 மணி வண்டியில் அவசரமாகத் தூத்துக்குடிக்குப் போய்விட்டார்கள். போகும்பொழுது சுந்தரம் பிள்ளை, தனக்குறிய பட்டத்தை எனக்குக் கட்டிவிட்டார்கள். இதோ ரூபாய் 3000 இருக்கிறது இது அவர்கள் தந்த ரூபாய் தான். இப்பொழுது நான் தரித்திருக்கும் ஆடையாபரணங்களும் அவர்களுடையனவே! நாளை முதல் அவர்கள் இங்கு வந்து போயிருப்பார்களாம், என்றான்.

நாகரத்தினம் பதில் யாதும் சொல்லத் தோன்றாமல், எப்படியும் பெட்டிக்குப் பணம் வந்து சேர்ந்தாற் சரிதான் என்றெண்ணிக்கொண்டு, அவன் தந்த பணத்தைக் கை யேந்தி வாங்கினாள். ஆறுமுகம் பிள்ளை மேடையில் அலங் கரிக்கப்பட்டிருக்கும் பள்ளியறையினுள் நுழைந்தான்.

அவன் சுவர்களில் மாட்டியிருந்த தினுசு தினுசான பாரிசு மாதர்களின் பலவித லீலா விநோத கோலாகலப் படங்களை யும், பொம்மைகளும், பூச்சரங்களும், பட்டுக் குஞ்சங்களும் பூந்தொட்டிகளும் நிறைந்து, பஞ்சு மெத்தைகளும், வெல் வெட்டுத் தலையணைகளும் இடப்பெற்ற அலங்காரமான சப்ர மஞ்சக் கட்டிலையும் பார்த்தான். இன்னும் அவ்வறை முழு தும் கமகமவென்று பரிமளிக்கும் வாசனையை நுகர்ந்தான் இது வரையிலும் அவன் இம்மாதிரியான விசித்திர வைபவக் காட்சியைக் காணாதவனாதலால் அந்தக் காட்சிகளையே, பார்த்துப் பார்த்துக் கண்கள் பூத்துப் போயினான். வந்த காரியத்தையும் மறந்து விட்டான். சிறிது நேரத்திற்குள் அவனை ராஜலக்ஷ்மியைப் பற்றிய ஞாபகம் கப்பிக்கொண்டது! பிறகு தான் அவன் தன் சுய புத்தியுடன் 'இது லீலாவின் பள்ளியறை' என்பதை யுணர்ந்தான். லீலா எங்கே என்று அவ்அறை முழுதும் தேடினான் காணவில்லை. வெளிப் பிராந்தா, முன்புறத்துப் பிராந்தா ஆகிய எல்லா இடங்களி லும் பாக்கியில்லாமல் தேடிவிட்டான் ஒன்றும் பலனில்லை.

அவன் கண்கள் சிவந்தன மனம் கொதித்தது. நாகரத் தினம் தன்னை ஏமாற்றிவிட்டதாக அவன் எண்ணினான் மடமட வென்று மாடியிலிருந்து கீழே யிறங்கிவந் தான். நாகரத்தினம் 3000 ரூபாயை மாறி மாறி எண்ணிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். 'அடீ மோசக்காரி என்னை ஏமாற்றவா பார்த்தாய்?' என்று கூறிக்கொண்டே ஆறுமுகம் அவளருகில் ஓடிச்சென்று அவளது குரல்வளையை நெறித் துக் கொன்றுவிட்டு ரூபாய் 3000த்தையும் எடுத்துப்பையிற் போட்டுக்கொண்டான். நாகரத்தினம்; கீச்சுக் குரலில்

'ஐயோ' எனக் கதறிய வண்ணம் உயிர் துறந்தாள். மூன்று கொலைகளை ஒரே நாளிரவில் முடித்த அக்கொலையஞ்சாப் பாதகன் சிறிதும் மனத்தைச் சோரவிடாமல் கதவைத் திறந்துகொண்டு வெளிப்பட்டான். ஆறுமுகம் பிள்ளை வெளிப்பட்டு வருகையில், நாகரத்தினத்தின் வீட்டுமுற்றத்திற் போட்டிருந்த பந்தலின் ஒரு மூலையில் மேளகாரன் ஒருவன், தன் பக்கத்தில் ஒரு மத்தளத்தை வைத்துக்கொண்டு வயிற்றுவலி பொறுக்க முடியாமல், அப்பாடா! அப்பாடா! என்று கூவிய வண்ணம் உருண்டு கிடந்தான். ஆறுமுகம் அவனை நோக்கி. அடே, ஏண்டா கழுதை மாதிரிக் கத்திக் கிட்டுக் கிடக்கே என்று கேட்டான், அதற்குள் அம் மேளக்காரன் எழுந்து நின்று ஐயா! உள்ளே ஏதோ சத்தம் கேட்டதே என்ன விஷயம்? என்று கேட்டான். ஆறுமுகம் சிறிதும் அஞ்சாமல், அடே நீ உள்ளூர்க்காரனு, அல்லது அயலூர்க்காரனு? எனக் கேட்டான் அதற்கு அவன் எனது அசலூருங்க சாமி என்றுன். உடனே ஆறுமுகம அப்படியா இந்தச் சங்கிலியை உன் கையிலே அணிந்துகொள். யாரிடத்திலும் ராத்திரி இம்மாதிரி இரைச்சல் கேட்டதாகச் சொல்லிவிடாதே. சொன்னல் நீ உறுதியாய் அகப்பட்டுக் கொள்வாய் என்று கூறிச் சுந்தரத்தின் பெயர் தீட்டப் பெற்றிருந்த தங்கச் சங்கிலியைத் தன் கையிலிருந்து கழற்றி அவன் கையிலே மாட்டிவிட்டுச் சிறிதும் பயப்படாமல் தெருவுக்கு வந்து திரும்பிப் பார்த்தவாறே, நேரே ராஜலக்ஷ்மியின் வீட்டை நோக்கி நடந்தான். அப்பொழுது மணி 2½ இருக்கலாம். சிவகாமியம்மாள் வீட்டில் விளக்கை யேற்றி வைத்துக்கொண்டு கணவர் வரும் வழியை எதிர் பார்த்திருந்தாள். அவளுக்கு அப்பொழுது 4 மணியிருக்கு மென்ற ஞாபகம். அந்த நேரத்தில் ஆறுமுகம் பிள்ளை போய்ச் சேர்ந்தான். சிவகாமி ஐயா கணக்குப்பிள்ளை! ரெயிலுக்குப் போக வண்டி போட்டாயிற்று 4½ மணிக்கு எஜமான் வருகிறார்களே? இப்பொழுது மணி என்ன இருக்

கும்? என்றாள். ஆறுமுகம் பிள்ளை, மணி 4 ஆய்விட்டது தூங்கிப் போனேன் நீயும் வாயேன் வண்டிக்குள் இருந்து கொள். நானும் வண்டிக்காரனும் கோச்சுப் பெட்டியில் உட்கார்ந்து கொள்கிறோம். உங்கள் வீட்டு எஜமானுக்கு, என்னடா! நம்முடைய ஆத்துக்காரியே நம்மைப் பார்க்க ரயிலுக்கு வந்திருக்காளே என்று ரொம்ப சந்தோஷப்படுவார்கள். தங்களுக்கு எப்படி யோசனை? என்று கேட்டான். சிவகாமியம்மாளுக்கும் ஆறுமுகம் பிள்ளைக்கும் விசேஷமான அந்தரங்கங்களுண்டு என்பது நம் வாசகர்கள் நன்றாயறிவார்களல்லவா? ஆதலாற் சிவகாமியம்மாள் வாயெல்லாம் பல்லாய்ப் போயிற்று. அவள், ஆறுமுகம் பிள்ளையிடம் நெருங்கி தாங்கள் சொல்றதுக்கு நான் எதுத்துப் பேசலாமா. எங்க வீட்டெஜமானுக்கு அடுத்த எஜமானில்லியா தாங்கள். தங்கள் வார்த்தைக்கு மாறு சொல்றதுக்குத் தலைக்குமேல் தலையா? இதோ வந்து விட்டேன் என்று தடபுடலாய்ச் சொல்லிக் கொண்டு 5 நிமிஷத்தில் அலங்காரங்கள் செய்து கொண்டு கையிலே ஒரு ஹரிக்கேன் லைட்டை எடுத்து வந்தாள் அவள் ஆறுமுகம் பிள்ளை பெரிய ஷோக் மைனர் போல் நிற்பதைக் கண்டு ஏது தாங்களும் இன்றைக்குக் கலியாணமாப்பிள்ளை போலக் கிளம்பி விட்டீர்களே மஹாராஜதி ராஜனைபோல இருக்கிறதே உங்களைப் பார்க்க எஜமானை எதிர் கொண்டழைக்கவா இவ்வளவு அலங்காரங்கள் பேஷ்! என்று கூறி ஆறுமுகம் பிள்ளையின் அருகில் வந்து நின்றாள்.

அவன் எப்படியும் கள்ளவேஷம் போட்டுக்கிழவனைக் குளிப்பாட்டவேண்டியதுதானே' என்றான் சிவகாமி' ஷோக்கு அதிகமாய்ப் போயிட்டா நம்மை மறந்து விடுவீர்கள். அப்படித்தானே? என்றாள் ஆறுமுகம் அதெப்படி இந்த உயிருள்ளவரை உன்னை மறக்க முடியுமா? என்று கூறி 'நாமிரண்டும் ஜோடி இசைந்தாற் போலிருக்கிறது என்னவோ, கிழவனைக்கட்டி யழும்படிக்கும் உனக்கு விதித்திருக்கிறதே! என்று பரிதாபமாய்ச் சொன்னான் அவன் அப்படி இல்லை ஐயா சுவரை வைத்துத்தான் சித்திரம் எழுதவேண்டும் அது

ஒரு ஆவி அடித்துக்கொண்டு கிடந்தால், நம்முடைய பாடு வேட்டை முதலுக்கே மோசம் வந்து விட்டால், பிறகு நம்முடைய குஷாலுக்கு இடமெங்கே! பட்டா ஒருவர் மேலிருந்தாலல்லவோ சாகுபடி இன்னொருவர் செய்ய ஏதுவாயிருக்கும் என்று சிரித்தபடி சொல்லி முடித்தாள். இதற்குள் வண்டிக்காரன் ஐயா! என் மேலே புறவு குத்தஞ் சொல்லாண்டாம் வண்டி தயாராயிட்டுது என்று வெளியில் நின்றபடி கத்தினன். சிவகாமி மயில் போல ஒயிலாய் நடந்து வீட்டுத் தெருவாயிலுக்கு வந்து பெட்டி வண்டிக்குள் ஏறி உட்கார்ந்தாள் கணக்கன், அடேய்! நீ வீட்டிலேயே இரு காவலாக, நானே ஸ்டேஷனுக்குப்போய் எஜமானை அழைத்துக் கொண்டு வருகிறேன், என்று சொல்லி வண்டிக்காரனை வீட்டிலேயே இருக்கவிட்டுத் தானே வண்டி ஓட்டிக்கொண்டு சென்றான் 5 நிமிஷத்தில் ஸ்டேஷனுக்குப் போய்ச் சேரக் கூடிய வண்டி 15 நிமிஷமாகியும் ஸ்டேஷனை நோக்கிப் போகாமல் கலியாணபுரம் ஊரைக் கடந்து நேரே திருநெல்வேலிக்குச் செல்லும் வண்டிப் பாதையிலே விரைவாய்ப் போய்க்கொண்டிருந்தது.



## அத்தியாயம் 14

### மகம்மதியனது மகாமதி

கலியாணபுரம் ஊரைக் கடந்து செல்லும் கிழக்கு எல்லையில் ஓர் ஓடையின் பாலத்தின்மேல் நம் மகம்மதியன் உட்கார்ந்து மீன் பிடித்துக் கொண்டிருந்தான். பெட்டி வண்டி அந்த வழியாக வேகமாய் சென்று கொண்டிருந்தது. கணக்கன் ஆறுமுகம் பிள்ளை வண்டியோட்டிக்கொண்டே, யாரடா இவன் இந்நேரத்தில் மீன் பிடித்துக்கொண்டிருக்கிறவன் என்றதட்டிக் கேட்டான் அதற்கு மகம்மதியன், ஐயா நானுதான் மீன் பிடிக்கிற அஹம்மதுமீரான் ராவுத்தரு விடிந்து போயிட்டுதாக்குமின்னு வந்து மீனு பிடிச்ச உக்கார்ந்தேன். விடிய விடிய விடியாப் பொழுதாயிருக்கு வயித்தாத்திரம் இப்படீ அலையுறேன் சாமீ என்று சொல்லிக்கொண்டே வண்டிக்கு எதிர்ப்பக்கத்திலிருந்து, அதனைக் கடந்து மேற்கு நோக்கிப் போனான். போன முகம்மதியன் ஒரு பர்லாங்கு தூரத்திலே இரண்டு துவிச்சக்கர வண்டிகள் விளக்கு ஒன்றும் போடாமல் வெகு வேகமாய் வருவதைப் பார்த்து ஒரு ஓரமாய் ஒதுங்கி நின்றான். அப்பொழுது சைக்கிள்களில் வந்தவர்களில் ஒருவன் மகம்மதியனைப் பார்த்ததும் சட்டெனக் கீழே குதித்து அவனருகிற்சென்று என்ன ஓய்! டில்லி பாஷா, நேற்றுக் காட்டுப்பட்டி வழியாய் இந்நேரம் இப்படி வந்தீர். இன்றைக்கு இந்நேரம் இப்படி மீன் பிடித்கிற மாதிரி இங்கேயிருக்கிறீர், நீரும் பலே ஆசாமிதான் போலிருக்கே. நேற்றுப் பாவநாசம் மலைக்குச் சிவகங்குத் தேவரை பார்க்கப் போனீரே. இன்றைக்குஇராத்திரி காட்டுப்பட்டிக்கு அவர் வருவதாக அங்கே பேசிக் கொண்டார்களா? என்று கேட்டான். முகம்மதியன் சற்று நிதானப்படுத்தி அதெல்லா மொண்ணுமில்லெ அண்ணே! நேத்து றவ்வே நானு மலையிலிருந்து புறப்பட்டுக் காலையிலே யிங்கே வந்தேனுங்க.

இந்த வூருலே என் தங்கச்சியிருக்கு, பாத்தூட்டுப் போக லாமின்னுட்டு இங்கேயே தங்கிட்டேன் நானு. நேத்து மலை யிலே அப்படி யொண்ணும் பேச்சுக் கீச்சு இல்லை. இன் னெக்கிப் புறப்புருக்கிறுமாயிருக்கலாம் நமக்கித் தெரியாது. மேலும் நம்ம கிட்ட அதெல்லாம் நம்பிக்கையாய்ச் சொல்லு வாங்களா? என்று சொன்னன் அதற்கு அம்மனிதர்களில் ஒருவன் அப்படி யில்லை சாஹேப். இன்னிக்கிப் பொழுது சாயத்தான் அந்தப்புறப்புருக்கிறும் நிச்சயமாயிருக்கும் ஏனென் றால், காட்டுப்பட்டிச் சேர்மன் எலக்ஷனில் பார்வதிநாத பிள்ளை ஜெயிச்சுட்டான்னுட்டு நம்ம மச்சான் தேவர்வா ளுக்கு மூக்குமேலே கோபம் வந்திடுச்சு. உடனே தம்பிக் குச் சொல்லி அனுப்பிட்டாரு.

சிவகங்குத் தேவரு சரியாய் 3 மணிக்கி இன்னெக்கி ருவு காட்டுப்பட்டிக்கு வாராரு. பார்வதிநாத பிள்ளை தலை யெக் கொய்து பாக்கியலக்ஷ்மி வீட்டையும் கொள்ளையடிச் சுப்போறதாவப் புறப்புருக்கிறும். இந்த வூரிலே யாரோ மா யாண்டி என்னூட்டு ஒரு மாந்திரவாதி யிறுக்கானும் அந்தப் பய நேத்து ஏதோ ஆட்டத்தைக் கலச்சுட்டானுட்டுத் தேவருக்குக் கோவம் அவனெப் பிடிச்சுக்கிட்டு வரணுமின் னூட்டு எங்களெ அனுப்பினாறு. நாங்க, அவன் வீட்டுக்குப் போனோம். அந்தப்பய வீட்டிலே இல்லை, இப்போ மறவாக் குறிச்சியிலிருந்து நம்ம கூட்டாளிகள் றண்டுபேரு இன்னஞ் செத்த நேரத்திலே இப்படி வருவாங்க அவுங்களைக் கூட் டிக்கிட்டு ஊருக்குப் போகணும் என்று கதை வளர்த்தான்.

மகம்மதியன், ஆஹா! அப்படியா கிழக்கே ஒரு பர் லாங்கு தூரத்தில் இரண்டு பேரு பேசிக்கிட்டிருந்தாங்க. யரோ இன்னிட்டு நான் சும்மா வந்துட்டேண்ணே ரண்டு நிமிசத்துக்கு முந்திச் சரியான வேட்டை கூடக் கண்டேன். துணைக்கு ஆள் இல்லேயின்னு சும்மா விட்டுட்டேன். அந்த வேட்டை, இப்பத்தான் இப்படிப்போவுது. இன்னும் ரொம் பத் தூரம் போயிருக்காது. மாயாண்டி இந்நேரம் காட்டுப்

பட்டியில் தானிருக்கான். அந்த விசயம் நானே இந்த சைக்கிளிலே ஓட்டமாப் பேரய்ச் சிவகங்கு மச்சானிட்டத் தெரியப்படுத்துறேன். நீங்களும் மறவாக்குறிச்சி அண்ணமாருமாகச் சேந்து நான் சொன்ன வேட்டையைப் பிடியுங்க நானு முந்திக் கூட்டிக் காட்டுப் பட்டிக்குப் போறேனுங்க. நாளை ஊருக்குப் போகணும் என்றான்.

உடனே மகம்மதியன் ஒரு சைக்கிளில் தான் ஏறி வேகமாகக் காட்டுப் பட்டியை நோக்கிப் போய்க்கொண்டிருந்தான். கிழக்கு நோக்கிச்சென்ற இருவரும் ஒரே சைக்கிளில் ஏறி உட்கார்ந்தபடி மறவாக்குறிச்சி கூட்டாளிகளையும் மகம்பதியன் குறிப்பிட்ட வேட்டையையும் தேடிச் சென்றார்கள்.

துவிச்சக்கர வண்டியிற் கடுவேகமாய்க் காட்டுப்பட்டியை நோக்கிச்சென்ற மகம்மதியன் சரியாய் 3 மணிக்குள்ளேயே பார்வதிநாத பிள்ளை வீடுபோய்ச் சேர்ந்தான் அப்பொழுது அவர் வீட்டிற் கடியாரம் மணி 3 அடித்தது. பார்வதிநாத பிள்ளை வீட்டுக்கு மேற்கே 20 அடி தூரத்தில் பாக்கியலக்ஷ்மியின் வீடு இருந்தது. மகம்மதியன் பார்வதிநாத பிள்ளையின் வீட்டிற்குள் நுழைகையில் கறுத்து உயரமான தோற்றத்தையுடைய ஒரு மனிதன் 'மின்சார பேட்டரி' விளக்கை கையிலேந்தி மற்றொருவன் பின் தொடர்ந்துவர ஒரு பெட்டி வண்டியினின்றிறங்கிப் பாக்கியலக்ஷ்மியின் வீட்டு வாயிலில் நுழைவதை அவன் பார்த்தான். அங்ஙனம் செல்பவர் சிவகங்குத் தேவனும் அவனது வகையராக்களுமே என்பதை மகம்மதியன் தெரிந்துகொண்டான். சிவகங்குத் தேவன் ஒரு இடத்திற்கு கொள்ளை யடிக்கச் செல்வது அதிசயமான ஒரு சம்பவமாகும். பெட்டி வண்டி சைக்கிள் வண்டி, வில் வண்டி, குதிரை, ஆகிய இவைகள் ஒன்றில் தான் அவன் ஏறிவருவது வழக்கம். அங்ஙனம் அவன் ஒரு இடத்திற்கு இராத்திரி வருவதென்றால் முக்கியமாய் அவ்வூரிலுள்ள பிரபலமான தன் சகாக்களுக்கும் முன்

கூட்டி அறிக்கைகள் அனுப்பி விடுவான். சிவகங்குவின் பெயரைக் கேட்டால் திருநெல்வேலி ஜில்லாவில் அழுத பிள்ளை வாய் மூடும். ஜெகமெல்லாம் புகழ்பெற்ற ஜெயவீர திருடா சிகாமணி ஜம்புலிங்கத் தேவனின் கீர்த்திப் பிரதாபங்களும் சிவகங்குத் தேவனது புகழுக்குப் பிற்பட்டனவே சிவகங்கு எந்த வீட்டில் வந்திறங்கினாலும் அவ்வீடு மிகுந்த சொத்துக்காரர் வீடாகவே யிருக்குமாதலால் அவர்கள் தம் கைவசமுள்ள பணத்தையெல்லாம் ஒரே மொத்தமாக அவன் முன்னே கொண்டுவந்து வைத்துவிடவேண்டும் அவன் அந்தப் பணத்தில் பெரும் பாகத்தைத் தான் எடுத்துக்கொண்டு மீந்த பாகத்தைச் சொத்துக்குரியவரிடமே கொடுத்து விடுவான் மேலும் அவன் தர்மிஷ்டர்களான செல்வவான்களிடம் இம்மாதிரி செய்வதேயில்லை· தனது செங்கோல் முறைமைக்கு இடுக்கண் விளைவிப்பவர் எவராயிருந்தாலும் அவரது உயிரைத் தப்பவிடுவதில்லை, சின்னஞ் சிறு தொகையான பணத்தை அவன் ஒருநாளும் விரும்புவதில்லை. ஏழைகளையும் நல்ல மனிதர்களையும் அவன் நெருங்குவதில்லை. இவனுடைய சாகஸமான திருட்டுகளையும் கொள்ளைகளையும் எழுதுவதென்றால் அது தனிப்புஸ்தகத்தில் அடங்கும். போலீசார் எவ்வளவு முயன்றும் இவனுடைய கொட்டத்தைப் பத்து வருஷங்களாகச் சிறிதும் அடக்க முடியவில்லை. இவனைப் பிடித்துக் கொடுப்பவருக்கு 'ஆயிரம் ரூபாய் பரிசு' என்று அரசாங்கத்திலே விளம்பரப் படுத்தி வருஷங்கள் மூன்றாயின. போலீசார், இவனது இருப்பிடத்தைக் கண்டு பிடிப்பதற்காகப் பாவநாசம் மலைகளுக்குள் நுழைந்தவர் எவரும் திரும்பி வந்ததே கிடையாது. இவனது கொடுங்கோலாட்சியில் மரண தண்டனை விதிக்கப்பட்ட சப்இன்ஸ்பெக்டர்கள் சிலர். சர்க்கிள் இன்ஸ்பெக்டர் ஒருவர் போலீஸ் வீரர் பலர்.

மகம்மதியன் பார்வதிநாத பிள்ளை வீட்டுக்குள் போய் அவரை யெழுப்பி ஐந்து நிமிஷத்திற்குள் அவர் வீட்டிலுள்ள பணமுடிப்புக்கள், நகைகள், பண்ட பாத்திரங்கள் எல்லாவற்றையும் அவர் வீட்டின் பின்புறத்தில் உள்ள பாழடைந்து தண்ணீரே யில்லாமல் தூர்ந்து கிடந்த ஆழமான கிணற்றிலே பந்தோபஸ்தாய்ப் பத்திரப்படுத்தினன். பிறகு அவன் அவர் வீட்டிலுள்ள குழந்தைகள் ஆடவர் பெண்டிர் முதலியவரைக் கயிற்றால் கட்டி கிணற்றுக்குள்ளே இறக்கி விட்டான். அப்பால் பார்வதிநாத பிள்ளையும் தானும் உள்ளேயிறங்கிக் கிணற்றின் பாலக் கல்லின் அடியில் மறைவாக ஒரு புறத்தில் உட்கார்ந்து கொண்டார்கள். பார்வதிநாத பிள்ளையின் வீடு, பூட்டினபடியே யிருந்தது. வீட்டிலுள்ளவாகள் எல்லோரும் வெளியூருக்குப் போய்விட்டார்போலச் செய்யப்பட்டிருந்தது. பார்வதிநாத பிள்ளைக்கு மகம்மதியனுடைய செய்கை பெரிதும் வியப்பை விளைத்தது.

10 நிமிஷங் கழித்து ஒரு விளக்கு வெளிச்சத்துடன் சிலர் பார்வதிநாத பிள்ளையின் வீட்டுக்குள் நுழைந்தனர். வீடு பூட்டப்பட்டிருந்தபடியால், பூட்டை யுடைத்து அவர்கள் உள்ளே சென்றனர். ஒரு வாரமாய் அந்த வீட்டினுள் ஆள் நட்மாட்டமே யிருந்திராது என்று சொல்லும்படி வீடு பூராவும் சுத்தமாயிருக்கக்கண்டு அவர்களுக்கு ஆச்சரியம் மேலிட்டது. அவர்கள் வீடு தோட்டம் முதலிய எல்லா இடங்களும் சுற்றினர். பாழங் கிணற்றின் பக்கத்திலும் வந்து நின்றனர்.

'இது பாழங் கிணறு படவா! பணத்தை வாரி விட்டு இந்தக் கிணற்றை வெட்டினன். கொஞ்சகாலந் தண்ணீர்

ஊறிற்று. பிறகு தண்ணீரே கிடையாது' என்றான். அவர்களில் ஒருவன். மற்றவன், சரி போனாற் போகிறது இன்று காட்டுப்பட்டிக்கு நாம் விஜயஞ் செய்ததில் பெண் உருப்படி ஒன்று கைவசமாயிற்று. மாயாண்டி நேற்றுக் கொள்ளிப் பிசாசை ஏவி நம்முடைய அண்ணனை ஏமாற்றினதற்கு அகப்பட்டான். சரி நாளை முதல் நம்முடைய விரதம் தொடங்குகிறது ஏழுநாள் விரதமுடிவில் நம்முடைய காளிகா தேவிக்கு இரண்டு நரபலி கொடுக்கவேண்டும். அதற்கு மாயாண்டியும் பார்வதிநாதனும் அகப்படுவார்கள் என்றெண்ணினேன். இந்தப்பயல் எப்படியோ சந்தடி இல்லாமல் ஊரைவிட்டுக் கிளம்பி யிருக்கிறான். நமக்கு 'நரபலிக்கு ஆள் வேண்டுமே! காளி தேவியின் அருளிருந்தால் எப்படியும் இன்னொன்று ஏழுநாட்களுக்குள் சிக்காமலா போகின்றது. ஆனால் விரத நாட்களில் நான் நம்முடைய குகையை விட்டுக் கிளம்ப முடியாது. சரி எப்படியும் இசுபரியினருள் கூட்டி வைக்கிறது! என்றான். மற்றவன் மச்சான்! நீங்க எங்கெங்கேயோ பொண்ணு பாத்தயளே, இந்தப் பொண்ணைக் கட்டிக்கிடுங்க. நல்ல ரொம்ப அழவான பொண்ணு. என்று கூறினான். அதற்கு முதலிற் பேசியவன், விரதம் அநேகமாய் இன்றைக்கே தொடங்குகிறது. இன்று முதல் நான் துர்க்கிருத்தியங்கள் எதுவும் செய்யலாகாது. ஆதலால் நம்முடைய காளி தேவி பூஜையை முடித்து ஏழா நாளிரவில் இப்பொழுது நம்மிடத்திற் சிக்கியுள்ள பெண்ணையே விவாகம் செய்து கொள்வதாக அவளைப் பார்த்ததுமே தீர்மானித்து விட்டேன்' என்றான்.

இப்படி இவர்கள் பேசிக்கொண்டது கிணற்றிற்குள் மேலாக உட்கார்ந்திருந்த இருவருக்கும் தலையிலடித்தாற் போலக் காதிற் கேட்டது பார்வதிநாத பிள்ளை தன் வீட்

டிற்குள் நுழைந்தவர்கள் சிவகங்குத் தேவர் வகையராக்களே யென்பதை யுணர்ந்தார். பிள்ளையவர்களுக்கு ஆச்சரியத்தின் மேலாச்சரியம் பொங்கிற்று. ஆனால் தன்னுடைய உயிரையும் சொத்துக்களையும் காப்பாற்றிய மகம்மதியனுக்கு நன்றி கூற 'ஸாஹேப்! நீர் உம்முடைய பெண்டாட்டி பிள்ளைகளோடு கோடி வயதுக்கு க்ஷேமமாய் வாழ்ந்திரும். என் குடும்ப மெல்லாம் உம்முடைய உதவியால் உயிர் பிழைத்தது. என்று சொல்லிக்கொண்டே அவனிருந்த இடத்தில் தேடிப் பார்த்தார். பக்கத்திலிருந்த மகம்மதியனைக் காணவில்லை அவன் மாயமாய் மறைந்தான். பிள்ளையவர்களுக்கு நடந்த வையெல்லாம் மாயமோ! என்ற சந்தேகங் கூட ஏற்பட்டது. பிறகு அவர் பாழுங் கிணற்றிலிருந்து வெளியேறி குடும்பத் தாரோடு போலீசு பந்தோபஸ்து சகிதம் வீட்டைவிட்டு வெளியேறாமல், தம்முயிரைக் காத்த மகம்மதியனை நினைத்த வண்ணம் ஏழுநாட்கள் வரை ஊரில் தங்கியிருந்தார்.



# அத்தியாயம் 14

## சந்நியாசியின் சாதுரியம்

தாமிரபரணி நதியின் உற்பத்தி ஸ்தானத்தில் 'பாவ நாசம்' என்றொரு அழகிய சிவக்ஷேத்திரமுண்டு. அவ்வாலயத்திற்கு மேற்கே 3 மைல்கள் மலைமேலேறிச் சென்றால் 'கலியாண தீர்த்தம்' என்னும் அருவி ஒன்று காணப்படும்.

காட்டுப்பட்டியில் பஞ்சவர்ணக்கிளி பாக்கியலக்ஷ்மி வீட்டிலே சிவகங்குத் தேவன் கொள்ளையடித்துத் திரும்பிய மறுநாள் மத்தியானம் கலியாண தீர்த்தத்துக் கருகில் பெரிய சந்நியாசி ஒருவர், மூக்கைப் பிடித்துக்கொண்டு முணுமுணுவென்று ஜபித்த வண்ணம், கடுவெயிலின் கொடுமையையும் சிறிதும் பாராட்டாமல் உட்கார்ந்து தபசு செய்து கொண்டிருந்தார். அவருடைய முகப்பொலிவும் அணிந்துள்ள தவவேடச் சின்னங்களும், பக்கத்தில் வைக்கப்பட்டிருந்த கமண்டலமும், முழங்காலைச் சுற்றி மாட்டிய சிங்கத்தோற் பட்டையும், முழங்கையிலிருந்து தரையிலூன்றிய மாத்திரைக்கோலும் பார்த்தால் இந்த முனிவரே அந்த சாக்ஷாத் அகஸ்தியரோ என்று செலலும்படி யிருந்தது. இவருக்கு முன் இருந்த மூன்று சிறு ஓமகுண்டங்களில் சமித்துக்கள் எரிந்துகொண்டிருந்தன. மணி சரியாய் ஒன்றரை யிருக்கும். கதிரவன் தனது உக்கிரமான கிரணங்களைச் சொரிந்து பூமியைப் பிளந்து கொண்டிருக்கிறான். பாறைகள், கால் பாவ முடியாதபடி உஷ்ணத்தால் கொதித்துக் கொண்டிருந்தன. முனிவர் சிறிதே கண்ணை விழித்துப் பார்த்தார். அவருக்கு முன்னால் பட்டை பட்டையாய் விபூதி பூசித் தூய வெள்ளையாடைகள் உடுத்துக் கன்னங்கறேலெனக் கறுத்த மேனியர், மீசையை முறுக்கிய ஆடவரிருவர் உட்கார்ந்திருந்தனர்.

சந்நியாசி—குழந்தைகளே! நீங்கள் யார்? இங்கே வந்து என் தவத்தை ஏன் கலைத்தீர்கள்? இதோ சாபத்தைப் பிடியுங்கள். என் தவத்தைக் கலைத்தமையால் நீங்கள் பஸ்மீகரமாய்ப் போய்விடுவது நிச்சயம். சிறிதும அச்சமின்றி, சமயத்தையும் நோக்காமல் மகா தவசிரேஷ்டர்களது முன்னிலையில் நீங்கள் உட்காரலாமா? இந்த உங்களுடைய துணிவு முனிவர்களிடம் பலிக்குமா? 'துறவிக்கு வேந்தன் துரும்பு' இது தெரியாதா உங்களுக்கு? [இடுப்பிலே செருகியிருந்த விபூதிப் பையைக் கையிலெடுத்து, சிவப்பு நிறமான ஒரு பொடியை அள்ளி முனிவர் ஓமகுண்டத்தில் எறிகிறார்.]

இதோ பாருங்கள்—'நீவிர் பஸ்மீகரமாகுக.'

அவர் முன்னிலையில் உட்கார்ந்திருந்த ஆடவர் இருவரும் இதேதடா! கிணறு வெட்டப் பூதம் புறப்பட்ட கதையாய் மகாமுனிவரது கோபத்திற்கு ஆளாய் விட்டோமே! என்ற நடுக்கத்துடன், வாய் குழறி யெழுந்து நின்று, சாமீ! காப்பாற்றவேண்டும். அறியாக் குளந்தைகள் தெரிஞ்சு தெரியாமற் செய்தாலும் சாமிதானே காப்பாத்தணும்' எனச் சொல்லிக்கொண்டே முனிவரது காலில் விழுந்து கையை யெட்டிப் பிடித்துக்கொண்டாாகள்.

சந்நியாசி, சட்டென அவர்களை உதறி விட்டார். பிறகு அவர்,

'உமாபதி! சாம்பசிவம்! சற்குருநாதா! அறியாப் பதர்கள் செய்ததைப் பொருட்படுத்தலாகாது. கோபம் பாபம். குற்றத்தை யறிந்து மன்னிப்புக்காக மன்றாடுகிறவர்களை க்ஷமிப்பது நமது கடமை, என்று சொல்லியவண்ணம் அவ்விருவரையும் அப்படி உட்காருங்கள் என்று ஒரு மர நிழலை சுட்டிக் காட்டினார். தாமும் அம்மர நிழலில் ஒரு உயரமான இடத்தில் ஒய்யாரமாக உட்கார்ந்து கொண்டார்.

ஒருவன்—சாமி இருப்பது எந்தத் தேசம்! இந்த அத்தானக் காட்டில் இப்படிக் கடுந்தவசு பண்றது எதுக்கு?

என்னமோ ஏழைகள் பேரிலே இரக்கங் காட்டிக் கொஞ்சம் உத்தரவாகட்டும் சாமீ! (கும்பிடுகிறான்)

சந்நியாசி—சரிதான் அப்பா! (வெறுப்புடன்) 'குண மென்னும் குன்றேறி நின்றார் வெகுளி கணமேனும் காத்த லரிது' தெரியுதா உங்களுக்கு. பெரிய ரிஷீஸ்வரருக்கு கோபமே வராது வந்தால் இலேசிலே தணியாது. நீங்கள் நல்ல புண்ணியஞ் செய்தவர்கள் இன்று தப்பிப் பிழைத் தீர்கள். நம்முடைய கோபத்தை ஆற்றிக்கொண்டோம். பெரியவாளிடம் எப்படி நடந்துகொள்ள வேணுமென்பதை இனிமேலாவது தெரிந்து நடவுங்கள். கொஞ்ச நேரத்தில் சாம்பலாய்ப் போகவேண்டியது சரி இருக்கட்டும். சந்நி யாசிகளைக் கண்டால் உங்க பேரென்ன? ஊரென்ன குல மென்ன? என்று கேட்கப்படாதென்ற ஞாயம் கூட உங் களுக்கு தெரியலையே? நான் யார் தெரியுமா? என்னுடைய பிரதாபத்தை உங்களிடம் சொல்லி எனக்கு ஆகவேண்டிய காரியம் ஒன்றுமே கிடையாது. இருந்தாலும் இப்படிப்பட்ட ரிஷிகளும் இக்காலத்திலிருக்கிறார்களா? என்பதை நீங்கள் தெரிந்து கொள்வதற்காகவும் தெரிந்து உலகத்திலே பரவச் செய்வதற்காகவும், சில சங்கதிகளை உங்களுக்குச் சொல்லு கிறேன். நான் அகஸ்திய மகாமுனிவரைக் குறித்து 40 நாட்கள் உண்ணாவிரதமிருந்து அவருடைய அநுக்கிரகத் தினால் ஹிமோத் பர்வதத்திலிருந்து ஒரே நாள் இரவில் கனகக்குளிகையின் உதவியால் இங்கு வந்து சேர்ந்தேன். எனக்குத் திரிகாலமும் தெரிந்து கொள்ளக்கூடிய ஆற்றல் உண்டு. அதை இப்பொழுதே உங்களுக்குப் பிரத்தியக்ஷ மாகக் காட்டப் போகிறேன். நீங்கள் இருவரும் சாதுக் களைப்போல உட்கார்ந்து பாசாங்குசெய்கிறதாகத்தெரிகிறது.

நீங்கள் சாதாரணப் பேர்வழிகளில்லையென்பது ஞான திருஷ்டியால் நமக்கு விளக்கமாகிறது, நான் பதினைந்து வருஷ காலமாக ஹிமாசலத்தில் ஹரித்துவாரத்தில் கங்கா தேவியைக் குறித்துப் பெரிய தபசுகள் முடித்து அஷ்டமா

சித்திகளெல்லாம் அடையப் பெற்றிருக்கிறேன். எனக்குத் தெரியாத சித்துக்கள் இந்த உலகத்திலே கிடையா. நீங்கள் கொள்ளைக் கூட்டத்தவராக நமக்கு ஞான திருஷ்டியில் உதயமாகின்றது. உண்மைதானே ஆனால் இவ்விஷயத்தில் என்னிடம் உண்மை கூறுவதில் நீங்கள் சிறிதும் கலங்க வேண்டாம் வடநாட்டிற் பிரபல இராஜ திருடனான நானாபராரியும், தென்னாட்டிற் கீர்த்திவாய்ந்த பக்காத் திருடன் கூளங்காளனும் நமக்குப் பரமார்த்த சிஷ்யர். நம்மால் ஒருவருக்கும் ஒரு தீங்கு விளைவதில்லை. உங்களைப் பற்றிய விஷயங்களை நீங்களே சொல்லாவிட்டாலும், நாம் ஞான திருஷ்டியால் எல்லாவற்றையும் பூட்டுப் பூட்டாய்க் கூற முடியும் நீங்கள் கொள்ளைக்காரர்களானாலும் ஆசாரத் திருடர்கள். பணக்காரர்களைத்தான் கொள்ளையடித்துச்செல்லும் வழக்கம் வைத்திருக்கிறீர்கள். ஏழை ஜனங்களை துன்புறுத்துவதில்லை அம்மட்டில் நீங்கள் நல்லவர்களே இன்னும் உங்களுடைய பெயர், ஊர், ஜாதி, முதலிய விபரங்களையெல்லாம் நம்முடைய ஞானோதய மகிமையால் துப்புரவாக சொல்லுகிறேன் சற்றுப் பொறுங்கள். (எனச் சொல்லி கண்ணை மூடி மஞ்சள் நிறமான ஒரு பொடியை அள்ளி நெற்றியில் அணிந்துகொண்டே, முணு முணு வென்று ஏதோ மந்திரம் ஜபிக்கிறார். முன்னால் உட்கார்ந்திருந்த மனிதர் இருவருக்கும் கை கால் வில்விலத்துப் போயிற்று. (சாமியார் திடீரெனக் கோபமடைந்து சாபம் போட்டுவிடுவாரோ என்ற பயத்தினால் வாயைப் பொத்திக்கொண்டு நடுங்கிய வண்ணம் உட்கார்ந்திருக்கிறார்கள்)

எதிர்ப்பக்கத்தில் பாறையின்மேல் அழகான பிம்பங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் ஒன்றில் பரமசிவன் பார்வதி சமேதராய் ரிஷப வாகனத்தின்மேல் ஏறி வந்து அகஸ்திய முனிவருக்குக் காட்சி கொடுக்கிற சந்தர்ப்பத்தைக் குறிப்பதாகும். சந்நியாசி அப்பிம்பத்தை பார்த்தவாறே கண்ணை விழிக்கிறார்.

சந்நியாசி—இதோ இந்தப் பாறையில் காணப்படுகிறது யார்?

இருவரும்—பரமசிவன், பார்வதி........

சந்நியாசி—சரி சரி 'சிவன்'

(பிறகு எரிந்துகொண்டிருக்கும் நெருப்பிலிருந்து ஒரு கங்கைக் குச்சியினால் எடுத்து வெளியே தள்ளி) இது என்ன?

இருவரும்—'கங்கு'

சந்நியாசி—ஆகவே உன் பெயர் 'சிவகங்கு'

இருவரும்—(பிரமிப்படைந்து) ஆம் ஆம் உண்மை! அப்புரம் உத்திரவாகட்டுஞ் சாமீ!

சந்நியாசி—சிவகங்கு! உனக்கு இன்னும் கலியாணமாக வில்லையல்லவா?

சிவகங்கு—ஆமாம் எப்பொழுது கலியாணமாகும்? விரைவில் ஆகுமா?

சந்நியாசி—என்னை நீ ஆழம் பார்க்கிறாய்? நேற்று இராத்திரி உனக்கு அழகான ஒரு பெண் அகப்பட்டிருக்கிறாள். அவளை உன் மனைவியாக்கிக் கொள்ள நீ விரும்புகிறாய்

[இரண்டு மனிதருக்கும் உண்டான ஆச்சரியத்திற்கு அளவேயில்லை]

சிவகங்கு—ஆமாம் சாமீ! நமக்கு அவளைக் கட்டிக் கொள்ள ஆசை. ஆனால் அவளுக்கும் அப்படியே ஆசை இருக்கவேண்டாமா! உண்மையான காதல் அவளுக்கும் ஏற்பட்டாலல்லவா நமக்கும் திருப்தியாயிருக்கும்!

சந்நியாசி—ஆமாம் நீ சொல்வது உண்மையே!

[தூரத்திலே சிலர் வருவதைப் பார்த்து குழந்தைகளே! உங்களுக்கு க்ஷேமம் உண்டாகுக இன்னும் இரண்டொரு நிமிஷத்தில், 10000 ரூபாய் கொள்ளைப் பணத்தோடு ஒரு முரடனையும் பிடித்துக்கொண்டு உங்கள் சிநேகிதர் சிலர் வரப்போகிறார்கள்.

சிவகங்கு—அப்படியா! (ஆச்சரியத்தோடு உட்கார்ந்திருக்கிறான். 10 நிமிஷங்கழித்து நான்கு மனிதர் ஒரு முரடனை பின்கட்டு முறையாகக் கட்டி இழுத்து வருகிறார்)

புது மனிதர்—இம்முரடன், நேற்று ராத்திரி ஒரு பெண்ணை வண்டியிலேற்றிக்கொண்டு திருநெல்வேலிக்குப் போகும் வண்டிப் பாதை வழியே போனான். நாங்கள் தலை மறைவாகப் பின் தொடர்ந்து சென்றோம். உச்சிப்பறம்பின் நடுவில் வண்டி போகிறபோது இப்பாதகன், அப்பெண்ணைக் கொன்று வண்டிக்குள்ளேயே போட்டுவிட்டு நகைகளைக் கழற்றிக்கொண்டு ஓடினான். நாங்கள் இவனைப் பிடித்துக் கொண்டோம் கையில் 7000 ரூ ரொக்கமாக வைத்திருந்தான. நம்முடைய குடியரசு சபையிலே இவனுக்கு தீர்ப்பு செய்து இந்தப் பயலைச் சரியானபடி கொலைக்குக் கொலை வாங்கிவிடவேண்டும். நம்முடைய அதிகாரம் 10 வருஷமாய் உலாவுகிற இந்தச் சீமையில் இவனொருவன் எங்கிருந்தோ கிளம்பியிருக்கிறான். பகற்காலத்திலேயே புல்லரிக்கும் உச்சிப் பறம்பில் இந்தப் படவா எவ்வளவு துணிவாய்க் கொலை செய்துவிட்டான்.

சிவகங்கு—சரி! எல்லோரும் நம்முடைய கோட்டைக்குப் போங்கள். இவனை ஒரு குகையில் அடைத்துப் போடுங்கள். நான் இதோ வருகிறேன்.

அவர்கள் சிறை பிடித்து வந்த மனிதனை இட்டுச்செல்கிறார்கள். சிவகங்கு சந்நியாசியைப்பார்த்து சாமீ! தங்கள் கிருபை பூரணமாக அடியேனுக்குக் கிடைக்கவேண்டும்.

சந்நியாசி—ஆஹா! அப்படியே! நீங்கள் இனிப்போய் வாருங்கள் என்று கூறி எழுந்து போகிறார்.

சிவகங்கு, தனிமையாய் அவருக்குப் பின்னே நடந்து செல்கிறான்.

சந்நியாசி—நீ ஏன் காத்திருக்கிறாய்.

சிவகங்கு—(முகமலர்ந்து) சாமீ! எனக்குக் காளிபூஜை தான் பிரதானம். சாமியே கிருபை கூர்ந்து இந்த ஏழு

நாட்களில் நடைபெறும் பூஜைகளைக் கூட இருந்து முடித்துக் கொடுத்து எனக்கு அந்தப் பெண்ணை கலியாணமும் முடித்து வைக்க அருள் புறிதல் வேண்டும்,

சந்நியாசி— சரி! நான் காளி பூஜையை முடித்துத்தர தடையில்லை அவள் நமக்குப் பிரத்தியக்ஷமான தெய்வம் ஆனால் நான் கூறும் சில நிபந்தனைகளுக்கு நீ உட்படுவாயா?

சிவகங்கு—கரும்பு தின்னக்கூலியா? உத்திரவு?

சந்நியாசி—இனி எழு நாட்களில் நீயும் உன் நேயர்களும் கொலை புலை முதலியவற்றை நீக்கிக் காளி கோவிலை விட்டகலாமல் ஒரு வேளை புசித்துத் தேவியை தியானித்த வண்ணம் இருத்தல் வேண்டும். நரபலிக்காகத் தயாராக்கப் பட்டுள்ள மனிதரிருவரையும் மூன்று வேளையும் சரியான ஆகாரம் கொடுத்துப் போஷித்தல் வேண்டும் அந்தப் பெண்ணுக்குப் பால் பழம் முதலிய இனிய உணவுகளை யளித்து அவளுக்குச் சிறிதும் துன்பம் நேரிடாதபடிக் காத்தல் வேண்டும் நான் எழு நாட்களும் இராத்திரி முழுதும் உங்களோடிருப்பேன். பகல் முழுதும் பொதியாசல முடிவு வரையில் தபசு செய்ய சென்று விடுவேன். என ஊங்காரம், ஆங்காரம், ஓங்காரங்கள் போட்டு பேசுகிறார்.

சிவகங்கு—தேவி பூஜையை நிறைவேற்றி பெண்ணாரணங்கை மணம் புரிந்து உலகமுழுதும் ஒரு குடையில் ஆள்வோம் என்ற மனோராஜியத்துடன் முன்பின் சற்றும்ஆலோசிக்காமல் உத்திரவு! உத்திரவு! என்று கூறி வாய் புதைத்து நின்றான். அப்பால் சாமியாருக்கு வழிகாட்டிக் கொண்டு தன் அந்தரங்க மலைக் கோட்டைக்குப் போனான். பாறைகளைக் குடைந்த சுறங்க வழியில் சென்று பிறகு மதகுபோன்ற குறுகிய வட்டமான வாயிலையுடைய காளி கோட்டத்தை அவர்கள் அடைந்தனர், உக்கிராகாரமாய் எழுந்தருளிய காளி தேவிக்குச் சாமியார் சிறப்பாகப் பூஜைகளை செய்து முடித்தார். சிவகங்குவும் அவன் ஆட்களும் சாமியாருக்குக் குறிப்பறிந்து குற்றேவல் புரிந்தனர். திருடர்கள் மனோராஜியமும் வளர்ந்து கொண்டே வந்தது.

# அத்தியாயம் 17

## காதலின் வெற்றி.

பாக்கியலக்ஷ்மி வீட்டில் கொள்ளை நடந்த நான்காம்நாள் ஊர் பேர் தெரியாத கடிதம் ஒன்று பார்வதிநாத பிள்ளைக்கு வந்தது. அதைக்கண்டு அவர் முதலில் நடுங்கினர் பிறகு ஒருவாறு துணிந்து அதிற் குறித்தபடி எல்லாக் காரியங் களையும் நிறைவேற்றினர்.

நிற்க காளி பூஜை முடிவாகிற ஏழாம் நாள், சந்நியாசி பாவநாசப் படித்துறையில் உலாவிக்கொண்டிருந்தார். அந்த சமயத்தில் கல்யாணபுரம் திருநாவுக்கரசுப் பிள்ளை ஆற்றின் படிக்கையிலுள்ள ஒரு கல் மண்டபத்தில் உட்கார்ந்து சிவ பூசை செய்துக் கொண்டிருந்தார். சந்நியாசி அவர் பூசை முடித்து எழுகையில் அருகிலே சென்றா. திருநாவுக்கரசுப் பிள்ளை சந்நியாசியைக் கண்டதும் யாரோ பெரியார் என் றும் எண்ணத்துடன் கைகூப்பி வணங்கினர். சந்நியாசியும் அவரை ஏற இறங்கப் பார்த்து, ஐயா! தாங்கள் கலியாண புரம், திருநாவுக்கரசுப் பிள்ளையவாள் அல்லவா? க்ஷேமந் தானே என்று கேட்டார். அதைக் கேட்ட பிள்ளையவர் கள், பொங்கி வழிந்த கண்ணீரைத் துடைத்தபடியே ஸ்வாமீ! இந்த உலக வாழ்க்கை வெறும் மாயை என்று வேதாந்தம் பேசத் தொடங்கினர்.

சந்நியாசி—ஐயா! என்ன இப்படிச் சொல்கிறீர்கள்? சொல்ல முடியாத வருத்தத்துடன் தாங்கள் இருப்பதாகத் தோற்றுகிறதே! என இரக்கத்துடன் கேட்கலானர்.

திருநாவுக்கரசுப் பிள்ளை—ஸ்வாமீ! பட்டகாலிலேயே படும், கெட்ட குடியே கெடும். என்பது போல நான்பட்ட துன்பங்களுக்கு அளவில்லை. ஒரு வாரத்துக்குமுன் என்னு டைய ஒரே பெண்ணுக்கு விவாக முடிக்க வேண்டுமென்ற கருத்தோடு நான் கொழும்பிலிருந்து வந்தேன். என் மகன்

சென்னையிலிருந்து வந்து ஊரில் தங்கியிருந்தான். என்னைத் திருநெல்வேலியில் வந்து சந்திக்கும்படி தூத்துக்குடியில் கப்பலினின்றிறங்கியதும் அவனுக்குத் தந்தி கொடுத்தேன். அப்படியே அவன் அங்கு வந்து சேர்ந்தான் நான் அவனுடன் கலியாணபுரம் வந்து சேர்ந்தேன். வண்டியிலிருந்திறங்கியதும் என் மகன் ஒரு பங்களாக் காவற்காரனிடம் ஏதோ பேசிக்கொண்டிருந்தான் உடனே அவன் தான் திருவநந்தபுரத்திற்கு அப்பொழுதே போய்க் கவனிக்கவேண்டிய அவசரமான காரியம் இருப்பதாகக் கூறி அதே ரயிலில் ஏறிப் போய்விட்டான். நான் வீட்டிற்கு வந்து பார்க்க வீடு குடிபோன சத்திரம் போலக் காணப்பட்டது. என் மனைவி எங்கோ திடீரென வெளியேறிப் போயிருப்பதாக உணர்ந்து, என் மகளை நாடி, மாடியிற் போய்ப் பார்த்தேன் மேடை பூட்டப்பட்டிருந்தபடியால் பூட்டை யுடைத்து உள்ளே செல்ல அங்கு 'ஐயோ அலங்கோலமான காட்சி! சொல்லுதற்கும் நாவெழவில்லை, என் அருமை மகள், என் ஆசை மகள், ஒரே மகள் இராஜலக்ஷ்மி இறந்து கிடப்பதைப் பார்த்தேன். அவள் விஷத்தைக் குடித்துத் தற்கொலை புரிந்து கொண்டதாக அவளே கைப்பட ஒரு கடிதம் எழுதி மேஜையின்மேல் வைத்திருந்தாள். அடக்க முடியாத துன்பத்துடன் என்ன மாயமோ? என்றேங்கித் தற்கொலை விஷயம் வெளிப்படுமுன் பொழுது விடிவதற்குள் சில அந்தரங்கமான மனிதர்களின் உதவியால் என் மகளது சவத்தை ரகஸியமாய் அடக்கஞ் செய்து முடித்தேன் என் மகளுக்காகப் பேசியிருந்த கணவனாகிய சுந்தரம் என்பவன் ஆற்றங்கரையிலே பனைமரத்தடியில் குடி வெறியினால் அறிவு கலங்கி ஒரு கல்லின் மேற் குப்புற விழுந்து மூக்கிலடித்து இறந்து போனதாகத் தெரிய வந்தது. பிறகு வீட்டுக் காரியஸ்தன் தன் தாயைக் கொன்று விட்டு 3000 ரூபாயை மோசடியாக என் கணக்கிலிருந்து அபகரித்துக்கொண்டு எங்கோ தேசாந்தரம் போய்விட்டானென்றும் தகவல்தெரிந்தது. அப்புறம் இரண்டு நாட் கழித்து என் இளைய சம்ஸாரம் உச்சிப் பறம்பில் கொல்லப்பட்டு கிடக்கிறாள் என்

பதை யறிந்து எல்லாம் விந்தையே என்றெண்ணி, என்மகன் மாணிக்கம் எங்கே போனான் என்பதைப் பற்றி அறிய திருவநந்தபுரத்திலிருக்கும் எனது ஆப்தரும் தமிழறிவு சான்ற பிரபு சிகாமணியுமாகிய சாலை உண்டியல் கடை கண பதியப்பப் பிள்ளையவர்களுக்கு அவனை திருவநந்தபுரத்திலே தேடும்படி தந்தி கொடுத்தேன் பிறகு அவன் சென்னையிலி ருந்து ஒரு நாடகக்காரியைத் தன்னுடன் அழைத்து வந்த தாகவும், அவளுடன் சேர்ந்து எங்கோ போயிருக்கிறான் என்றும் அறிந்து, இனி இப்படிப்பட்ட கழுதை முகத்தில் விழித்தாலும் குடிக்கத் தண்ணீர் கிடைக்காது என்ற மட்டில் அதிக வெறுப்படைந்து எனக்குரிய நிலபுலங்கள் முதலிய வற்றை எல்லாம் விற்று மொத்தமாய் 10 லக்ஷம் ரூபாயை பாங்கியிற் போட்டுவிட்டுப் பாவங்களைத் தொலைப்பது பாவ நாச தீர்த்தமே என எண்ணி நேற்றுத்தானிங்கு வந்து சேர்ந் தேன். என் மூத்த ஸம்சாரம் மகா உத்தமி அவள் இப் பொழுது இறந்து போன என் மகளை அவளுடைய தமயன் மகன் ஒருவனுக்கு மணஞ் செய்விக்க வேண்டுமென்று கூறி யிருந்தாள். அவன் நிறைந்த படிப்பாளி, சிறந்த புத்திசாலி, அழகிலும் இடில்லாதவன். ஊரிலே சில வீணர் அவனையும் என் பெண்ணையும் குறித்துப் பழிதூற்றினார்களென்பதனால் அவன் மனம் தாளாமல் கொலாலம்பூருக்குப் போய்விட் டானும். இன்று காலையில் அவன் தாயார் இங்கே வந் திருக்கிறாள். அவ்வம்மையும் நானுமாக எங்களுக்கு நேரிட்ட துன்பங்களைக் குறித்து இவ்வளவு நேரம் புலம்பிக்கொண் டிருந்தோம். ‘கனகசபாபதியும் இராஜலக்ஷ்மியும் தம்பதி களாயிருக்க இனிக் காண முடியுமா?’ என இருவரும் ஒரு வருக்கொருவர் கூறி யலறினோம் எனச் சொல்லி முடிக்கை யில் பிள்ளையவர்களின் கண்களில் முத்து முத்தாய்க் கண் ணீர் வடிந்தது.

சந்நியாசி—தரும புத்தியுள்ளவர்களுக்கும் சில சமயங் களிற் செல்வச் செருக்கினாற் புத்தி தடுமாறிவிடுவது உலக இயற்கை; அவர்களுக்குத் திரும்பவும் புத்தி தெளிவுறச்

செய்வதற்காகப் பகவான் பல கஷ்டங்களை யுண்டுபண்ணுகிறார். ஆனால் கஷ்டங்கள் ஒரு காலத்திலும் நிலைத்து நிற்பது இல்லை. துன்பங்கள் இன்பத்திலும் இன்பங்கள் துன்பத்திலும் மாறி மாறி முடிவது இயற்கை ஆதலால் தாங்கள் மனத்தைத் தேற்றிக் கடவுளைப் போற்றுதலே ஏற்றது நீங்கள் விரைவில் சந்தோஷமடைதலும் கூடும் எனக் கூறி மின்னென மறைந்து போயினர்.

* * * *

அந்தரங்கமான மலைக்கோட்டையிலே அன்றிரவு காளி பூஜை முடிவாகிறபடியால் காளிதேவிக்கு விசேஷமான அபிஷேகலங்காரங்கள் நடைபெற்றன. தேவி குதித்து வருவது போலக் காட்சி யளித்தாள். தேவி சந்நிதானத்தின் வலது புறத்தில் பெரிய ஆதனம் ஒன்று உயரமாயிடப்பட்டிருந்தது சுற்றிலும் சில ஆசனங்கள் ஒழுங்காகப் போடப்பட்டிருந்தன. அவற்றின் ஒன்றில் மெத்தைகள் இட்டு அழகுறுத்தப்பெற்றிருந்தது. சரியாய் 12 மணிக்கு சாமியார் பூஜையை முடித்துவிட்டார். பிறகு அவர் உயரமான ஆதனத்தில் அமர்ந்தார் அவருக்குப் பக்கத்தில் மெத்தை இடப்பட்டிருந்த ஆதனத்தில் சிவகங்கு பட்டாடையுடுத்துத் திருநீறணிந்து பெரிய பூஜா துரந்தரன்போல உட்கார்ந்தான் மாந்திரவாதி பாபாண்டியா பிள்ளையும், ஆறுமுகம் பிள்ளையும் நரபலிக்காகத் தயாராகக் கொணரப்பட்டனர். அப்பொழுது சிவகங்கு சந்நியாசியைப் பணிந்து, ஸ்வாமீ! இவ்விருவரும் என்னென்ன அநியாயங்களைச் செய்திருக்கின்றனர் என்பதை ஞானதிருஷ்டியினால் அறிந்து தாங்களே நியாயம் விசாரித்து இவர்களுக்குக் கொலைத் தண்டனை விதித்தல்வேண்டும் எனக் கூறினான். சந்நியாசி மஞ்சள் நிறமான பொடியை எடுத்துக் கையில் வைத்துக்கொண்டு ஜபஞ் செய்தார்.

பிறகு அவர் மாந்திரீகனை நோக்கி, அடேய்! நீ செய்துள்ள அநியாயங்களுக்கு அளவேயில்லை உன்னுடைய மாயக் குளிகையினால் மயங்கிக் கெட்டழிந்த மாதர் கணக்கில்லாதவர் ஒட்டைப் பானைகளையும் திவர்த்திகளையும் வைத்

துக்கொண்டு கொள்ளிப் பிசாசாகத் தோற்றும்படி செய்து ஊரை ஏமாற்றுவது உன் தொழில். சமீபத்தில் நீ பெரிய வீட்டிலே ஒரு பெண்ணை மயக்கி நாடகக்காரி ஒருத்தியிடம் 5000 ரூபாய் ஒப்பந்தம் பேசி அவளிடம் அந்தப் பெண்ணை ஒப்பிப்பதற்காகத் தாசி வீட்டிற்கு மறவர்களது உதவியால் அவளைத் திருடிச் சென்றாய். அந்த அநியாயப் பாவமே இப்பொழுது உன்னைக் கழுத்துப் பிடியாய் அழுத்திவிட்டது ஆதலால் நீ கொலை செய்யப்படுதற்கு உரியவன் ஒருபுறம் நில்லு! என்று கூறினார். சிவகங்கு சந்நியாசி கூறியவற்றைக் கேட்டு ஆச்சரியத்துடன் இவன் இவ்வளவு கொடியவனா? என்று சொல்லிச் சாமியாரை வணங்கி அவரது ஜோஸியத்துக்கு வியந்து, பிறகு சுவாமி! அந்தப் படுபாவிப்பயல் எப்படிப்பட்டவன். நன்றாய் ஆராய்ந்து சொல்லுங்கள் என ஆறுமுகத்தைச் சுட்டிக் காட்டினான். சந்நியாசி, இந்தப் படுபாவி, இன்னும் அன்றிரவிலேயே வேறு மூன்று கொலைகளைச் செய்திருக்கிறதாகத் தெரிகிறது அவைகளுக்கு அத்தாட்சியாகச் சில பொருள்கள் உண்டு. அவற்றை தேவியே நமக்காக வரவழைத்துக் கொடுத்திருக்கிறாள். அவை இவ்விடமே தேவி பீடத்தினருகில் ஒரு சிறு பெட்டியிலிருக்கின்றன. என்று கூறி அதை எடுத்து வருமாறு ஏவினார். அவனும் அப்படியே சென்று அப்பெட்டியை எடுத்துக் கொணர்ந்தான். சந்நியாசி அதனைத் திறந்து அடே! நீ உன் சிநேகிதனொருவனைக் கொன்று அக் கொலையை மறைப்பதற்காகப் பண்ணையிடம் அளித்த வைர மோதிரம் இதோ பார் இன்னும் உன் தாயைக் கொன்ற விஷயத்தை மறைப்பதற்காகப் போலீஸ் வீரனிடமளித்த ரூபாய் 1000 இன்னும் ஒரு தாசியைக் கொன்றதை மறைத்ததற்காக மேளக்காரனுக்கு அளித்த தங்கச் சங்கிலி— எனக் கூறிப் பெட்டியிலிருந்து அவைகளை எல்லாம் ஒவ்வொன்றாய் எடுத்துக் காட்டித் திருப்பப் பெட்டிக்குள் வைத்தார். ஆறுமுகம் ஒன்றும் கூற வாயெழாமல் திருதிருவென விழித்தான் சிவகங்கு சுவாமீ! இத்தனை கொலைகாரனை இவன் ஒரு கொலை செய்வதற்கே எங்கள் மனம் இலேசில் துணிவதில்லை. இவன்

ஒரே ராத்திரியில் நான்கு படுகொலைகளைச் செய்தானு! பெருத்த ஆச்சரியம்! இவனே முதலிற் கொலைக்குரியவன் என்று சொல்லி முடித்து, எழுந்து நின்ருன். அனைவரும் எழுந்து நின்றனர். சிவகங்கு தேவியை வணங்கி 'அம்பிகை பராதேவதை பத்ரகாளி, லோகமாதா! கொலைபாதகராகிய இவ்விருவரையும் பலியேற்றுக்கொள். மங்காத கீர்த்தியையும், ஜயத்தையும் எனக்குத் தருவாய்' எனத் தோத்திரஞ் செய்து, கையிலே வீரவாளை யேந்தினன். மந்திரிமார்கள் அனைவரும் கைகளை உயர்த்தி. 'வீர தீர பராக்கிரம திக் விஜய சிங்க, ஜெயசீல, உத்தண்ட காளிதாச ஸ்ரீ சிவகங்குத் தேவருக்கு ஜே!' என்று ஆர்ப்பரித்தார்கள், சிவகங்கு தேவியைக் கையெடுத்த வண்ணம் வாளை வீசி ஒரே வீச்சில் அவ்விருவர் தலையை வெட்டிச் சாய்த்தான். உடனே சந்நியாசி காளியின் பீடத்தினருகிற் சென்று தீபாராதனை புரியத் தொடங்கினர். சிவகங்கு, தன் தோழருடன் கீழே விழுந்து தேவியை நமஸ்கரித்துக் கொண்டிருந்தான்.

அங்ஙனம் நமஸ்கரித்துக் கொண்டிருந்த அவர்களனைவரும் எழுந்து நிற்க முடியாமல் தவித்தனர். அவர்கள் ஒவ்வொருவர் முதுகின் மேலும் இவ்விரண்டுபேர் ஏறி உட்கார்ந்து கொண்டு அவர்களது கைகளைப் பின்புறமாக இறுகக் கட்டிக் கால்களிலும் விலங்குகளை மாட்டினார்கள். வெற்றிக் கொடி நாட்டி நாடு முழுதும் சுற்றித் திரிந்த திருடர் பதின்மரும் எழுந்து நிற்கவும் முடியாமல் தரையிலே கிடந்து புரண்டார்கள். ஆனுல் சிவகங்கு அலட்சியமாய்த் தன் முதுகிலேறி உட்கார்ந்திருந்த மனிதனைத் தூர எறிந்து இம் மென உடலை நெறித்தான். அவனைக் கட்டியிருந்த கட்டுகளும் விலங்குகளும் சுக்கல் சுக்கலாய்ச் சிதறிப்போயின. 'அடே சந்நியாசி! நீயா எங்களை ஏமாற்றிப் போலீஸாரை வந்து பிடித்துக்கொள்ளும்படி ஏற்பாடு செய்தாய். ஊரெல்லாம் ஏமாற்றும் நான் உன்னுடைய ஏமாற்றத்தில் அகப்பட்டேனே. இதோ உன் உயிரைக் குடிக்கிறேன் பார்' என்று வீராவேசமாய்க் கொதித்துப் பொங்கிக் காளி கோட்டத்திற்குள் நுழைந்து சந்நியாசியைப் பிடிப்பதற்காகப் பாய்ந்

தான். சந்நியாசி அந்தர்த்தானமாகி அரைமணி நேரமா யிற்று. உடனே அவன் உயிராபத்தான காலத்தில் தப்பிச் செல்வதற்காக அமைத்துள்ள சுரங்க வாயிலாகிய ஆள் உயரத்திற்குமேல் வட்டமாகச் சுழலும் சிங்க முகமாய்ச் சுவரில் அழுத்தியுள்ள பிம்பத்தைத் திருகி வாயிலைத் திறந் தான் அவ்வாயிலில் விறகுகள் அடுக்கி வைத்து நெருப்பு கொளுத்தப்பட்டு எரிந்து கொண்டிருந்தது சிவகங்கு அதனைக் கவனிக்காமல் தன் முகத்தை அந்தத் துவாரத்தில் நுழைத்தான். திருக்கிவிட்ட அவன் மீசைகள் கரிந்து அவன் முகமும் வெந்து போயிற்று. பராக்கிரம வீரன் சிறகு ஒடிந்த பறவை போலத் தரையிற் சாய்ந்தான். அதற்குள் அவனது குதிங்கால் நரம்புகளெடுக்கப்பட்டன. சப் இன்ஸ் பெக்டர் சாந்தலிங்கம் பிள்ளை உடனே சிவகங்குவைப் பிடித்து 'வீர சிங்கமே! உன்னுடைய முறுக்கு மீசை எங்கே போயிற்று.' என்று அவனது கன்னங்கள் வீங்கப் புடைத் தார். ஆனால் அவ் ஆண்மை குன்றாவீரன், அடடா போலிச் சந்நியாசியை நம்பி நான் மோசம் போனேனே. நேரே நின்று என் தைரியத்தைப் பாராமல், தந்திரமாய்ப் பிடிக்க வந்த உங்கள் வீரமும் ஒரு வீரமா? சீ என்று கூறித் தூ வெனக் காறி உமிழ்ந்தான். சாந்தலிங்கம் பிள்ளை அவனை அப்படி யே கீழே படுக்க வைத்துக் குப்புறப் புரட்டிப் பல மான இரும்புச் சங்கிலிகளை அவனது உடம்பெங்கும் பிணை த்து கழிகளைக் கொணர்ந்து நீளமான ஆசந்தி ஒன்றைத் தயாரித்து அவ் ஆசந்தியின் மேற் சிவகங்கைப் படுக்கப் போட்டுப் பாடைக் கொம்புகளோடு சேர்த்து அவனுடலை இறுகக் கட்டிப் பத்து ஜவான்களைக் கொண்டு அவனைப் பிணத்தைப் போலச் சுமக்கச் செய்தனர். சில ஜவான்கள் மற்றத் திருடர்களை யெல்லாம் ஒன்று சேரச் சங்கிலியாற் பிணைத்து நாய்களைப் போலக் கோர்த்து இழுத்து வந்தார் கள். இப்படியாகச் சிவகங்குவின் ஊர்வலம் மலையினின்றி றங்கிப் பாவநாசப் படித்துறைக்கு முன்னே வந்து சேர்ந்தது. நிற்க,

இராஜலக்ஷ்மி தன் காதலனது கடிதத்தைக் கண்டு இரவிற் பூஞ்சோலைக்குள் நுழைந்து அவனது வருகைக்காகக் காத்திருந்தாளல்லவா? கமலாபாய் மாயாண்டிக்கு ரூ 3000 தனக்கு ரூ 2000 முமாக ஒப்பந்தம் பேசி சென்னை சினிமா கம்பேனி மானேஜராகிய மனமோகனிடம் ரூ 5000 வாங்கி வைத்தாள். மனமோகன் சினிமாவிலே கமலாபாயுடன் சேர்ந்து ஜோடியாய் நடிப்பதற்காக அழகிலும் தோற்றத்திலும் ஒத்தவளான ஒரு பெண்ணை வெகு நாளாகத் தேடியிருந்தான். டாக்டர் மாணிக்கத்தின் மூலமாய் இராஜலக்ஷ்மி தான் தன் நோக்கத்திற்குப் பொருத்தமானவள் என்பதை உணர்ந்தான். அதற்காக அவன் தன் கம்பேனியில் நடித்து வந்தவளும் இதற்கு முன் பம்பாயில் ஒரு சினிமாக் கம்பேனியில் நடித்து வந்தவளுமான கமலாபாயை, மாணிக்கத்துடன் வஞ்சகமாகச் சிநேகம் செய்வித்து அவனோடு கலியாணபுரத்திற்கு அனுப்பியிருந்தான். கமலாபாய் மாயாண்டி மூலமாய் இராஜலக்ஷ்மியை வசியப்படுத்த ஏற்பாடு செய்தாள். கமலாபாய் மனமோகனைக் கலியாணபுரத்திற்கு வரும்படியாகத் தந்தி கொடுத்தாள் அவன் வந்து சேர்ந்ததும் கமலா, தான் அதற்குமேல் அவ்வூரில் இருந்தால் ஆபத்து என்று எண்ணி மாயாண்டி குறிப்பிட்டுச் சொல்லிய காட்டுப்பட்டி பாக்கியலக்ஷ்மி வீட்டிக்கு மனமோகனை அனுப்பி மாயாண்டியிடம் ரூ. 3000 கொடுத்து இராஜலக்ஷ்மியை யழைத்துக்கொண்டு சென்னைக்கு வரும்படி மனமோகனிடம் சொல்லிவிட்டு தான் திருவநந்தபுரம் போய்ச் சென்னைக்கு வருவதாகத் தெரிவித்தாள். மாயாண்டி பார்வதிநாத பிள்ளை யனுப்பிய மறவர்கள் உதவியால் பூஞ்சோலையில் இராத்திரியில் உலாவிக்கொண்டிருந்த இராஜலக்ஷ்மியை மயக்க மருந்து கொடுத்துப் பாக்கியலக்ஷ்மி வீட்டுக்கு எடுத்துச் சென்று, அவளை ஒரு அறையிலே போட்டுப் பூட்டிவிட்டு மனமோகனது வருகைக்காக அங்குக் காத்திருந்தான் மனமோகன் அங்குப் போகவேயில்லை. சிவகங்கு தன்மையனது தூண்டுதலாற் பாக்கியலக்ஷ்மி வீட்டிற்குக்

கொள்ளையடிக்கச் செல்லுகையில் ஒரு அறையிலே பூட்டி வைக்கப்பட்டிருந்த இராஜலக்ஷ்மியைக் கண்டு மோகங்கொண்டான் ஆனால் சிவகங்கு அவள் மருந்தினால் மயக்கந்தெளியாதிருந்தபடியால் அவளை நலங்காமல் தன் பெட்டி வண்டியிலேற்றித் தன் அந்தரங்க மலைக்கோட்டைக்குக் கொண்டு போய்ச் சேர்த்தான். மயாண்டியையும் சிறைப் பிடித்து வந்தான் நிற்க,

* * * *

சிவகங்கு பிடிபட்ட செய்தி நொடிப்பொழுதில் பரவிற்று பாவநாசத்தில் எள் விழவும் இடமின்றி ஜனங்கள் திரளாகக் கூடினர். இந்தக் கூட்டத்தின் நடுவிலே சிவகங்குவின் ஆசந்தியும் வந்து சேர்ந்தது. சப்இன்ஸ்பெக்டர் சாந்தலிங்கம் பிள்ளை ஆசந்தியை இறக்கிச் சிவகங்குவைக் கட்டு அவிழ்த்து நிறுத்தினார். சுற்றிலும் ஜனங்கள் ஆயிரக் கணக்காக நின்றிருந்தனர் நகம் இழந்த புலி போலவும், விஷப்பை பிடுங்கப் பெற்ற நாகம் போலவும் சிவகங்கு போலீஸ் வீரர்களுக்கு நடுவில் நின்றான். மற்றத் திருடர்களும் சங்கிலியாற் கட்டுண்டு பெட்டிப் பாம்பு போல அடங்கி நின்றார்கள். திருநாவுக்கரசுப் பிள்ளை, இவ்வளவு கூட்டத்தினடுவில் தாமும் வேடிக்கை பார்க்க வந்து நின்றார். இத்தருணத்தில் ஜடை முடி தரித்து தாடிகள் நீண்ட சந்நியாசி ஒருவர் சோகமே உருவாய நங்கை ஒருத்தி தன்னைப் பின் தொடர்ந்து வரக் கூட்டத்திற்குட் புகுந்து சப்இன்ஸ்பெக்டர் சாந்தலிங்கம் பிள்ளைக்கும் அவரை மலைக்கோட்டைக்கு வழிகாட்டியழைத்து வந்த பார்வதிநாத பிள்ளைக்கும் நடுவில் வந்து நின்றார். திருநாவுக்கரசுப் பிள்ளை பதறித் துடித்து 'என் கண்ணே! ராஜம்மா! மாண்டவள் எங்ஙனம் மீண்டுவந்தாய் என்று கேட்டுக்கொண்டே சந்நியாசியின் அருகில் நின்ற மங்கையைத் தழுவிக் கொண்டார். சந்நியாசியையும் உங்கள் வாக்குப் பலித்ததே! என்று கூறி நமஸ்கரித்தார். சந்நியாசியின் பாதங்களில் முதலில் நமஸ்கரித்துப் பிறகு தன் தந்தையையும் விழுந்து வணங்கிய ராஜலக்ஷ்மி, தந்தையே! எந்தை

போல நின்று என் ஆருயிரைக் காத்த பெரியாரிவரே! எனச் சந்நியாசியைச் சுட்டிக் காட்டினாள். திருநாவுக்கரசுப் பிள்ளை இழந்த கண்ணைத் திரும்பப் பெற்ற குருடன் போலத் தன் மகளைக் கண்டு களிப்பெய்தினார். இதற்குள் கட்டுண்டு நின்ற சிவகங்கு அடா போலிச் சந்நியாசியே கூடவேயிருந்து என் குரல் வளையை அறுத்தாயே என்று கூறிச் சந்நியாசியின் மேற் பாய்ந்து அவர் தலையின் மேலிருந்த முக்காட்டைப் பிடித்து அணிந்திருந்த அங்கியையும் கிழித்தெறிந்தான் ஆனால் சாந்தலிங்கம் பிள்ளை அவனைப் பிடித்து ஒரு புலிக் கூண்டிற் குள் அடைத்து விட்டார். முக்காடு எடுபட்டு அங்கியும் போன பிறகு அச்சந்நியாசி, கூர்ங்குல்லாவும் காக்கிச்சட்டை யும் சாரமும் அணிந்து தாடியும் மீசையுமுடைய ஒரு மகம் மதியனாக மாறிவிட்டார் உடனே, பார்வதிநாத பிள்ளை 'ஸாஹேப்! நீர் அன்றோ என்னையும் என் குடும்பத்தையும் அன்று இராத்திரியிலே வந்து சிவகங்குவிடம் அகப்பட்டுக் கொள்ளாமற் காப்பாற்றினீர் உம்மை எங்கெங்கோ தேடி யும் காணவில்லை, மூன்று நாட்களுக்கு முன் இந்தக்கடிதம் வந்தது. கடிதத்திற் கண்டபடியே போலீசுக்கு அறிவித்து அவர்களோடு வந்து தந்திரமாய்ச் சிவகங்கைப் பிடித்து விட்டோம் என்று கூறிக் கடிதத்தை அனைவருக்கும் காண் பித்தார். அக்கடிதத்தில் பாவநாசம் கோயிலிலிருந்து சிவ கங்குவின் அந்தரங்கக் கோட்டைக்குச் செல்லும் வழி விளக் கமாகப் படம் எழுதிக் காட்டப்பட்டிருந்தது சிவகங்குவின் ரகஸியத்தைப்பற்றிய விபரமான விஷயங்களும் தெரிவிக்கப் பட்டிருந்தன அடியில் 'தங்களுயிரைக் காப்பாற்றிய மகம் மதியன்' என்ற கையொப்பமும் பொறிக்கப்பட்டிருந்தது. எல்லாரும் மகம்மதியனைப் பார்த்த வண்ணம் வியந்து நிற் கையில் திருடர்களில் ஒருவன் அடே ஸாஹேப்! நீ படே ஆசாமி! டில்லி பாஷா வென்று சொல்லியும் மீன் பிடிப்ப வன் போல இருந்தும் எங்களுடனேயே அநுசரணையாயிருப் பவன் போல நடித்துக் கடைசியில் எங்களுக்கு உலை வைத்து விட்டாயே, பாதகப் பதரே! என்று கூறிப் பல்லை நெறுநெறு வெனக் கடித்தான். நாய்போலச் சங்கிலியாற் கட்டுண்டிருந்

தமையால் மகம்மதியனை யொன்றும் செய்யக் கூடவில்லை இச்சமயத்தில் ஸினியாப் புரோப்ரைட்டராகிய மனமோகன் தம் மனைவி லீலாவுடன் அங்குத் திடீரெனத் தோன்றி நம் மகம்மதியனைக் கட்டித் தழுவி 'ஸாஹேப்! நீ எனக்கு காட்டிய போட்டோவையும் கடிதத்தையும் முற்றிலும் உற்று நோக்கினேன் அவற்றை இரண்டனை நாணயத்துடன் மேடையிலிருந்து பிச்சைக்காரனாக நடித்துச் சென்ற உன்னிடம் எறிந்த பெண்ணை 'லீலா' என் மனைவி என்பதை யறிந்து, உன் அடையாளப்படி பம்பாய் சேட்டாக நாகரத்தினம் வீடு சென்று, பள்ளியறையிற் புகுந்து கவலைக்கடலில் மூழ்கிக் கிடந்த லீலாவிடம் 'நானே அவளை 3 வயதில் மணந்த 7 வயதுக் கணவன். மணம் முடித்து ரங்கூனுக்கு திரும்பிச் செல்லுகையில் கப்பல் கவிழ்ந்தது, என் தந்தை பிறந்து விட்டார் நான் ஆபத்துக்காக உதவும் சிறு பட்டுகளின் உதவியால், கரை யேறினேன். என்னை ஆதரித்துதவி என்னுடன் கப்பலிலிருந்து கரையேறிய பம்பாய் நகரத்து ஸேட் ஒருவரது வீட்டில் அவரது பாது காப்பிலேயே நான் வளர்ந்தேன். ஸினிமாக் கம்பெனியில் மிகுந்த வருவாய் கிடைப்பதை உணர்ந்து நான் அந்த வழியில் பிழைத்துக்கொள்ளலாம் என்ற நோக்கத்துடன் அந்த ஸேட் சிறிது முதல் விட்டு எனக்கு ஒரு கம்பெனியை விலைக்கு வாங்கிக் கொடுத்தார். சென்னையிலும் கிளைக் கம்பெனி ஒன்று ஸ்தாபித்தேன். அப்பொழுது டாக்டர் மாணிக்கமும் கமலா பாயும் சிநேகமாயினர் கலியாணபுரத்திற்கு நான் கமலா பாயின் தந்தி கிடைத்ததும் வந்து சேர்ந்தேன். ஸாஹேப் நீர் கூறிய அடையாளங்களை வைத்தும், பூம்பல்லக்கு ஊர் வலத்திலிருந்தும் லீலாவே என் மனைவி என்பதைத் தீர்மானமாயறிந்தேன் என்ற விஷயங்களை லீலாவிடம் விளங்கக் கூறினேன். அவளும் தன்னிடத்திலிருந்த என் சிறு வயது போட்டோ ஒன்றைக்கொண்டு சமுசயந் தெளிந்தாள். பிறகு நாங்களிருவரும் மேடையின் பின்புறமாகவே வீட்டைவிட்டு தந்திரமாய் வெளியேறினோம். நான் உம்மைத்தேடி நெடுக அலைந்தேன். இறுதியில் பாக்கியலக்ஷ்மி மூலமாயும் நேற்று

பார்வதிநாத பிள்ளை மூலமாயும் உம்மை இன்று காணக் கூடும் என்ற உத்தேசத்துடன் இங்கு வந்தேன்' என்று கதையை முடித்தான்.

சற்று நேரத்தில், திருவனந்தபுரம் கணபதியப்பப்பிள்ளை யவர்கள் நறுக்கு மீசை வாலிபனை டாக்டர் கன்னை யழைத்துக்கொண்டு திருநாவுக்கரசுப் பிள்ளையிடம் வந்து சேர்ந்தார். திருநாவுக்கரசருக்குத் தம் மகனைப் பார்க்கவும் சற்றும் பிடிக்கவில்லை, மகம்மதியன், டாக்டர் மாணிக்கத்தைப்பார்த்து 'என்ன டாக்டர்வாள்! வீட்டம்மா சௌக்கியமா?' என்று கூறிக்கொண்டே தன் கூர்ங் குல்லாவையும் காக்கிச் சட்டையையும் பொய்த்தாடி மீசைகளையும் கழற்றுதற்காக அவைகளை நெகிழ்த்தான். அவனது அரையில் தூய்மையான வெள்ளை வஸ்திரம் துலங்கிற்று. அங்கே பிரமிப்பாய் நின்றிருந்த மங்கையர்க்கரசி, 'என் அருமை மகனே! கனகு ஐயா! என்று மகம்மதியனைக் கட்டித் தழுவினள். மகம்மதியன் சட்டெனக் கனகசபாபதியாக மாறி விட்டான். ராஜலக்ஷ்மி, 'கனகத்தான்!' என்று கூறி அழத் தொடங்கினள். திருநாவுக்கரசுப் பிள்ளை மனமகிழ்ந்து ராஜலக்ஷ்மியின் கரத்தைப்பற்றிக் கனகசபாபதியின் கையிலே வைத்து 'மாப்பிள்ளை, ராஜம்மாளோடு சுகமாய் வாழுங்கள், என்று ஆசீர்வதித்தார். கூட்டத்திலிருந்த ஒவ்வொருவரும் அதிசயத்தின்மேல் அதிசயமாய்க் காண்பதனுல் மெய்ம்மறந்து இமைகொட்டாமல் நின்றனர். மாணிக்கம் கனகைக் கண்டதும் விம்மி விம்மி அழத் தொடங்கினன். கனகு, அவனருகிற் சென்று, 'மாப்பிள்ளை அழவேண்டாம், கமலாபாய் உங்களை ஏமாற்றுதற்கு வந்த நாடகக்காரி. அவள் திருவனந்தபுரத்திற்குப் போகவில்லை. அன்றிராத்திரி நீங்கள் வீட்டிலேயே மாடியிலிருப்பதாக எண்ணி உங்கள் வீட்டு மாடியிலேயே உட்கார்ந்திருந்தாள். அப்பொழுது ராஜலக்ஷ்மி வைத்திருந்த விஷத்தைச் சீனி என்று எண்ணி, காமாட்சி கொணர்ந்த விஷம் கலந்த பாலில் அதைப் போட்டுச் சட்டென உயிரை விட்டாள். அவள் தோற்றத்தினுல் ராஜலக்ஷ்மியை ஒத்திருந்

ததாலும், மேலும் அவள் தங்களிடம் விடைபெற்றுக்கொள்ள வீட்டுக்கு வருகையில் தென்னாட்டு நம்முடைய பெண்களைப் போலவே யுடைகள் உடுத்திருந்தபடியாலும், ராஜலக்ஷ்மியும் வீட்டிலில்லாமையாலும் ராஜலக்ஷ்மியே என எண்ணி தங்கள் தந்தையார் ரகஸியமாக அவளை அடக்கஞ்செய்து விட்டார்கள். கமலாபாய் இறந்தாளென்று கவலைப்படவேண்டாம். வேறு அழகான பெண்ணை உங்களுக்குத் தேடித்தருகிறேன் என்று கமலாபாயின் விபரங்களைக் கூறி முடித்தான். பிறகு ஜனங்கள் அனைவருக்கும் விஷயங்களை யெல்லாம் தெளிவு படுத்தித் தான் கொலாலம்பூருக்கென்று புறப்பட்டு மதுரை டிக்கட்டு வாங்கிச் செல்லுகையில், விருதுநகர் ஜங்ஷனில் இரண்டாவது வகுப்பு வண்டியிலே நவநாகரீகக் காமுகரது சம்பாஷணையைக் கேட்டு ஐயம் கொண்டு, உடனே கீழே யிறங்கிக் கலியாணபுரத்துக்கு டிக்கட் வாங்கி மெட்ராஸ் மெயில் வண்டியில் மாறி ஏறி மகம்மதியனாக உருமாறிக் கலியாண புரத்தில் வந்து இறங்கியது முதல் இறுதி வரை எல்லா விஷயங்களையும் விளக்கமாகப் பிரசங்கஞ் செய்தான்.

* * * *

எல்லாம் இனிதாக முடிந்தன. சிவகங்குவுக்குக் கொலை தண்டனையும் அவன் கூட்டாளிகளுக்கு தீவாந்திரசிட்சையும் விதிக்கப்பட்டது. கனகசபாபதியின் வீர தீரத்தை புகழ்ந்து கவர்ன்மெண்டார் ஓர் தங்கப்பதக்கம் பரிசளித்து துப்பறியும் இலாகாவில் சூப்பிரண்டெண்டெண்ட் பதவியும் அளித்தனர்

* * * *

நல்ல ஒரு சுப முகூர்த்தத்தில் கலியாணபுரத்தில் திருநாவுக்கரசுப் பிள்ளை வீட்டிலே, "**கனக**சபாபதிக்கும், ராஜ**லக்ஷ்மி**க்கும்" சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. ராஜலக்ஷ்மியின்கலியாணத்தை ஒட்டி மாணிக்கத்துக்கும், பார்வதிநாத பிள்ளையின் மகள் மரகதவல்லிக்கும், விவாஹம் செய்வித்தனர். இராஜலக்ஷ்மி கிரஹலக்ஷ்மியாக விளங்கினாள்

மகம்மதியன், பிச்சைக்காரன், பனையேறி, குடுகுடுப்பைக் காரன், மேளகாரன், ஜவான், சந்நியாசி, முதலிய வேஷங் களைத் தாங்கி கனகு நடித்த விபரங்களை யெல்லாம் ராஜம் அடிக்கடி அவன்பாற் கேட்டு அதிசயித்து இன்ப சாகரத்தில் திளைத்து மகிழ்ச்சி யுறுவது வழக்கம்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

ஆநந்த வெள்ளத் தழுந்துமொ ராருயிர் இருருக்கொண் (டு)
ஆநந்த வெள்ளத் திடைதிளைத் தாலொக்கும் அம்பலஞ்சேர்
ஆநந்த வெள்ளத் தறைகழ லோன்அருள் பெற்றவரின்
ஆநந்த வெள்ளம் வற்றாது முற்றாதிவ் வணிதிலமே!!!

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக:








வெளிவருகிறது! எதிர்பாருங்கள்!

**25-12-33-ல்**

# 'மங்கையின் இங்கிதம்'

அல்லது

## மர்மத்தின்மேல் மர்மம்

பெண்கள் முன்னேற்றத்தையும், சீர்திருத்தத்தையும் குறித்த

ஓர் இனிய துப்பறியும் தமிழ் நாவல்.

ஸ்ரீமான்: பூவை. இராஜகோட்டியப்பன்

அவர்கள் எழுதியது.



கிடைக்குமிடம்:-

கோஹினூர் பிரசுராலயம்,

விருதுநகர்.

'கனகலக்ஷ்மி' நாவலின் போட்டிப்பரிசு விபரங்களை

இந்நாவலில் வெளியிடப்படும்.